

# விவேக சிந்தாமணி

## மூலமும் உரையும்

[முதற் பாகம்]



ரிப்பன் பிரஸ், சென்னை] [விலை அணா 8

உ

குகன் துணை

# விவேக சிந்தாமணி

## மூலமும்,

ஜீவகசிந்தாமணி வசனம், அரிச்சந்திரபுராண வசனம்,
ஸ்ரீ அருணாசல புராண வசனம், ஸ்ரீ பகவத்கீதை வசனம்
முதலிய நூல்களின் ஆசிரியராகிய
மதுரை ஜில்லா செம்பூர் - வித்வான்
ஸ்ரீமத். வீ. ஆறுமுகம் சேர்வை அவர்களால்
இயற்றப்பெற்ற

## உரையும்.



[முதற் பாகம்]

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

[2-ம் பதிப்பு]
1921
விலை அணா 8

உ

குகன்துணை

# முகவுரை



"குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்
கெல்லை"க் குட்பட்ட தமிழ் நாட்டிலும், இன்னும் தமிழ்ப்
பயிலும் மற்றைய விடங்களிலும், தமிழ்க் கல்வி கற்கும்
மாணவர்க்கும் ஏனையோர்க்கும் பொதுவாகிய பல அரிய
நீதிகளைப் போதிக்கும் மேன்மைவாய்ந்த, 'விவேக சிந்தா
மணி' என்னும் இந்நூலானது பல வித்வான்களா லியற்றப்
பெற்ற தனிச் செய்யுட்களி னின்றும், நூல்களி னின்றும்
தேர்ந் தெடுக்கப்பெற்ற பல அரிய பாடல்களைத் தொகுத்
துப் பண்டைக் காலத் துள்ளோரில் அறிவுடைய ஒருவரால்
ஒரு புத்தகமாக இயற்றப்பெற்றது; ஆயினும், இதனை அவ்
வாறு தொகுத்து ஒரு நூலாக இயற்றினோர் இன்னவரென்
பது புலப்படவில்லை. இந் நூற்பெயரானது, 'விவேகத்தைத்
தருவதாகிய சிந்தாமணிபோன்ற நூல்' என்று பொருள்
படும். 'சிந்தாமணி' என்பது வேண்டியவற்றைத் தரும்
சிறப்புற்ற ஒருவகைத் தெய்வமணி; இம் மணி வேண்டிய
வற்றை யெல்லாந் தருவதுபோல, இந் நூலும் வேண்டிய
விவேகங்களை யெல்லாந் தரக்கூடியதா யிருத்தலின் இதற்கு
இப் பெயரிடப்பெற் றிருக்கின்றது.

இத்தகைய அருமைவாய்ந்த இந் நூலில் ஆதியில்
நூறு பாடல்களே யிருந்தன; இந் நூறு பாடல்களுள்ள

இதனை ஆதியில் தொகுத்தவரின் ஊர், பெயர், காலம் முதலி யன விளங்கா திருப்பினும், இது சிறுவரும் கற்றுணர்வ தற்குத் தகுதியான நூறு தெளிவான பாடல்களாகவும், நீதிகளை எளிதிற் போதிக்கக் கூடியதாகவு மிருந்ததால், நெடுங்காலமாக ஒவ்வொரு கிராமங்களிலும், நகரங்களிலு முள்ள சிறு பள்ளிக்கூடங்களில் உபாத்தியாயர்கள் ஏட்டுச் சுவடிகளில் இதைக் கைவிடாமல் எழுதிச் சிறுவர்க்குக் கொடுத்துப் போதித்து வந்தார்கள்; பண்டைக் காலத்தில் பள்ளிச் சிறுவர்கள் எழுத்துக்களைக் கூட்டி வாசிக்கத் தெரிந்தவுடன், அவர்களுக்கு ஆசிரியர்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், உலகநீதி, மூதுரை, அம்பிகைமாலை என்னும் நூல்களை முறையே கற்றுக்கொடுத்த பின்னர், இவ் விவேகசிந்தாமணியைக் கற்றுக்கொடுப்பது வழக்கம். இதனால், மாணவர்கள் இளமையிலேயே பல நீதிகளை யறிந் தவர்களாய் விளங்கிவந்தார்கள்.

ஆயினும், இக்காலத்தில் இது கற்பிக்கப்படும் முறை குறைவுற் றிருக்கின்றது. ஏனெனில், தமிழ் நூல்களின் உயர்வை எட்டுணையுங் கருதாமல், கடிதத்தைக் கருப்பாக் கிப் புத்தகமெனச் செய்து விற்பதைமட்டுங் கருதும் சில வியாபாரிகள், அநேக நூல்களைப் படிப்பதற்கு யோக்கிய மின்றிக் கெடுத்து எண்ணிறந்த வழுக்களுடன் அச்சிட்டு வெளிப்படுத்தும் தங்கள் வழக்கப்படியே, இந் நூலையும் எண்ணிலா வழுக்களுடன் சில வருடங்கட்கு முன்னர் வெளிப்படுத்தினர்கள், மற்றுஞ் சிலர், இதிலுள்ள பாடல்க

ளோடு, இந்நூற் பெயர்க்குப் பொருத்தமில்லாத அநேக வழுவான பாடல்களையும் மனதிற்குத் தோன்றியவாறே சேர்த்து இருநூறு பாடல்களாகவும், அத் தொகைக்கு மேற்பட்ட பாடல்களாகவும் இதனைப் பல புத்தகங்களாக வெளியிட்டனர்; இன்னுஞ் சிலர், இவ்வாறு தொகுத்த செய்யுட்களில் இருநூறு செய்யுட்களை நூறு நூறு பாடல்களமைந்த இரண்டு பாகங்களாகப் பிரித்து, அவ் விரண்டிற்கும் மனம் போனபடி செய்யுட்களுக்கு நேராகாத பொழிப்புரை யெழுதி வெளியிட் டிருக்கின்றனர். இவ்வாறு இந்நூல் தன் இயற்கை வடிவம் குன்றிப் பலவகை விகார வடிவங்களைக் கொண்டு வெளிப்படவே, முன்னர் இந்நூலை ஏடுகளிலெழுதிப் பயிற்றுவித்தும் பயின்றும் வந்தவர்களெல்லோரும், 'ஏட்டில் கஷ்டப்பட்டெழுதி வாசிப்பதிலும் அச்சுப் புத்தகங்களை வாங்கிப் படித்தல் நலமாம்' என்று கருதி, மேற்கூறியபடி பலவகையாக வெளிப்பட்ட புத்தகங்களை வாங்கி வாசிக்கத் தொடங்கினர். கிராமங்களில் ஆங்கில அரசாட்சியாருடைய நன் முயற்சியின்மேல் ஸ்தாபிக்கப் பெற்றுவரும் பாடசாலைகள் விருத்திக்கு வருவதற்கு முன்னிருந்த கிராமப் பள்ளிக்கூடங்களின் உபாத்தியாயர்களுள் பெரும்பான்மையோர் கல்வி நிரம்பப் பெறாதவ ராதலின், அவர்கள் மேற்கூறிய தப்புப் புத்தகங்களிலுள்ள வழுக்களை வழுக்களென்றறிந்து நீக்கும் சக்தியற்றவராய், அப் புத்தகங்களி லுள்ளபடியே வழுப் பாடல்களைத் தாங்களும் படித்தும், சிறுவர்க்குங் கற்பித்தும் வந்தார்கள்; இவ்வாறு கற்பிக்கத் தலைப்படவே, இந்நூலின் சுத்தமான பழைய ஏட்டுப்

பிரதிக ளெல்லாம் ஒழிந்து போய்விட்டன; அதனல் கிராமங்களி லெல்லாம் விவேகசிந்தாமணியின் வழுப் பாடல் களே பெரும்பான்மையும் பரவிவிட்டன; சிறுபான்மையான பள்ளிக்கூடங்களில், 'விவேகசிந்தாமணி நூறுபாடல்க ளுள் ளது' என்பதுபோய் அநேகம் பாடல்களுள்ளதாக ஏற்பட்டு விட்டபடியால், சிறுவர்கள் இளம்பருவத்தில் இத்தனை பாடல்களையும் கற்றுணர்வது கஷ்டமென்று உபாத்தியா யர்கள் இதனை எடுக்காமலே தள்ளிவிட்டார்கள்; பிற்பட்ட காலத்தில் அரசாட்சியாரால் ஏற்பட்டிருக்கும் கிராமப் பள் ளிக்கூடங்களின் ஆசிரியர்கள் மேற்கூறிய விவேகசிந்தா மணியின் அச்சுப் புத்தகங்களைத் திருத்தி மாணவர்க்குக் கற்பிக்கும் திறமை வாய்ந்தவர்க ளாயினும், அவர்களுட் பெரும்பான்மையோர் செய்யுட்களை விரும்பாத புதுக் கொள்கையை யனுசரித்து இந்நூலை விரும்பிச் சிறுவர்க் குக் கற்பிப்பதில்லை. பள்ளிக்கூடச் சிறுவரன்றி மற்றைய நாட்டுப்புற வாசிகளோ, மேற்கூறிய வழுப் புத்தகங்களி லுள்ளபடியே பாடல்களை மனப்பாடஞ் செய்துகொண்டு, ஆங்காங்கே மனதிற் கிசைந்தபடி தப்பான பொருள்களை யுங் கூறி மகிழ்ச்சியடைந்து வருகின்றனர். இவ்வகைக் காரணங்களாலேயே இந்நூற் கல்வி மேற்கூறியபடி வர வரக் குறைந்து வருகின்றது. முறையாகக் கற்ற புலவ ரிடத்தன்றி ஏனையோரிடத்து இவ் விவேகசிந்தாமணிப் பாடல்களுள் ஒன்றையேனும் தப்பின்றிக் கேட்ப தரிதாய் விட்டது. இவ் விவேகசிந்தாமணி பலருங் கொண்டாடத் தக்க சிறப்புற்ற நூலாயிருந்தும், இக் காலத்தில் இவ்வாறு

சீர்கேடடைந் திருப்பது மிகவும் விசனிக்கத் தக்கதா யிருக்கின்றது.

ஆதலின், இப்போது கல்வியுணர்வற்ற சில வியாபாரிக ளால் சீர்கே டடைந்திருக்கும் நூல்களைச் சீர்ப்படுத்தி நல்ல விதத்தில் அச்சிட்டு வெளிப்படுத்த முன்வந்திருக்கும் அறி வுடையோரிற் சிலர், இவ் விவேகசிந்தாமணியைத் திருத்தி விளக்கமான உரையுடன் வெளிப்படுத்தினல் கல்விகற்கும் மாணவர்க்கும் மற்றையர்க்கும் இது பொதுவான பல நீதி களைப் போதித்து மிக்க பயனைத் தருமென்று என்பாற் றெரிவித்தமையால், யான் அதற்கிசைந்து இப்போது இந் நூலில் சேர்க்கப்பட்டிருக்கும் அநேகம் பாடல்களுள் பண் டைக் காலத்தில் கிராமப் பள்ளிக்கூடச் சிறுவர்கள் பயின்று வந்த நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு பாகமாகவும், மற்றவைகளை நூறு நூறு செய்யுட்களாகப் பிரித்துச் சில பாகங்களாகவும் வெளிப்படுத்தினல், முந்தின வழக்கப் படியே முதற்பாகத்தைப் பள்ளிக்கூடச் சிறுவர்களும் மற் றையரும் கற்றுணர்வதோடு, மற்றப் பாகங்களையும் முறையே விரும்பிக் கற்றுக் களிப்படைவார்களென்று கருதிப் பண் டைக் காலத்தில் வழங்கிவந்த நூறு செய்யுட்களையும் தேர்ந் தெடுத்து, அவற்றுள்ளும் இக் காலத்தில் அசப்பியமெனக் கருதப்படும் சிற்றின்பக் கருத்துக்க ளடங்கிய அகப்பொருட் டுறைச் செய்யுட்களையும், பொருட் பொருத்தமில்லாத செய்யுட்களையும் தள்ளி, மற்றவைகளைக் கூடியவரை பொருட் பொருத்தத்திற் கியையுமாறு திருத்திக் குறைந்த

பாடல்களுக்குப் பிரதியாக வேறு சில பாடல்களையுஞ் சேர்த்து, எல்லாச் செய்யுட்களுக்கும் விளக்கமான உரையெழுதி, ஒவ்வொரு செய்யுட்களிலும் அடங்கிய விஷயங்களை அந்த அந்தச் செய்யுட்களுக்குமேல் விளக்கிக்காட்டி, இப்போது இதனை முதற்பாகமாக வெளிப்படுத்தி யிருக்கின்றனன்.

இதற்கு எழுதப்பெற்றிருக்கும் உரையானது பெரும்பாலும் பள்ளிக்கூடச் சிறுவர்க்கே உபயோகப்படக் கூடியதா யிருத்தலின், பதவுரையில் விளக்கமாயிருக்கும் பதங்களை மீண்டும் எடுத்துக்கொண்டு இலக்கணக்குறிப்பு முதலியவற்றை மிகவும் விரிவாகக்காட்டி விசேடவுரையை அதிகப்படுத்தி யெழுதினுல் அவ்வுரை அவர்க்கு விளங்காமற் போவதோடு, தெளிவாயிருக்கும் செய்யுட்கருத்தும் அவர் மனத்திற் றங்காமல் மயக்கமுண்டா மெனக்கருதி, விசேடவுரையில் இலக்கணக் குறிப்பு முதலியவற்றை வீணே வளர்த்தெழுதாமல் அவசியமான விஷயங்கள்மட்டும் துலக்கப்பட்டுள்ளன; இன்னும், சிறுவர்க்குச் செய்யுட் கருத்துக்கள் செவ்வனே விளங்குதற் பொருட்டு, அவசியமான விஷயங்கள் பதவுரையின் இடையிடையே வருவித் துரைக்கப்பட்டுள்ளன; அன்றியும், செய்யுட்களின் வகைகளையும் உணர்ந்துகொள்ளற் பொருட்டு, எல்லாச் செய்யுட்களுக்கும் மேலே அந்த அந்தச் செய்யுட்களின் வகைகளும் துலக்கப்பட் டுள்ளன; இதிலுள்ள பாடல்களுள் அநேகம் செய்யுட்கள் முழுதும் மாறுபா டடைந் திருந்தமையால், அவற்றை மிக்க பிரயாசையுடன் திருத்தி இயற்கை வடி

வம் பெறும்படி செய்தேன்; அவ்வாறு செய்தவற்றுள், ஜீவக சிந்தாமணியி லிருந்து எடுக்கப்பட்டு, இவ் விவேக சிந்தாமணியில் மாறுபா டடைந்திருந்த ஒரு செய்யுளை இதனடியில் உதாரணமாகக் காட்டுகிறேன்:—

ஜீவகசிந்தாமணிச் செய்யுள்.

"நட்பிடைக் குய்யம் வைத்தான் பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான்
கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கி னானும்
அட்டுயி ருடலந் தின்றா னமைச்சனா யரசு கொன்றான்
குட்டநோய் நரகந் தம்முட் குளிப்பவ ரிவர்கள் கண்டாய்."

விவேக சிந்தாமணியில் இச்செய்யுள் பிழைசெறிந்து
மாறுபா டடைந்திருந்த விதம்.

"நட்பிடைக் குய்யம் வைத்தார் பிறர்மனை நலத்தைச் செய்வார்
கட்புடைக் காமத் தீயாற் கன்னியை விலக்கி னோரும்
அட்டட னஞ்ச கின்றோ ராயுளுங் கொண்டு நின்று
குட்டநோய் நரகில் வீழ்ந்து குளிப்பவ ரிவர்கள் கண்டாய்."

இச் சீவகசிந்தாமணிச் செய்யுள் இவ்வாறு சிறிதும் பொருட் பொருத்தமின்றி மாறுபா டடைந்திருக்கும் விதத்தை அறிவுடையோர் உற்றுநோக்கினால், இந்நூலை வியாபாரிகள் கெடுத்திருக்கும் கேடும், இதனைத் திருத்தும் விஷயத்தில் நான் எடுத்துக்கொண்ட பிரயாசையும் நன்கு விளங்கும். இன்னும், எதுகை மோனை யின்றியும், சீர்கள் குறைவாகவும், பொருட் பொருத்த மின்றியு மிருந்த செய்யுட்கள் அநேகம்; அவற்றையும் இவ்வாறே பிரயாசையுடன் திருத்திச் சேர்த்தேன்.

இவ்விதம் இந்நூல் மிகத் திருத்தமடைந்து தெளி
வான உரையுடன் வெளிப்பட்டிருத்தலின், இனி மாண
வரும் மற்றையரும் சந்தேகமின்றிச் செய்யுட்களை அருத்
தத்துடன் படித்துணர்ந்து, பல நீதிகளைத் தெரிந்துகொள்வ
தற்கு இந்நூல் மிகவும் உபயோகமா யிருக்கும். இனி மற்
றப் பாகங்களும் இவ்விதமே விரைவில் வெளிவரும்.

ஆதலின், மிக்க திருத்தத்துடன் வெளிவரும் இந்
நூலைப் பள்ளிக்கூடங்களி லுள்ள ஆசிரியர்கள், தங்கள்
தங்கள் மாணவர்க்குப் பாடமாக வைத்துப் போதித்தும்,
மற்றையரும் இதனை வாங்கி வாசித்தும், எனக்கும் இந்நூலை
அச்சிட் டுதவினோர்க்கும் உற்சாகத்தை யுண்டாக்குமாறு
விரும்புகின்றேன்.

"முற்று முணர்ந்தவ ரில்லை" ஆதலின், இந்நூ லுரை
யில் என் புத்திக்கெட்டாமல் சிற்சில பிழைகளும் ஏற்பட்
டிருத்தல் கூடும்; அவ்வாறு காணப்படின், கசடறக் கற்றுக்
கற்றதற் கேற்ப நற்குணமும் பெற்ற அறிவுடையோர் அப்
பிழைகளைத் தெரிவிப்பின், வந்தனத்துடன் ஏற்று அடுத்த
பதிப்பில் திருத்திக்கொள்வேன்.

இங்ஙனம்:

☞ வீ. ஆறுமுகன்.

உ

கடவுள் துணை

# விவேகசிந்தாமணி

## மூலமும் உரையும்.

### கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

அல்லல்போம் வல்வினைபோ மன்னைவயிற் றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்துண் மேவுங்
கணபதியைக் கைதொழுதக் கால்.

(பதவுரை) நல்லகுணம் - நற்குணங்கள், அதிகம் ஆம் - அதிகமாகப் பொருந்தும்; அருணை-அருணாசலமென்னுந் திருப்பதியிலே அமைந்த (கோவிலின்கணுள்ள), கோபுரத்துள்-கோபுரத்தடியிலே, மேவும் - எழுந்தருளியிருக்கின்ற, கணபதியை - விநாயகக்கடவுளை, கைக தொழுதக்கால் - கைகளால் வணங்கினால், அல்லல்போம் - (உலகத்தில் வரும்) பலதுன்பங்கள் நீங்கும்; வல்வினைபோம் - வலிமையாகிய (சஞ்சித) கருமம் ஒழியும்; அன்னை வயிற்றில் - பல தாய்களின் வயிற்றிலே (கருவாய்த் தங்கி), பிறந்த-ஜனன மெடுத்ததற்குக் காரணமான, தொல்லை - பிராரப்த கருமமாகிய தொந்தரை, போம்-நீங்கலும்; போகா - நீங்காத, துயரம் - (இப்பிறப்பில் தேடப்பட்ட ஆகாமிய வினைகளாகிய) துயரங்களும், போம்-நீங்கும்.

(விசேஷவுரை) தொழுதக்கால் - தெரிநிலை வினையெச்சம்
துன்பங்கள்-சம்சார துன்பங்கள். சஞ்சித கருமம்-சென்ற ஜனனங்க
ளிற் செய்யப்பட்டுப் பலனனுபவிக்காமல் நின்ற கருமம். பிராரப்தம்
சென்ற ஜனனத்திற் செய்யப்பட்டு வர்த்தமான ஜனனத்திற் கேது
வாயிருப்பது. ஆகாமிய வினை - வர்த்தமான ஜனனத்திற் செய்யப்
பட்டு மறுஜனனத்திற் கேதுவாயிருப்பது. பிறந்த தொல்லை என்பதி
லுள்ள பிறந்த என்னும் பெயரெச்சம், 'நோய்தீர்ந்த மருந்து' என்
பதிற்போலக் காரியப்பொருளது.

---

## நூல்

### பயனற்றவை.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆபத்துக் குதவாப் பிள்ளை யரும்பசிக் குதவா வன்னந்
தாபத்தைத் தீராத் தண்ணீர் தரித்திர மறியாப் பெண்டிர்
கோபத்தை யடக்காவேந்தன் குருமொழிகொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம் பயனில்லை யேழுந் தானே.

(ப-ரை.) ஆபத்துக்கு-மிகுதுன்பம் வந்த காலத்தில், உதவா
உதவிசெய்து அத்துன்பத்தை நீக்காத, பிள்ளை - புத்திரனும், அரும்
பசிக்கு-சகித்தற்கரிய பசிக்கு, உதவா-உபயோகப்படாத, அன்னம்
சோறும், தாபத்தை - நீர்வேட்கையை, தீரா - தணித்தற் குபயோக
மில்லாத, தண்ணீர் - குளிர்ந்த நீரும், தரித்திரம் அறியா - (கணவனு
டைய) தரித்திர நிலைமையை யறிந்து (அதற்குத் தக்கவாறு செல
செய்து) குடும்பத்தை நடத்தாத, பெண்டிர்-மனைவியும், கோபத்தை
வெகுளியை, அடக்கா-அடக்காத, வேந்தன்-அரசனும், குருமொழி
ஆசாரியருடைய உபதேச வாக்கியத்தை, கொள்ளா - (உயர்வாக
மனத்துட்கொள்ளாத, சீடன் - மாணாக்கனும், பாபத்தை - (செய்த

பாவத்தை, தீரா - அகற்றாத, தீர்த்தம் - தீர்த்தமும், ஏழும் - (ஆகிய) இவ்வேழும், பயனில்லை - (உலகத்தில்) பிரயோசனமில்லை.

(வி-ரை.) ஆபத்துக்கு - உருபு மயக்கம். எண்ணும்மைகள் தொக்கன. தான், ஏ - அசைகள். "திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே," என்னும் (நன்-பொ.கூஎஅ) சூத்திரவிதிப்படி உயர்திணையும் அஃறிணையுங் கலந்து இழிவினால் அஃறிணை முடிபை யேற்றன: 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா', என்பதிற்போல; பிரயோசனப் படாதிருத்தல் இங்கே இழிவு. (க)

## புல்லர் குணம்.

### இதுவுமது.

குக்கலைப் பிடித்து நாவிக் கூட்டினி லடைத்து வைத்து
மிக்கதோர் மஞ்சட் பூசி மிகுமணஞ் செய்தா லுந்தான்
அக்குலம் வேற தாமோ வதனிடம் புனுகுண் டாமோ
குக்கலே குக்க லல்லாற் குலந்தனிற் பெரிய தாமோ.

(ப-ரை.) குக்கலை-நாயை, பிடித்து-கைப்பற்றி, நாவிக்கூட்டினில் - புனுகுபூனை வசிக்குங் கூட்டில்; அடைத்துவைத்து-(விட்டுக்) கதவை மூடிவைத்து, மிக்கது-மேன்மை பொருந்தியதும், ஓர்-ஒப்பற்றதும், (ஆகிய) மஞ்சள்- மஞ்சளை, பூசி - (அதற்கு அரைத்துப்) பூசி, மிகு மணம் - மிக்க வாசனையை, செய்தாலும்-உண்டாக்கினாலும், அக்குலம் - (அதனுடைய) அந்நாய்ச் சாதி, வேறதாமோ - வேறாகிப் (புனுகு பூனை) யாமோ; அதனிடம் - (அவ்விழிதன்மையுடைய) நாயினிடம், புனுகு உண்டாமோ-(புனுகு பூனையினிடத்தே யுண்டாகும்) புனுகு உற்பத்தியாகுமோ; குக்கல் குக்கலே அல்லால்-(என்ன செய்தாலும்) அந்நாய் நாயேயல்லாமல், குலந்தனில்-சாதியில், பெரியது ஆமோ - உயர்வுடைய தாகுமோ? (இல்லை).

(வி-ரை.) கூட்டினில்-இதிலுள்ள இன் சாரியை. செய்தாலுந் தான் என்பதில் தான் அசை. ஒகாரங்கள் எதிர்மறை. குக்கலே குக்க லல்லால் என்பதைக் குக்கல் குக்கலே யல்லால் என மாற்றுக. இவ்வு வமையின் குறிப்பால், என்ன செய்தாலும் நாய்க்குலம் வேறாகாதது போலப் புல்லர் எவ்வகையாலும் சீர்ப்படாரென்பது தோற்றிற்று. இது பிறிதுமொழிதலணி; அஃதாவது: உபமானங் கூறியமாத்தி ரத்தால் உபமேயம் பெறவைத்தல். (உ)

## காரியமுடிவில் நன்றி பாராட்டாதோர்.

### இதுவுமது.

பிள்ளைதான்வயதின்மூத்தாற்பிதாவின்சொற்புத்திகேளான்
கள்ளினற் குழலாள் மூத்தாற் கணவனைக் கருதிப் பாராள்
தெள்ளுற வித்தை கற்றாற் சீடனுங் குருவைத் தேடான்
உள்ளநோய் பிணிக டீர்ந்தா லுலகர்பண் டிதரைத் தேடார்.

(ப-ரை.) பிள்ளை-புத்திரன், வயதில் மூத்தால்-வயதிலே மிகுந் தால், பிதாவின் - தந்தையினுடைய, சொல் புத்தி - சொல்லாகிய புத்திகளை, கேளான்-கேட்டு நடக்கமாட்டான்; கள்ளின் - (சூட்டிய மலரின்றொழுகும்) தேனையுடைய, நல் - நல்ல, குழலாள் - கூந்தலை யுடைய மனைவி, மூத்தால் - மூப்புடையவளா யிருந்தால், கணவனை - தன் நாயகனை, கருதிப் பாராள் - (உயர்வாக) எண்ணி அவனுக்குப் பணிவிடை செய்ய நாடமாட்டாள்; தெள்ளுற - தெளிவுபொருந்த, வித்தை கற்றால்-கல்விகளைக் கற்றுக்கொண்டால், சீடனும் - மாணாக் கனும், குருவை - ஆசிரியனை, தேடான் - தேடி வணங்கமாட்டான்; உள்ள-தமக்குள், நோய் - (வியாதியால் வரும்) துன்பங்களும், பிணி கள் - அவ்வியாதிகளும், தீர்ந்தால் - (பண்டிதர் கொடுத்த மருந்தால்) தீர்ந்து விட்டால், உலகர் - இவ்வுலகத்திலுள்ள மனிதர்கள், பண்டி தரை - அம்மருத்துவரை, தேடார் - தேடமாட்டார்கள்.

(வி-ரை.) பிள்ளைதான் என்பதில், தான்-அசை. கள்ளின் என்
பதில், இன் - சாரியை. 'தெள்ளற', என்றும் பாடம். (ரு)

## அன்பற்ற விருந்தின் தன்மை.

இதுவுமது.

ஒப்புடன் முகம லர்ந்தே யுபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலு முண்பதே யமுத மாகும்
முப்பழ மொடுபா லன்னம் முகங்கடுத் திடுவ ராயின்
கப்பிய பசியி னோடு கடும்பசி யாகுந் தானே.

(ப-ரை.) (உலகிலுள்ளோர்), ஒப்புடன் -(மனமொத்த அன்பு
நிறைந்த) சம்மதத்துடனே, முக மலர்ந்து - (சந்தோஷத்தால்) முக
மலர்ச்சி யடைந்து, உபசரித்து -சோடசோபசாரங்களும் செய்து,
உண்மை பேசி-மெய்யான வார்த்தைகளைப் பேசி, உப்பு இல்லா-உப்
பில்லாத, கூழ் இட்டாலும் - கூழை வார்த்தாலும், உண்பதே-அதனை
உட்கொள்ளுவதே, அமுதம் ஆகும் - அமுதம்போல இனிமையைத்
தருவதாகும்; முப் பழமொடு - முப்பழங்களுடனே, பால்அன்னம் -
பாற்சோற்றை, முகம்கடுத்து - (அன்பில்லாமல்) முகம் சுளித்து,
இடுவாராயின்-(விருந்தாக) இடுவார்களேயானால், (அச்சோறு சுவை
யுடையதாயினும் இனிமை செய்யா ததலால்), கப்பிய-(முன்னே)
வயிற்றை மூடிக்கொண்டு மிகுந்திருந்த, பசியினோடு - பசியோடு,
கடும் பசி-(முன்னுள்ள பசியினும்) கொடிய பசி, ஆகும்-உண்டாகும்.

(வி-ரை.) சோடசோபசாரங்களாவன:—தவிசளித்தல், கை
கழுநீர்தால், கால்கழுநீர்தால், முக்குடிநீர்தால், நீராட்டல், ஆடை
சாத்தல், முப்புரிநூல்தால், சேய்வை பூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசி
தூவல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுத
மேந்தல், அடைகாய்தால், மந்திரமலரா னருச்சித்தல்—ஆகியவைக
ளாம். முப்பழங்களாவன:—மா, பலா, வாழை—ஆகியவைகளாம். ()

## புல்லர் குணம்.

### இதுவுமது.

கதிர்பெறு செந்நெல் வாடக் கார்க்குலங் கண்டுஞ் சென்று
கொதிதிரை கடலிற்பெய்யுங் கொள்கைபோற் குவலயத்தே
மதிதனம் படைத்த பேர்கள் வாடினோர் முகத்தைப் பாரார்
நிதிமிகப் படைத்தோர்க் கீவர் நிலையிலார்க் கீய மாட்டார்.

(ப-ரை.) கதிர்பெறு-(குரல்வளைக்) கதிரைப்பெற்ற, செந்நெல்-செம்மையாகிய நெற்பயிர், வாட - (நீரின்றி) வாட்டத்தையடைய, கார்குலம் - மேகக்கூட்டம், கண்டும்-(அவ்வாட்டத்தைப்) பார்த்தும், (அதனிடத்தே மழையைப் பொழியாது), சென்று - (அப்பயிரை விட்டுச்) சென்று, கொதி திரை - பொங்குகின்ற அலைகளையுடைய, கடலில் - சமுத்திரத்தில், பெய்யும் - (பிரயோசனமின்றிப்) பெய்கின்ற, கொள்கைபோல் - விதம்போல, குவலயத்தே - இப்பூமியில், மதி - நன்கு மதிக்கப்படுகின்ற, தனம் படைத்த பேர்கள் - திரவியத்தைப்பெற்றவர்கள், வாடினோர் - (பசியால்) வாட்டமடைந்தவர்களுடைய, முகத்தைப்பாரார் - முகவாட்டத்தைக்கண்டு பொருள் கொடுத்து ஆதரிக்கமாட்டார்; நிலையிலார்க்கு - (தரித்திரத்தால்) நிலையில்லாமல் திரிந்து அலைவார்க்கும், ஈயமாட்டார் - (திரவியம் கொடுத்து) உதவமாட்டார்கள்; நிதி மிகப்படைத்தோர்க்கு-செல்வம் மிகுதியாகப் பெற்றவர்களுக்கு, (அவர்கள் வேண்டாதிருப்பினும் ஸ்தோத்திரம் முதலியன செய்வதை விரும்பி), ஈவர் - திரவியத்தைக் கொடுப்பார்கள்.

(வி-ரை.) பெறு செந்நெல் - வினைத்தொகை. தனம் படைத்த பேர்கள் என்னும் எழுவாய்: பாரார், ஈவர், ஈயமாட்டார் என்னும் மூன்று பயனிலைகளைக் கொண்டு முடிந்தது. (௫)

## பொருட்பெருமை.

### இதுவுமது.

ஆலிலை பூவுங் காயு மளிதரு பழமு முண்டேல்
சாலவே பட்சி யெல்லாந் தங்குடி யென்றே வாழும்
வாலிபர் வந்து தேடி வந்திப்பார் கோடி கோடி
ஆலிலை யாதி போனு லங்குவந் திருப்பா ருண்டோ.

(ப-ரை.) ஆல்-ஓர் ஆலவிருக்ஷத்தினிடத்து, இலை-இலைகளும், பூவும் - மலர்களும், காயும்-காய்களும், அளிதரு- கனிந்த, பழமும் - பழங்களும், உண்டேல்-உண்டாயின், (அதில்வந்து) பட்சி எல்லாம்- பறவைகளெல்லாம், சால - மிகுதியாக, தம் குடி என்று-தம்முடைய இருப்பிடமென்று (கருதி), வாழும் - வாழ்ந்திருக்கும்; கோடி கோடி வாலிபர்-பலகோடி இளைஞர், தேடி வந்து-(நிழலின் பொருட்டு அதனைத் தேடிவந்து, வந்திப்பார் - புகழ்வார்கள்; ஆல் - அவ்வால மரத்தில், இலையாதி போனுல் - இலை முதலியன இல்லாமல் நீங்கினுல், அங்கு வந்து - அம்மரத்தினிடத்தே வந்து, இருப்பார் உண்டோ - தங்குவாருண்டோ? (இல்லை).

(வி-ரை) ஆலுக்குப் பூவில்லையெனினும், பிஞ்சரும்புதலை மலராகக் கொள்க. சாதியொருமைபற்றி இலைமுதலியன ஒருமையாற் கூறப்பட்டன. வந்து தேடி என்பதைத் தேடிவந்து என மாற்றுக. வாலிபர் என்பதைக் கோடிகோடி என்பதன்பினுக்கி, கோடிகோடி வாலிபர் எனக் கூட்டுக. இச்செய்யுளிலுள்ள உபமானமானது, ஒருவனிடம் பொருளிருக்கும்போது அவனைப் பலர் போற்றுவரென்பதும், பொருளற்றவிடத்து நீங்குவ ரென்பதுமாகிய உபமேயத்தைக் குறிப்பால் விளக்கிற்று; இது பிறிதுமொழிதலணி. (௬)

## புல்லர்குணம்.

இதுவுமது.

பொருட்பாலை விரும்புவார்கள் காமப்பா லிடைமூழ்கிப்
புரள்வர் கீர்த்தி
யருட்பாலா மறப்பாலைக் கனவிலுமே விரும்பார்க
ளறிவொன் றில்லார்
குருப்பாலக் கடவுளர்பால் வேதியர்பாற் புரவலர்பாற்
கொடுக்கக் கோரார்
செருப்பாலே யடிப்பவர்க்கு விருப்பாலே கோடிசெம்பொன்
சேவித் தீவார்.

(ப-ரை.) அறிவு ஒன்று இல்லார்-ஞானம் சிறிதுமில்லாத மூடர்கள், பொருட்பாலை-(நிலையற்ற) உலகச் செல்வத்தின் தன்மையை, விரும்புவார்கள் - வேண்டுவார்கள்; (அங்ஙனம் விரும்பி அப்பொருளைத் தீவினைவிட்டு ஈட்டிடாது கெட்டவழியிற் றேடி அச்செல்வச் செருக்கால்), காமப்பாலிடை-பெண்ணாசைப் பகுதியென்னுங் கடலிடையே, மூழ்கி-அமிழ்ந்து, புரள்வர்-அதிற்கிடந்து புரளுவார்கள்; கீர்த்தி - புகழையும், அருட்பால் ஆம் - அருளின்தன்மை நிறைந்த, அறப்பாலை - தருமத்தினியல்பை, கனவிலும் - சொப்பனத்திலும், விரும்பார்கள்-வேண்டமாட்டார்கள்; குருப்பால்-குருவினிடத்தேனும், அக் கடவுளர்பால்-(அத் தருமத்தை வகுத்த)கடவுளரிடத்தேனும், வேதியர்பால் - அந்தணரிடத்தேனும், புரவலர்பால்-(அறத்தை நடத்தும்) அரசரிடத்தேனும், கொடுக்க - (அவ்வாறு ஈட்டிய தம் பொருளை) ஈய, கோரார் - விரும்பார்கள்; செருப்பாலே அடிப்பவர்க்கு-தங்களைப் பிடித்துக்கட்டி) பாதரக்ஷையாலே அடித்துத் துன்பப்படுத்தும் துஷ்டர் திருடர் முதலியோர்க்கு, விருப்பாலே - மனவிருப்போடு, சேவித்து-வணங்கி, கோடி செம்பொன்-கோடிக்கணக்கான தங்கள் செம்பொன்னாகிய திரவியத்தை, ஈவார் - கொடுப்பார்கள்.

(வி-ரை.) சூழ்கி என்பதற்கேற்பக் கடல் வருவிக்கப்பட்டது. (எ)

அற்பர் தன்மை.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்டா மரையி னுடன்பிறந்துந் தண்டே னுகரா மண்டூகம்
வண்டோ கானத் திடையிருந்தும் வந்தே கமல மதுவுண்ணும்
பண்டே பழகி யிருந்தாலு மறியார் புல்லர் நல்லோரைக்
கண்டே களித்தங் குறவாடித் தம்மிற் கலப்பார் கற்றோரே.

(ப-ரை.) மண்டூகம் - தவளையானது, தண்-குளிர்ந்த, தாமரையினுடன் - தாமரையுடனே, பிறந்தும் - நீரிற்பிறந்தும், தண் தேன் - (அத்தாமரையிலுள்ள) குளிர்ந்த தேனை, நுகரா-உண்ணாது; வண்டோ-சுரும்போ, கானத்திடை-(தூரத்திலுள்ள) காட்டினிடையே, இருந்தும் - தங்கியிருந்தும், வந்து - (தடாகத்தினிடையே) வந்துசேர்ந்து, கமலம் - அத் தாமரைமலரிலுள்ள, மது-தேனை, உண்ணும் - உண்டு சுவையறிந்து களிக்கும்; (இவைபோல), புல்லர் - (அறிவற்ற) அற்பர்கள், பண்டே - முந்தியே, பழகியிருந்தாலும் (நல்லவரோடு) பழக்கம் செய்திருந்தாலும், நல்லோரை-நற்குணமுடையோர் தன்மையை, அறியார்-அறியமாட்டார்கள்; கற்றோர்-நற்கல்வி பயின்ற அறிவுடையோரோ, (நெடுநாட்பழக்க மில்லாவிடினும்), (நல்லோரைக்) கண்டு-(நற்குணமுடையோரைப்) பார்த்து, களித்து - (அங்ஙனம் பார்த்த மாத்திரத்திலேயே) சந்தோஷித்து, அங்கு-(அவ்வாறு கண்ட) அவ்விடத்தே, உறவாடி - (அவரோடு) சிநேகஞ்செய்து, (நல்லோர்) தம்மில் - அந் நல்லோரிடத்தில், கலப்பார் - கலந்துகொள்வர்.

(வி-ரை.) கமலம்-பொருளாகுபெயர். இச்செய்யுள் எடுத்துக்காட் டுவமையணியாக அமைந்தது; எடுத்துக்காட் டுவமையாவது: உபமானத்தையும், உபமேயத்தையும் தனித்தனி வாக்கியங்களாக நிறுத்தி, இடையில் உவமவுருபு கொடாமற் கூறுவது. (அ)

துஷ்டருக்குப் புத்திகூறினால் துன்பம் வருமென்பது.

கலிவிருத்தம்.

வானர மழைதனி னனையத் தூக்கணந்
தாமொரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும்
ஞானமுங் கல்வியு நவின்ற நூல்களும்
ஈனருக் குரைத்திடி லிடர தாகுமே.

(ப-ரை.) வானரம்-ஒரு குரங்கு, (ஒரு மரத்திலிருந்து), மழைதனில்-மழையில், நனைய - (கூடின்றி) நனைய, (அதைக் கண்டு அம்மரத்திலே கூடு கட்டிக்கொண்டு நனையாமல் சௌக்கியமா யிருக்கும் புத்தி சாதுரியமுள்ள) தூக்கணம்-வான்குருவி, (அதற்கிரங்கி), ஒரு நெறிசொல்ல-ஒரு நல்ல வழியைச்சொல்ல, (அஃதாவது: இம்மழையில் நனையாதிருத்தற்கு என்னைப்போல ஒரு கூட்டைக் கட்டிக் கொள்வாயாக என்று ஓர் உபாயத்தைத் தெரிவிக்க), (அவ் வறிவில்லாப் பிராணியாகிய குரங்கு அப்புத்தியைக் கற்றுக்கொள்ளாமல் கோபங் கொண்டு), தாண்டி-தானிருந்த இடத்தினின்றும் பாய்ந்து, பிய்த்திடும் - அற்பப்பிராணியாகிய நீ எனக்குப் புத்தி சொல்லுதல் தகுமாவென்று அத்தூக்கணங்குருவி அழகாகக் கட்டிவைத்திருந்த கூட்டைப்) பிய்த்தெறியும்; (அதுபோல), ஞானமும்-நல்ல அறிவையும், கல்வியும்-வித்தையையும், நவின்ற-(உயர்ந்தவையென்று பெரியோரால்) சொல்லப்பட்ட, நூல்களும் - சாஸ்திரங்களையும், ஈனருக்கு-இழிதன்மை யுடையோருக்கு, உரைத்திடில் - (அறிவுடையோர்) கூறினால், இடர் - துன்பம், ஆகும் - உண்டாகும்.

(வி-ரை.) தூக்கணந்தான்-இதில் தான் அசை. இடரது என்பதில் அது சொல்லுருபு. இச்செய்யுளும் எடுத்துக்காட்டுவமையணி. ஒருமரத்தில் அழகிய கூடு கட்டிக்கொண்டு சுகமாக வாழ்ந்த தூக்கணங்குருவி, மழையில் நனைந்த வானரத்தைப் பார்த்து, "நீயும் என்னைப்போல ஓர் இருப்பிடத்தைத் தேடிக்கொண்டு சௌக்கியமா யிரு

க்கலாகாதா?" என்று கூற, அக்குரங்கு கோபங்கொண்டு அக்குருவியின் கூட்டைப் பிய்த்தெறிந்து விட்டதாக வரும் இக்கதை பஞ்சதந்திரத்தில் கூறப்பட்டுள்ளது. இது கட்டுக்கதையாயினும் படிப்போர்க்கு நல்லறிவைப் புகட்டத்தக்கது. தூக்கணமென்பது மிகவும் மதிநுட்பமுடைய ஒருவகைக் குருவி; தனக்கு அழகிய இருப்பிடம் தேடிக்கொள்வதில் இது மிகவும் சிறந்தது. இது பனையோலை முதலியவற்றை மெல்லிய நார்களாகக் கிழித்து மூக்கினாற்பின்னி மிகவும் விநோதமான கூட்டைக் கட்டிக்கொள்ளும். இப்பின்னலைப்போன்ற பின்னலை எத்தகைய பின்னல் வேலைக்காரர்களும் செய்யமாட்டார்கள். இன்னும், இஃது அக்கூட்டில் பல அறைகளையும் ஏற்படுத்தி வெளிச்சத்தின் பொருட்டு மின்மினிப் பூச்சியையும் எடுத்துக்கொண்டுபோய் உள்ளே வைத்துக்கொள்ளும். இதுபற்றியே, 'சில சிறு பிராணிகள் செய்யுந் தொழில்களை மனிதர் செய்யமாட்டார்கள்' என்னுங் கருத்தமைத்துச் சொன்ன, "வான்குருவியின்கூடு" என்னுங் கவியில் ஒளவை இதனை முன்வைத்துக்கூறி யிருக்கின்றனள். இதன் சிறப்புப்பற்றியே இதற்கு, 'வான்குருவி' என்னும் பெயரும் வழங்கலாயிற்று; வான் குருவி-சிறந்த குருவி. (க)

## துணையின் உயர்வும் தாழ்வும்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கற்பகத் தருவைச் சார்ந்த காகமு மமுத முண்ணும்
விற்பன விவேக முள்ள வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வார்
இப்புவி தன்னிற் கிள்ளை யிலவுகாத் ததனைப் போல
அற்பரைச் சேர்ந்தோர் வாழ்வ தரிதரி தாகு மம்மா.

(ப-ரை.) கற்பகத் தருவை - தெய்வலோகத்திலே இந்திரனுக்குரிமையாயுள்ள) கற்பக விருக்ஷத்தை, சார்ந்த - சேர்ந்திருந்த, காகமும் - (புல்லிய தன்மையுடைய) காகமும், அமுதம் உண்ணும் - அந்

குள்ள தேவாமிர்தத்தை உண்ணும்; (அதுபோல), இப்புவிதன்னில் - இப்பூமியில், விற்பன விவேகம் உள்ள - கல்வியறிவ நிறைந்த, வேந்தரை - அரசரை, சேர்ந்தோர் - அடைந்தவர், (அற்பரா யிருந்தாலும்), வாழ்வார்-(உயர்ந்த) வாழ்வைப் பெறுவார்; கிள்ளை - கிளியானது, இலவு - இலவமரத்தை, காத்ததனைப்போல - (அதிலுள்ள காய்கள் பழுக்கும், பின்னர் உண்ணலாம் என்று) காத்திருந்து (அப்பழங்கள் வெடித்துப் பஞ்சாய்ப் பறந்தவுடன் ஒருபயனையு மடையாமற்போன) செய்கையைப்போல, அற்பரை - (ஈகைமுதலிய நற்குணங்களில்லாத) புல்லரை, சேர்ந்தோர் - அடுத்தோர், வாழ்வது - வாழ்வடைவது, அரிது அரிது ஆகும்-மிகவும் அருமையாகும்.

(வி-ரை.) காகமும் - உம்மை இழிவுசிறப்பு. மிகுதி குறித்து அரிது அரிது என்னும் இரண்டு பதங்கள் ஒருபொருட் பன்மொழியாக அடுக்கிவந்தன. அம்மா-ஈற்றசை; வியப்பிடைச் சொல்லுமாம். கற்பகம் என்பது: அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்னும் ஐந்து தேவ விருக்ஷங்களுள் ஒன்று; இது வேண்டுவோர் வேண்டுவனவற்றை யெல்லாம் தருவது. இலவமரத்தின் காய்கள் பழமாகி வெடித்தவுடன் உள்ளே பஞ்சையன்றி உண்ணத்தகும் வஸ்து வெறொன்றுமிராது. (௧௦)

## வேசைப் பெண்களை நம்பலாகாதெனல்.

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆல கால விடத்தையு நம்பலா
மாற்றை யும்பெருங் காற்றையு நம்பலாங்
கோல மாமத யானையை நம்பலாங்
கொல்லும் வேங்கைப் புலியையு நம்பலாங்
கால னார்விடு தூதரை நம்பலாங்
கள்ளர் வேடர் மறவரை நம்பலாஞ்

சேலை கட்டிய மாதரை நம்பினாற்
றெருவி னின்று தியங்கித் தவிப்பரே.

(ப-ரை.) (உலகத்திலுள்ள ஆடவர்), ஆலகால விடத்தையும் - (உலகத்தை யெல்லாம் தகிக்கக்கூடிய) ஹாலா ஹல மென்னும் விஷத்தையும், நம்பலாம்-நம்பி அதனிடத்து நெருங்கலாம்; ஆற்றை யும்-(வெள்ளம் பெருகியதும், இறங்கினோரைக் கொல்லத்தக்கதுமா கிய) நதியையும், பெருங்காற்றையும் - (உலகத்தையழிக்கும் யுகாந்த காலத்தி லுண்டாகும்) பெரிய காற்றையும், நம்பலாம் - விசுவாசித் திருக்கலாம்; கோலம் - அழகிய, மா - பெரிய, மதம் - மதத்தை யுடைய, யானையை - யானையையும், நம்பலாம் - (விரும்பி) நேயங் கொள்ளலாம்; கொல்லும் - (நெருங்கினவர்களைக்) கொல்லுகின்ற, வெங்கைப் புலியையும் - வேங்கையாகிய புலியையும், நம்பலாம் - நம்பி அதன் சமீபத்தே செல்லலாம்; காலனார் யமதர்ம ராஜன், விடும்- (உயிர்களைப் பிடித்துவர) அனுப்பும், தூதரை - தூதுவரையும், நம்பலாம் - விரும்பலாம்; கள்ளர்- (வழிமறித்துப் பொருள் பறிக்கும்) திருடரையும், வேடர்-(கொடுந்தொழில்புரியும்)வேடரையும், மறவர்- (தீச்செய்கையை யுடைய) மறவரையும், நம்பலாம் - நம்பித் துணைக் கொள்ளலாம்; சேலை கட்டிய - (ஆடவரை மயக்குதற்கு அலங்கார மான) ஆடையைத் தரித்துப் பசப்பும், மாதரை - வேசை மாதரை, நம்பினால்-நம்பி (அவர்களோடு) நேசங்கொண்டால், (கைப்பொருளை யெல்லாமிழந்து தரித்திரராகி), தெருவில் நின்று - (பிச்சை யெடுத் தற்குத்) தெருக்களிலே நின்று, தயங்கி-(பிச்சை கிடையாமையால்) மெய்சோர்ந்து, தவிப்பர்-இளைப்பார்கள்.

(வி-ரை.) 'உலகத்திலுள்ள ஆடவர்' என்னும் எழுவாய் வரு விக்கப்பட்டது. ஆலகாலவிடம், தேவர்களும் அசுரர்களும் அமுதம் பெற வேண்டிப் பாற்கடலைக் கடைந்தகாலத் தெழுந்தது; இதனைச் சிவன் உண்டு கண்டத்தடக்கி யாவரையுங் காத்தனர். வேங்கைப்புலி-

இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இங்கே, 'சேலைகட்டிய மாதர்' எனப் பொதுப்பட வந்திருப்பினும், இழிவுநோக்கிப் பரத்தையரையே கொள்க. (கக)

நிலைமைகெட்டால் உதவிசெய்வோரும் கேடுசெய்வா ரேன்பது.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சங்குவெண் டாம ரைக்குத் தந்தைதா யிரவி தண்ணீர்
அங்கதைக் கொய்து விட்டா லழுகச்செய் தந்நீர் கொல்லும்
துங்கவன் கரையிற் போட்டாற் சூரியன் காய்ந்துகொல்வான்
தங்களி னிலைமை கெட்டா லிப்படித் தயங்கு வாரே.

(ப-ரை.) சங்கு - சங்கைப்போல, வெண் - வெண்மையாகிய, தாமரைக்கு - தாமரை மலருக்கு, தந்தை - பிதா, இரவி - சூரியனும், தாய்-மாதா, தண்ணீர்-ஜலமும் (ஆம்); (அப்படியிருப்பினும்), அங்கு - அத் தடாகத்தினிடத்தே, அதை - அத் தாமரைமலரை, கொய்துவிட்டால்-பறித்து அந் நீரிலேயே போட்டுவிட்டால், அந் நீர்-(அதற்குத் தாயாயிருந்த) அந் நீர்தானே, அழுகச்செய்து - (அம்மலரை) அழுகும்படி செய்து, கொல்லும் - கொன்றுவிடும்; (இன்னும் அதனை), துங்கம் - உயர்ந்த, வன்-வலிய, கரையில்-நீர்க்கரையில், போட்டால்-(பறித்துப்) போட்டுவிட்டால், சூரியன் - (முன் தந்தையாயிருந்த) சூரியன் தானே, காய்ந்து - மிக்க வெயிலைச்செய்து சுட்டு, கொல்வான் - கொன்றுவிடுவான்; இப்படி - இவ்விதமாகவே, (உலகத்திலுள்ளோர்) தங்களின் - தங்களுடைய, நிலைமை - உயர்ந்த இயல்பு, கெட்டால்-கேடடைந்தால், தயங்குவார்-(உரியோராலும் தீங்கு செய்யப்பெற்று) வாடி வருந்துவார்கள்.

(வி-ரை.) வெண்டாமரை என்பதில் வெண்மையென்னும் பண்புச்சொல்லின் மை விகுதி, "ஈறுபோதல்......" என்னும் விதி

பால் கெட்டது. இங்கு வெண்டாமரையைக் கூறியிருப்பினும் செந்தாமரையையும் உடன் கூட்டிக்கொள்க. தாமரை மலர் சூரியனைக் கண்டு மலர்வ தாதலால், அதற்குச் சூரியன் பிதாவாகக் கூறப்பட்டான். நீரினின்றுந் தாமரை உற்பத்தியாவதால், அந்நீர் அதற்குத் தாயாகக் கூறப்பட்டது. தயங்குவார் என்னும் பயனிலைக்குரிய எழுவாய் வருவிக்கப்பட்டது. தங்களின் - இன் சாரியை. (கஉ)

என்னசெய்யினும் அற்பன் திருந்தமாட்டா னென்பது.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நாய்வாலை யளவெடுத்துப் பெருக்கித் தீட்டி
　　னற்றமிழை யெழுதவெழுத் தாணி யாமோ
பேய்வாழுஞ் சுடுகாட்டைப் பெருக்கித் தள்ளிப்
　　பெரியவிளக் கேற்றிவைத்தால் வீட தாமோ
தாய்வார்த்தை கேளாத சகசண் டிக்கென்
　　சாற்றிடினு முலுத்தகுணந் தவிர மாட்டான்
ஈவாரை ஈயவொட்டா னிவனு மீபா
　　னெழுபிறப்பி னுங்கடையா மிவன்பி றப்பே.

(ப-ரை.) நாய் வாலை - நாயினது வாலை, அளவெடுத்து-(எழுத்தாணிக்குரிய) அளவாக எடுத்து, பெருக்கி-(ஒழுங்குசெய்து) நீட்டி, தீட்டின் - (கூர் உண்டாகும்படி) தீட்டினாலும், நல் தமிழை-சிறந்த தமிழை, எழுத - எழுதுதற்கு, எழுத்தாணி ஆமோ - (அது) எழுத்தாணி யாகுமோ? (இல்லை); பேய்-பைசாசங்கள், வாழும் - சஞ்சரிக்கும், சுடுகாட்டை - புறங்காட்டை, பெருக்கி-கூட்டி, தள்ளி - (அதிலுள்ள குப்பைகளைத்) தள்ளி, (அதில்). பெரிய - பெரிதாகிய (அஃதாவது: மிகுந்த பிரகாசம் செய்யத்தக்க), விளக்கு-தீபத்தை, ஏற்றி வைத்தால்-கொளுத்திவைத்தாலும், அது வீடு ஆமோ-அது (மனிதர் வசித்தற்குரிய) இல்லமாகுமோ? (இல்லை); (இவைபோல), தாய்

வார்த்தை - (பெற்ற) தாயின் வார்த்தைகளை, கேளாத - கேட்டு நடவாத, சகசண்டிக்கு - முரடனுக்கு, என் சாற்றிடினும் - என்ன நல்லுபதேசம் சொன்னாலும், உலுத்தகுணம் - (தனக்குள்ள) இழிகுணத்தைவிட்டும், தவிரமாட்டான் - நீங்கமாட்டான்; (இன்னும் இவன் தன்னுடைய உலோப குணத்தின் றன்மையால்), ஈவாரை - (உலகத்தில் பொருளற்றோர்க் கிரங்கிப் பொருளைக்) கொடுப்பவரையும், ஈயவொட்டான் - கொடுக்கவிடமாட்டான்; இவனும் - இப்பாவியும், ஈயான் - கொடான்; இவன் பிறப்பு - (இத்தகைய) இவனுடைய பிறப்பு, எழுபிறப்பினும் - எழுவகைப் பிறப்புக்களுள்ளும், கடையாம் - கடைப்பட்டதாகும்.

(வி-ரை.) சகசண்டி - உலகத்தில் மானமற்றவன் என்றும் பொருள் கூறலாம். எழுவகைப் பிறப்புக்களான: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்—என்பவைகளாம்.

## பரத்தையை நம்பலாகாதெனல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வெம்புவாள் விழுவாள் பொய்யே
    மேல்விழுந் தழுவாள் பொய்யே
தம்பலந் தின்பாள் பொய்யே
    சாகிறே னென்பாள் பொய்யே
அம்பினுங் கொடிய கண்ணா
    ளாயிரஞ் சிந்தை யாளை
நம்பின பேர்க ளெல்லா
    நாயினுங் கடையா வாரே.

(ப-ரை.) அம்பினும்-பாணத்தைக்காட்டினும், கொடிய-கொடுமையையுடைய, கண்ணாள்-கண்களையுடையவளாகிய பரத்தை, (ஆடவரை மயக்கவேண்டி அவர்களிடம் பொய்ந்நேயங்காட்டி மயக்கி அவ

களுக்குத் துன்பம் வந்தகாலத்தில்) வெம்புவாள் - மனம் வெதும்பு வாள், விழுவாள் - (மயங்கி) விழுவாள், பொய்யே-(இவை) பொய் யான செய்கைகளே யாம்; (இன்னும் அப்போது), மேல்விழுந்து - (ஆடவர்) மேல் விழுந்து, அழுவாள்-(அத்துன்பத்திற்கு மனம் வரு ந்தி அழுபவள்போலக்) கண்ணீர் விடுவாள், பொய்யே-(இச்செய்கை யும்) பொய்யே யாகும்; (அவ் வாடவர் தன்னை மெய்யான விசுவாச முடையவளென்று நம்புதற்குத்) தம்பலம்-(அவர்கள் வாயில் வைத்து மென்ற) எச்சிற் றம்பலத்தை, தின்பாள் - வாங்கி (அருவருப்புக் கொள்ளாது) தின்பாள், பொய்யே - (இச் செய்கையும்) பொய்யே யாகும்; (இன்னும் தன்னை நம்பி யிருக்கும் மதியற்ற ஆடவர்க்கு ஒரு ஆபத்து வந்த காலத்தில்), சாகிறேன் என்பாள் - (நானும் கூட) இறந்து உடன்கட்டை யேறுகிறேன் என்று சொல்லுவாள், பொய் யே - (இச் செய்கையும்) பொய்யேயாகும்; (ஆடவரிடம் கைப் பொருளிருக்கும்வரையில் இவ்வாறு செய்து, கைப்பொருளற்றவுடன் அவர்களைத் துரத்துவா ளாதலின்), ஆயிரஞ் சிந்தையாளை - (நிமிஷ நேரத்திற்குள் உறுதியற்று) ஆயிரம் எண்ணங்களைக் கருதும் அவ் வேசியை, நம்பினபேர்கள் எல்லாம் - நம்பினவர்க ளெல்லோரும், (பிறப்பால் மனிதராயிருப்பினும்), நாயினும்-(மலந்தின்னும் நாயைப் பார்க்கிலும், கடையாவார் - கடைப்பிறப் புடையவ ராவர்.

(வி - ரை.) பரத்தை நிலையின்றிப் பணங்கொடுத்தவரிடத் தெல்லாம் மனத்தைச் செலுத்தக் கூடியவளாதலின், அவளுக்கு 'ஆயிரஞ் சிந்தையாள்' என்னும் பெயர் கூறப்பட்டது. (கச)

## அறிவற்றோர் செய்கை

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கெற்பத்தான் மங்கையருக் கழகு குன்றுங்
    கேள்வியில்லா வரசனா லுலகம் பாழாந்

துற்புத்தி மந்திரியா லரசுக் கீனஞ்
 சொற்கேளாப் பிள்ளைகளாற் குலத்துக் கீனம்
நற்புத்தி கற்பித்தா லற்பர் கேளாய்
 நன்மைசெயத் தீமையுட னயந்து செய்வார்
அற்பரோ டிணங்கிவிடிற் பெருமை தாழு
 மரியதவங் கோபத்தா லழிந்து போமே.

(ப - ரை.) மங்கையருக்கு - பெண்களுக்கு, கெற்பத்தால் - கருப்பத்தினலே, அழகு - (இயற்கையாய் அமைந்திருந்த) அழ[கு] ஆனது, குன்றும் - (தேகம் தளர்தல் முதலிய செய்கைகளால்) குறையும்; (அதுபோல), கேள்வி இல்லா - (நன்மை தீமைகளை அறிந்து தீர்ப்புச் செய்தற்குரிய நெறியான) விசாரணை யில்லாத (அஃதாவது: தன் நாட்டில் என்ன தீங்கு நடந்தாலும் கவனியாத) அரசனல் - (கோன்முறை தவறிய) மன்னனால், உலகம் - (அவனா[ல்] ஆளப்படும்) உலகம், பாழாம் - (செழிக்காது) பாழடையும்; து[ற்] புத்தி - கெட்ட புத்தியையுடைய, மந்திரியால் - அமைச்சனல், அ[ர]சுக்கு - மன்னனுக்கு, ஈனம் - கேடுண்டாம்; சொல்-(தாய் தந்தை[யரு]ருடைய) வார்த்தைகளை, கேளா - கேட்டு நடவாத, பிள்ளை[க]ளால் - புத்திரரால், குலத்துக்கு - (அவர்கள் தோன்றிய) குல[த்]தினுக்கு, ஈனம் - கேடாம்; அற்பர் - இழிந்தோர், நற்புத்தி - அவ[ர்]களுக்கு நல்லறிவை, கற்பித்தால் - (பெரியோர்) கற்றுக்கொடு[த்]தால், கேளார் - கேட்டு அதன் வழியே நடக்கமாட்டார்கள்; (இ[ன்]னும்), நன்மை செய்ய-அவர்களுக்கு நன்மைகளைச் செய்ய, (அதற்[கு] நன்றி பாராட்டாமல்), உடன் - உடனே, தீமை - தீங்கை, நயந்[து] செய்வார் - விரும்பி (அவ்வாறு செய்தவர்களுக்குச்) செய்வார்கள்; அற்பரோடு - (இத்தகைய) புல்லரோடு, இணங்கிவிடில் - மனம்பொ[ரு]ந்தி நேசங் கொண்டுவிட்டால், (அவ்வாறு கொண்டவர்களுக்குப்) பெருமை தாழும் - பெருமை குறையும்; கோபத்தால் - கோபத்[தால்]

லே, அரிய - செய்தற்கரிதாகிய, தவம் - தவமானது, அழிந்து
பாம் - கெட்டுப்போகும்.

(வி - ரை.) கருப்பம் மங்கலமுடையதாயினும், தேகம் பாரித்
ல் முதலிய செய்கைகளால் இயற்கை யழகு குறையுமாதலால், இச்
சய்யுளை இயற்றினோர் இவ்வாறு 'அழகு குன்றும்' என்று கூறி
ர். இதனைப் பின்வரும் அற்பர் தன்மைக்கு உபமானமாகக் கூறி
ருப்பினும், அவர் தன்மைபோலத் தாழ்வுடையதாகக் கருதலாகாது.
ரசு - தொழிலாகுபெயர். (கரு)

## துன்பத்துக் குதவாதன.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ன்னுடன் பிறவாத் தம்பி தனைப்பெறாத் தாயார் தந்தை
அன்னிய ரிடத்துச் செல்வ மரும்பொருள் வேசை யாசை
மன்னிய வேட்டின் கல்வி மறுமனை யாட்டி வாழ்க்கை
இன்னவா மெட்டுஞ் சார்ந்த விடுக்கத்துக் குதவா வன்றே.

(ப-ரை.) தன்னுடன் - தன்னுடனே, பிறவா-பிறவாத, தம்பி-
ம்பியும், தனைப் பெறா - தன்னைப்பெறாத, தாயார்-மாதாவும், தந்தை-
தாவும், அன்னியரிடத்து - வேற்றோ ரிடத்திலுள்ள, செல்வம் -
செல்வமும், அரும்பொருள் - (கைக்குக் கிடைத்தற்) கரிதாகிய பொரு
ளும், (அஃதாவது: வாராதவிடத்தில் கடன் கொடுத்த பொருளும்),
வேசை-பரத்தையினுடைய, ஆசை-விருப்பமும், மன்னிய-பொருந்
திய, ஏட்டின் கல்வி-(மனப்பாடமின்றி ஏட்டிலெழுதிவைத்த படிப்
பும், மறுமனையாட்டி-(தன்சொந்தமனைவியன்றி விபசாரத்தால் வந்த)
வேறு மனையாளின், வாழ்க்கை - இல்வாழ்க்கையும், (ஆகிய) இன்ன
வாம் - இத்தன்மையை யுடையனவாம், எட்டும் - எட்டு வகைகளும்,
இடுக்கத்துக்கு - துன்பம்வந்த சமயத்துக்கு, உதவா - உதவமாட்டா.

(வி-ரை.) இதில் இருதிணையும் விரவி அஃறிணை மிகுந்திரு-
க்கும் மிகுதிபற்றி, உயர்திணைகளும் 'உதவா' என அஃறிணை முடிபை
யேற்றன. அன்று, ஏ - ஈற்றசைகள். (கக

உரியதைச் செய்யாதவன் ஒன்றுக்கு முதவானெனல்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கருதியநூல் கல்லாதான் மூட னாகுங்
 கணக்கறிந்து பேசாதான் கசட னாகும்
ஒருதொழிலு மில்லாதான் முகடி யாகும்
 ஒன்றுக்கு முதவாதான் சோம்ப னாகும்
பெரியோர்கண் முன்னின்று மரத்தைப் போலப்
 பேசாம லிருப்பவனே பேய னாகும்
பரிவுசொலித் தழுவினவன் பசப்ப னாகும்
 பசிப்பவருக் கிட்டுண்ணான் பாவி யாமே.

(ப-ரை.) கருதிய - (பெரியோரால் உயர்வாக) எண்ணப்பட்ட
நூல் - (தரும)சாஸ்திரங்களை, கல்லாதான் - படிக்காதவன், மூடன்
ஆகும்-அறிவில்லாதவனுவான்; கணக்கு அறிந்து-(பேசவேண்டிய)
முறைமையை அறிந்து, பேசாதான்-பேச அறியாதவன், கசடன்
ஆகும் - கீழ் மகனுவான்; ஒரு தொழிலும் - ஒருவேலையும், இல்லா-
தான் - இல்லாதவன், முகடி ஆகும்-மூதேவி யாவான்; ஒன்றுக்கும்-
ஒரு காரியத்துக்கும், உதவாதான்-பிரயோசனப்படாதவன்,சோம்பன்
ஆகும் - சோம்பேறி யாவான்; பெரியோர்கள் - (சகல கலைகளையுப்
அறிந்த) மகான்களுக்கு, முன்னின்று - எதிரேநின்று, மரத்தைப்
போல - அறிவற்ற விருக்ஷம்போல, பேசாமல் இருப்பவனே-(பேச
வேண்டியவற்றைப்) பேசாம லிருக்கின்றவனே, பேயன் ஆகும்-பை
சாசம் பிடித்தவனுவான்; பரிவு சொல்லி - (உள்ளன்பில்லாமல் வெ
ளிக்கு மாத்திரம்) அன்புடைய வார்த்தைகளைக் கூறி, தழுவினவன்-

மிக்க நேயமுடையவன்போலப் பலரையும்) கட்டியணைத்துச் சிரித்த முகங் காட்டினவன், பசப்பன் ஆகும் - ஏமாற்றுக்கார னாவான்; பசிப்பவர்க்கு - பசித்திருப்பவர்க்கு, இட்டு-கொடுத்து, உண்ணான் - (உணவை) உண்ணாதவன், பாவியாம் - சண்டாள னாவான்.

(வி-ரை.) பேசாமலிருப்பவன் என்பதில் இரு - துணைவினை. "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லா தாகுஞ் செய்யு மென் முற்றே" (நன். வி. உக) என்னுஞ் சூத்திரவிதியால், உயர்திணை யாண்பாற்பெயர்கள் 'ஆகும்' என்னும் முடிபை ஏற்றன. (கஎ)

## வறுமையின் கொடுமை.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தாங்கொணா வறுமை வந்தாற் சபைதனிற் செல்ல நாணும்
வேங்கைபோல் வீரங் குன்றும் விருந்தினர்க் காண நாணும்
பூங்கொடி மனையாட் கஞ்சும் புல்லருக் கிணங்கச் செய்யும்
ஓங்கிய வறிவு குன்று முலகெலாம் பழிக்குந் தானே.

(ப-ரை.) (ஒருவனுக்குத்) தாங்க ஒண்ணா - சகிப்பதற்கரிய, வறுமை-தரித்திரம், வந்தால்-வந்தடைந்தால், (அவன்), சபைதனில்-(உயர்ந்தோர்) கூடியசபைக்கு, செல்ல-போவதற்கு, நாணும்-(தகுதியான ஆடையாபரணங்க ளில்லாக் காரணத்தால்) வெட்கத்தையடைவான்; வேங்கைபோல் - புலியின் வீரத்தைப்போன்ற, வீரம் - (அவனுடைய) வீரத்தன்மை, குன்றும் - குறையும்; (இன்னும் அவன்), விருந்தினர் - விருந்தினரை, காண - பார்க்க, நாணும் - (அவர்களை உபசரிக்கும் சக்தி தன்னிடத்தி லில்லாமையால்) வெட்குவான்; பூங்கொடி - மலர்க்கொடிபோன்ற, மனையாட்கு-மனைவிக்கும், அஞ்சும் - பயப்படுவான்; (அன்றியும் அத்தரித்திரமானது அவனை), புல்லருக்கு-அற்பருக்கும், இணங்கச் செய்யும் - இணங்கி நடக்கச் செய்யும்;

ஓங்கிய - (அவனிடத்தே) மிகுந்த, அறிவு குன்றும் - விவேகமும் அதனாற் குறையும்; உலகு எலாம் - உலகமெல்லாம், (அஃதாவது: உலகத்தி லுள்ளவர்க ளெல்லோரும்), பழிக்கும் - நிந்தனை கூறும், (அஃதாவது: தூற்றுவார்கள்).

(வி - ரை.) தாங்க ஒண்ணு என்பதில் அகரம் தொக்கது. வேங்கை - வீரத்தை யுணர்த்துதலின் கருத்தா வாகுபெயர். உலகு - இடவாகுபெயர்; உலகத்திலுள்ள மனிதர்களை யுணர்த்தும். (கஅ)

## நிலையற்றவுடம்பி னிழிவு.

### கலிவிருத்தம்.

அரும்பு கோணி லதுமணங் குன்றுமோ
கரும்பு கோணிடிற் கட்டியும் பாகுமாம்
இரும்பு கோணிடில் யானையை வெல்லலாம்
நரம்பு கோணிடி னமதற் கென்செய்வோம்.

(ப-ரை.) அரும்பு - பூவரும்பு, கோணில்-கோணினால், அது - அவ்வரும்பானது, மணம் - வாசனையில், குன்றுமோ - குறையுமோ? (குறையாது); கரும்பு-கன்னல், கோணிடில்-கோணினாலும், (அது) கட்டியும்-(சுவையுள்ள) வெல்லக்கட்டியும், பாகும்-வெல்லப்பாகும், ஆம்-ஆகும்; இரும்பு-இரும்பானது, கோணிடில்-வளைந்து (அங்குச வடிவ) மானால், (அதைக்கொண்டு), யானையை-(அடங்காத) யானையையும், வெல்லலாம் - (அடக்கி) வென்றுவிடலாம்; நரம்பு கோணிடில்-தேகத்திலுள்ள நரம்புகள் கோணி ஒருவனுக்கு மாணம் வந்தால், (அவன் தேகம் ஒன்றுக்கு முதவாதாகையால்), நாம்-நாம், அதற்கு - அவ்வாறானதற்கு, என் செய்வோம் - என்ன உபாயத்தைச் செய்து அதைச் சீர்ப்படுத்துவோம்? (ஒன்றும் செய்யவியலாது).

(வி-ரை.) கோணிடில் - இதில் 'இடு' துணைவினை. அரும்பு முதலியன கோணினும் பயன்படும், மானுடதேகம் கோணினால்

...ன்றுக்கு முதவாதென்பது இச் செய்யுளின் கருத்து. நரம்பு கோ...ணிடில் என்பதற்கு நரம்புகள் கோணித் தேகம் முடமானால் என்...றும் பொருளுரைக்கலாம். (கக)

## பொருளுள்ளவன் பெரியனெனல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

...பொன்னொடு மணியுண் டானாற் புலையனுங் கிளைஞ னென்று
...தன்னையும் புகழ்ந்து கொண்டு சாதியின் மணமுஞ் செய்வர்
...மன்னரா யிருந்த பேர்கள் வகைகெட்டுப் போவா ராயின்
...பின்னமா யாரோ வென்று பேசுவா ரேசுவாரே.

(ப-ரை.) பொன்னொடு-பொன்னோடு, மணி-இரத்தினங்களும், ...உண்டானால் - (ஒருவனிடத்தே) உண்டாயிருக்குமாயின், (அவ்வாறு ...உண்டாகப் பெற்றவன் புலையனாயிருந்தாலும்), புலையன் தன்னையும்-...அந் நீசனையும், (இவ்வுலகினர்), நம் கிளைஞன் என்று - நம்முடைய ...சுற்றத்தான் என்று சொல்லி, புகழ்ந்து கொண்டு-துதித்துக்கொண்டு, ...சாதியில் - தம்முடைய உயர்ந்த சாதியிலே, மணமுஞ் செய்வர்-(அவ...னுக்குக்) கலியாணமுஞ் செய்துவைப்பார்கள்; மன்னராயிருந்தபேர்...கள் - (முன்னே) அரசராயிருந்தவர்கள், வகை கெட்டுப் போவா...ராயின் - (தம்முடைய அரசையிழந்து) தரங்கெட்டுப் போவாரானால், (அவரை முன்னே நன்றாக அறிந்திருந்தாலும்), யாரோ என்று-இவர் ...எவரோ என்று, பின்னமா - கெடுதலாக, பேசுவார் - பேசுவார்கள்; (அவ்வாறு பேசுவதுமன்றி), ஏசுவார்-(இவ்வகைத் தாழ்வோடு இவர்...கள் என் உயிர் வைத்திருக்க வேண்டுமென்று) ஏசுவதுஞ் செய்வார்...கள்.

(வி-ரை.) இரண்டாமடியிலுள்ள 'தன்னையும்' என்பதனைப் 'புலையன்' என்பதன் பின்னாக்கி, 'புலையன் தன்னையும்' எனக் கூட்டுக. (உ0)

## மாத மும்மாரி பெய்தற்குக் காரணம்.

கலிவிருத்தம்.

வேத மோதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாத மூன்று மழையெனப் பெய்யுமே.

(ப-ரை.) வேதம் - நான்கு வேதங்களையும், ஓதிய-ஓதியுணர்ந்த, வேதியர்க்கு - அந்தணர்க்கு, ஓர் மழை - ஒரு மாரியும், நீதி மன்னர் - சத்தியத்தையுடைய அரசரது, நெறியினுக்கு - செங்கோல் முறைமைக்கு, ஓர் மழை-ஒரு மழையும், மாதர்-அழகு நிறைந்த, கற்புடை - பதிவிரதா தருமத்தையுடைய, மங்கையர்க்கு - உத்தம ஸ்திரீகளுக்கு, ஓர் மழை-ஒரு மழையுமாக, (மேகமானது உலகத்தில்), மாதம்-மாதந் தோறும், மூன்று மழை என - மும்மாரியென்று கொண்டாடும்படி, பெய்யும் - மும்மாரி சொரியும்.

(வி-ரை.) வேதம் நான்கு: இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்பன. இச்செய்யுளால், இம் மூவகையாரின் பொருட்டே மாத மும்மாரி பெய்யுமென்பதும், இவர்க ளின்றேல் மும்மாரி இல்லை யென்பதும் விளங்கும். (உக)

## மழைக் குறைவிற்குக் காரணம்.

இதுவுமது.

அரிசி விற்றிடு மந்தணர்க் கோர்மழை
வரிசை தப்பிய மன்னருக் கோர்மழை
புருட னைக்கொன்ற பூவையர்க் கோர்மழை
வருட மூன்று மழையெனப் பெய்யுமே.

(ப-ரை.) அரிசி - அரிசியை, விற்றிடும் - விலைக்கு விற்று வியாபாரம் செய்யும், அந்தணர்க்கு - வேதியருக்கு, ஓர்மழை - ஒரு

மையும் ,வரிசை தப்பிய-(அரசாட்சியின்) ஒழுங்கு தவறிய, மன்ன
நக்கு-அரசருக்கு ஓர் மழை - ஒருமழையும், புருடனை - (தனக்குத்
தெய்வமாகிய) நாயகனை, கொன்ற - பர புருஷன்மேலிச்சைவைத்
துக்) கொலைசெய்த, பூவையர்க்கு - பெண்களுக்கு, ஓர் மழை-ஒரு
மழையுமாக, (உலகத்தில் மாரியானது குறுகி), வருடம் - வருடந்
தோறும், மூன்று மழையென - மூன்று மாரி யென்று சொல்லிப்
பலர் வருந்தும்படி, பெய்யும் - வருஷ மும்மாரி சொரியும்.

(வி-ரை.) இச் செய்யுளால், அந்தணர் யாகாதி கருமங்களை
விட்டு வேறு தொழில் செய்யலாகா தென்பதும், அவ்வாறு செய்
யின் கேடுண்டா மென்பதும், அப்படிச் செய்த அவ் வந்தணர் முத
லிய மூவகையார் பொருட்டும் உலகம் வருந்துதற் கேதுவாக, (மாத
மும்மாரி பெய்வது நீங்கி)வருடத்துக்கு மூன்றுமழை பெய்யுமென்பு
தும் விளங்கும். இம்மூன்று மழையாலும் உலகினுக்குப் பெருந்
துன்பமே யன்றிப் பயனொன்றுமில்லை. ஏனெனில், தொடர்ந்த
மழையின்றி அதிக நாட்சென்று ஒருமழை பெய்யின், சிறிது வாடா
திருந்த பயிர்களும் அம்மழையால் வெப்ப மதிகரிக்க உடனே அழி
யும்; மனிதர்க்குப் பலநோய்களு முண்டாம்; இப்படியே மூன்று
மழையும் பெய்ய, முடிவில் உலகம் பெருங்கே டடைந்து பஞ்ச
முண்டாம். ஆதலின், இம்மூன்று மழைகளும் துன்ப வடிவமான
வைகளாம். கெட்டவர்கள் பொருட்டுப் பெய்யப்படுவன வாதலால்,
இம்மூன்று மாரியும் உலகினுக்கு விஷம்போற் கேடு செய்வன
வாயின. (உஉ)

## பயனற்றவை.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

திருப்பதி மிதியாப் பாதஞ் சிவனடி வணங்காச் சென்னி
இரப்பவர்க் கீயாக் கைக ளினியசொற் கேளாக் காது

புரப்பவர் தங்கள் கண்ணீர் பொழிதரச் சாகாத் தேகம்
இருப்பினும் பயனென் காட்டி லெரிப்பினு மில்லை தானே.

(ப-ரை.) திருப்பதி - (வரங்கொடுக்குங் கடவுள் எழுந்தருளி யிருப்பதனாலே) சிறப்புற்ற புண்ணிய க்ஷேத்திரத்தில், மிதியா - (போய்க் கோவிலை வலஞ்சுற்றி) நடவாத (மனிதனுடைய), பாதம்-அடிகளும்; சிவன் அடி - பரமசிவனுடைய திருப்பாதங்களை, வணங்கா-வணக்கஞ்செய்யாத, சென்னி - சிரசும்; இரப்பவர்க்கு-(தரித்திர மிகுதியால்) யாசிப்பவருக்கு, ஈயா - (பொருளைக்) கொடாத, கைகள்-கரங்களும்; இனிய - இனிமை பொருந்திய, சொல் - நீதிச் சொற்களை, கேளா-கேட்காத, காது-செவிகளும்; புரப்பவர் தங்கள்-தன்னைக் காப்பாற்றுகின்ற தலைவர் அல்லது அரசருடைய, கண் - கண்கள், நீர் பொழிதர - நீரைச்சொரிய, (ஆபத்து நேர்ந்து அவர்கள் வருந்தக்கண்டும்), சாகா - (அவர் பொருட்டு) உயிர்விடாத, தேகம் - (ஒருவனுடைய) தேகமும்; இருப்பினும் - (உலகத்தில்) நிலைபெற்றிருந்தாலும், பயன் என் - (இவற்றால்) யாதுபயன்?, (ஒருபயனுமில்லை); காட்டில் - சுடுகாட்டில், எரிப்பினும்-(இவற்றைவைத்து) எரித்தாலும், பயன் இல்லை - பிரயோசனமில்லை.

(வி-ரை.) திருப்பதி மிதியாப் பாதம் முதலியன இருப்பதாலும் பயனில்லை; இவை மடிய இவற்றைச் சுடுகாட்டில் வைத்தெரிப்பதாலும் பயனில்லை; எனவே, மற்றவை இருவகையிலும் பிரயோசனமா மென்பதும், சில இருவகையிலும் பிரயோசனப் படாவிடினும் ஒருவகையிலாவது பிரயோசனப்படு மென்பதும் விளங்கும். சில இருவகையிலும் பிரயோசனப்படு மென்பதை, "யானை செத்தாலும் ஆயிரம்பொன், இருந்தாலும் ஆயிரம்பொன்" என்னும் பழமொழி நன்கு விளக்கும். தீங்கைச் செய்யும் பாஷாணம் முதலியன புடமிட்டு மடிந்த பின் ஒருவகையில் பயனைத் தருகின்றன. 'பயன்' என்பதைத் தீபகமாக்கி, என், இல்லை என்னு மிரண்டிற்குங் கூட்டுக. (

## ஈகையின் தன்மை.

### இதுவுமது.

தன் னுட லினுக்கொன் றீந்தால் தக்கதோர் பலம தாகும்
மின்னியல் வேசிக் கீந்தால் மெய்யினில் வியாதி யாகும்
மன்னிய வுறவர்க் கீந்தால் வருவது மயக்க மாகும்
அன்னியர் பரத்துக் கீந்தா லாருயிர்க் குதவி யாகும்.

(ப-ரை.) தன் உடலினுக்கு-(ஒருவன்) தன் தேகத்துக்கு, (பிரயோசனமாம்படி), ஒன்று-ஒருபொருளை, ஈந்தால்-உதவினல், (அஃதாவது: ஊட்டினல்), தக்கது - பொருத்தமுள்ளதான, ஓர்-ஒப்பற்ற, பலமது ஆகும் - பலமுண்டாகும்; மின் - மின்னலைப்போன்ற (பிரகாசமுள்ள), இயல் - சாயலையுடைய, வேசிக்கு - பரத்தைக்கு, ஈந்தால்-(பொருளைக்) கொடுத்தால், (அவ்வாறு கொடுத்துச் சேரும் அவளுடைய சேர்க்கையால்), மெய்யிலே - தேகத்திலே, வியாதியாகும்-பிணிதான் (அதற்குப் பிரயோசனமாக) உண்டாகும்; மன்னிய - பொருந்திய, உறவர்க்கு - சுற்றத்தார்க்கு, ஈந்தால் - (பொருளைக்) கொடுத்தால், வருவது - (அதனலே தனக்குச்) சேர்வது, மயக்கம் ஆகும் - (எனக்குச் சரியாகக் கொடுக்கவில்லை, உனக்குச் சரியாகக் கொடுக்கவில்லை என்று அவர்கள் குறைகூறுவதா லேற்படும்) மனக்கலக்கமே உண்டாகும்; அன்னியர் - பிற சாதியாருடைய, பரத்துக்கு - தேகத்துக்குப் (பிரயோசனமாம்படி), ஈந்தால்-(பொருளைக்) கொடுத்தால், (அவ்வீகையானது) ஆருயிர்க்கு-நிறைந்த தன்னுடைய உயிர்க்கு, உதவியாகும் - (மறுமையில்) உதவி புரிவதாகும்.

(வி-ரை.) உடலினுக்கு-இதில் இன், உ சாரியைகள். பலமது-இதில் அது சொல்லுருபு. திருவள்ளுவர் முதலிய மகான்கள் சுற்றந்தழுவுதலை உயர்வாகக் கூறியிருப்பினும், சுற்றத்தார் கிடைத்தவரையில் திருப்தியடையாமல், "எனக்கு அதிகமாகக் கொடுக்கவில்லை

உனக்கு அதிகமாகக் கொடுக்கவில்லை'' என்று சொந்தம் பாராட்டி
குறைகூறுவார்களாதலால், அதனால் மனக்கலக்க முண்டாகுமென்று
அவர்களுடைய இயலைமாத்திரம் இச்செய்யுட்காரர் விளக்கிக் காட்டி
னாரேயன்றி, அவர்களுக் கீதல் கூடாதெனக் கூறவில்லை. ஆதலின்
சுற்றத்தார்க் கீதல் நன்மையென்றே கொள்க. (உச

வேசையரை நம்பலாகா தெனல்.

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

படியி னப்பொழு தேவ தைத்திடும்
பச்சை நாவியை நம்பலாம்
பழிநமக் கென வழி மறித்திடும்
பழைய கள்ளரை நம்பலாம்
கொடு மதக்குவ டென வளர்ந்திடு
குஞ்ச ரத்தையு நம்பலாம்
குலுங்கப் பேசி நகைத் திடுஞ்சிறு
குமரர் தம்மையு நம்பலாம்
கடை யிலக்கம தெழுதி வைத்த
கணக்கர் தம்மையு நம்பலாம்
காக்கை போல்விழி பார்த்தி டுங்குடிக்
காணி யாளரை நம்பலாம்
நடை குலுக்கியு முக மினுக்கியு
நகை நகைத்திடு மாதரை
நம்பொணாது மெய் நம்பொ ணாதுமெய்
நம்பொ ணாதுமெய் காணுமே.

(ப-ரை.) படியின்-(வயிற்றிற்போய்க்) கலந்தால், அப்பொழுதே
(கலந்த) அச்சமயத்திலேயே, வதைத்திடும் - (உண்டவரைக்) கொல்
லும், பச்சை நாவியை-(சுத்திசெய்யாத) பச்சைப் பாஷாணத்தையும்
நம்பலாம்-நம்பி உட்கொள்ளலாம்; பழி நமக்கு என - பாவம் நமக்கே

சொந்தமென்று, (அதாவது பழிக்கஞ்சாது), வழிமறித்திடும் - ழிமறித்துக் (கொள்ளையடிக்கும்), பழைய - பழமையாகிய, (அஃ ாவது திருட்டில் கைதேர்ந்தவர்களாகிய), கள்ளரை-திருடரையும், ம்பலாம் - நம்பி உறவு கொள்ளலாம்; குவடு என - மலையைப்போல, ளர்ந்திடும்-வளர்வதும், கொடும்-கொடுமை தங்கியதும், மதம்-மதம் டித்ததுமாகிய, குஞ்சரத்தையும் - யானையையும், நம்பலாம் - நம்பி தனிடத்தே நெருங்கலாம்; குலுங்க - (தேகம்) குலுங்க, பேசி- பசப்பு வார்த்தைகளைப்) பேசி, நகைத்திடும் - (உள்ளன் பில்லாமல் றரை ஏமாற்றுதற்காகச்) சிரித்து நேயங்கொள்ளும், சிறு குமரர் ம்மையும்-சிறிய இளைஞரையும், நம்பலாம்-நம்பி நேசிக்கலாம்; கடை லக்கமது-(தாம் விரும்பிக்கேட்டதைக் கொடாத குடிகளைக் கெடுத் ற்குப் பலவிதமான பொய்த்தீர்வைகளை ஏற்படுத்தித்) தாழ்மை ான மோசக்கணக்கை, எழுதிவைத்த - எழுதி (அக் குடிகள்பேரில் ாக்கிகட்டி) வைத்த, கணக்கர் தம்மையும்-கிராமக் கணக்கர்களையும், ம்பலாம்-(ஒரு சமயத்தில்) நம்பலாம்; காக்கைபோல-(ஒரே விழி யைக்கொண்டு இரண்டு பக்கத்தும் கவனமாகப் பார்த்துக்கொள்ளும்) ாக்கையைப்போல, விழி - கண்களால், பார்த்திடும் - (கதிரறுப்புக் ாலத்தில்) அங்குமிங்கும் பார்த்துக் கடுங்காவல் புரிந்து பயிரிடுங் டிகளுக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ஆதாயமும் கிடைக்க வாட்டாமற் செய்யும், குடிக்காணியாளரை - (பயிரிடுங்) குடிகளை ாளும் காணியாட்சிக்காரரையும், நம்பலாம்-நம்பி அவர்களைச்சார்ந்து ாழலாம்; நடை-நடையை, குலுக்கியும்-குலுக்கி நடந்தும், முகம்- கத்தை, மினுக்கியும்-(எண்ணெய் மஞ்சள் முதலியன பூசி) மின் ரும்படி செய்தும், நகை-பற்களால், நகைத்திடும்-நடிப்பாகச் சிரித்து டவரை மயக்கும், மாதரை - பரத்தையரை, நம்ப ஒண்ணாது நம்ப ண்ணாது நம்ப ஒண்ணாது-நம்பலாகாது, நம்பலாகாது, நம்பலாகாது; அவ்வாறு நம்பினால் நிச்சயமாகக் கேடுவரும்); மெய் மெய் மெய்-

இஃது உண்மை, உண்மை, உண்மை; காணும்-(அறிவுடையோரே!) இதனை ஆராய்ந்து பாருங்கள்.

(வி-ரை.) நாவி, கள்ளர், காணியாளர் என்பவற்றில் இழிவு சிறப்பும்மைகள் தொக்கன. 'நம்பொணாது மெய்' என்ற வாக்கியத் தொடர்கள் முறையே மாற்றப்பட்டன. நம்ப ஒண்ணாது-இதில் அகரந் தொக்கது. ஒண்ணாது-கெடுதல் விகாரத்தால் ஒணாது என்றாயது. பரத்தையரை நம்பலாகாதென்பதை வலியுறுத்தற்பொருட்டு, "அசைநிலை பொருணிலை" (நன். பொ. சச) சூத்திரவிதிப்படி, 'நம்பொணாது மெய்' என்றதொடர் மும்முறை அடுக்கிவந்தது. இச்செய்யுளில் 'பழிநமக்கென வழிமறித்திடு பழையகள்ளரை நம்பலாம்' என்பதை 'பழிநமக்கென வழிமறித்திடு பழையநீலியை நம்பலாம்' என்று பாடமோதி, 'ஒரு வணிகனை வழிமறித்துக் கொன்ற பழையனூர் நீலியையும் நம்பலாம்' என்று பொருளுரைப்பாரு முளர். இக்கதை பிரசித்தியுடைய தன்றாகலானும், 'பழையநீலி' என்பதற்குப் பழையனூர் நீலியென்று பொருளுரைத்தல் பொருந்தா தாகலானும், இக் கருத்தைத் தள்ளி நீலி யென்பதைக் கள்ளர் என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. இக்கருத்து, இந்நூலில் இதற்கு முன்னர் வந்துள்ள, "ஆலகால" என்னுஞ் செய்யுளில், 'கள்ளர் வேடர் மறவரை நம்பலாம்' என்ற கருத்திற் கிசைந்திருத்தலை உய்த்துணர்ந்து கொள்க.

## கற்பில்லாப் பெண்டிரியல்பு.

### கலிவிருத்தம்.

வண்டுக ளிருந்திடின் மதுவை யுண்டிடுந்
தண்டமி ழிருந்திடிற் சங்கஞ் சேர்ந்திடுங்
குண்டணி யிருந்திடிற் கோள்கள் மிஞ்சிடும்
பெண்டுக ளிருந்திடிற் பெரிய சண்டையாம்.

(ப-ரை.) வண்டுகள் - தும்பிகள், இருந்திடின் - (ஒருசோலை
லே) கூடியிருந்தால், மதுவை - அச் (சோலையிலுள்ள) தேனை,
ண்டிடும் - உண்டு இனிமையாக வாழும்; தண் தமிழ் - குளிர்ந்த
மிழ், இருந்திடின்-(ஒரு நகரில்) தங்கியிருக்குமானால், (அத் தமிழ்க்
ல விருத்தியினாலே), சங்கம் சேர்ந்திடும் - (வித்வான்களுடைய)
ட்டம் சேரும்; குண்டணி-பின் புறணி கூறுவோன் (அஃதா
து: புறங்கூறுவோன்), இருந்திடில்-ஓரிடத்திலிருந்தால், (அங்கே)
காள்கள்-பொய்ம்மொழிகள், மிஞ்சிடும்-அதிகரிக்கும்; பெண்டுகள்-
ற்பில்லாத பெண்கள், இருந்திடில் - ஓரிடத்திலிருந்தால், (அவர்க
ள் ஒருவரோடொருவர் இணங்கியிராக் காரணத்தாலே), பெரிய
ண்டையாம் - மிகுந்த சண்டையுண்டாகும்.

(வி-ரை.) குண்டணி-பின்புறணி; இஃது ஆகுபெயராய்
தனை யுடைய மனிதனை யுணர்த்திற்று. (உசு)

உயிருள்ளவரை தமக்குரிய பொருளைக் கோடாதோர்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ற்புடை மாதர் தேகங் கவரிமான் மயிரின் கற்றை
வற்புறு வேங்கை யின்றோல் வீரன்கை வெய்ய கூர்வேல்
ற்பர்தம் பொருள்க ளாமு மவரவ ரிறந்த பின்னே
ற்பலர் கொள்வா ரிந்தப் பாரினி லுண்மை தானே.

(ப-ரை.) கற்புடை - (தம்முடைய நாயகர் தவிரப் பிறர் தீண்
ப்பெறாத) கற்பினையுடைய, மாதர் - பெண்களுடைய, தேகம் -
தகத்தையும், கவரிமான் - கவரிமானுடைய, மயிரின் கற்றை - மயி
த் தொகுதியாகிய சாமரையையும், வெற்புறு-மலையிலே பொருந்தி
ாசஞ்செய்கின்ற, வேங்கையின் - புலியினுடைய, தோல் - தோலை
ம், வீரன் - சூரனுடைய, கை-கரத்திலுள்ள, வெய்ய - வெவ்விய,
ர்-கூர்மை தங்கிய, வேல் - வேலாயுதத்தையும், அற்பர்தம்-(ஈயாத)

அற்பர்களுடைய, பொருள்கள் தாமும் - பொருள்களையும், அவ அவர்-(இவற்றிற் குரியோராகிய)ஒவ்வொருவரும், இறந்த பின்னே மரணமான பின்னரே, பற்பலர் - அநேகர், கொள்வார் - யாதொரு தடையுமின்றிக்) கைக்கொள்வார், இந்தப் பாரினில்-இவ்வுலகத்தில் உண்மை - (இவ்வாறு கொள்ளுதல்) மெய்யாகும்.

(வி-ரை.) உயர்திணை மிகுந்திருத்தல் பற்றி இருதிணைகளும் கலந்து உயர்திணைமுடிபை எற்றன. இறந்த பின்னரே பற்பல கொள்வாரெனவே,உயிருள்ளவரை ஒருவராலும் வௌவுதல் முடியா தென்பதாயிற்று. கற்புடைய மாதர் தேகம் பிறர் தீண்டப் பெறுத தாயினும், அவர்கள் இறந்தபின் அத்தேகத்தைப் பலரும் தொட்டு தூக்கிச் சுடுகாடு சேர்த்துவருவர்; பின் அது பிணஞ்சுடும் நீசன் வச மாகிவிடும். இவ்வாறே கவரிமான், வேங்கை ஆகியவற்றிற்கும், அற்பருக்கும் நேரும். நன்மை தீமைகள் ஆன்மாவுக்கே யன்றித் தேகத்துக் கில்லையாதலின், ஆன்மா நீங்கியபின் தேகம் எவ்வாறுயி னும் கற்புடைய மாதரின் கற்புக்குக் கேடொன்று மில்லை. கவரிமான் உயிருள்ளவரை தன்னுடைய உரோமங்களில் ஒன்றையேனும் இழக்க மனம் பொருந்தாது; ஓர் உரோமம் முள்ளில் சிக்கிக்கொள்ளி னும் அதனை இழுத்தால் அதற்குச் சேதமுண்டாமெனக் கருதி அவ்விடத்திலேயே நின்று மடிவது அதன் சுபாவம். (உஎ)

தாழ்ந்தோர் பொருள் பெருமை யடையாதெனல்.

இதுவுமது.

வீணர்பூண் டாலுந் தங்கம் வெறும்பொய்யா
மேற்பூச் சென்பார்
பூணுவார் தராப்பூண் டாலும் பொருந்திய
தங்க மென்பார்

காணவே பனைக்கீ ழாப்பாற் குடிக்கினுங்
கள்ளே யென்பார்
மாணுல கத்தோர் புல்லர் வழங்குரை
மெய்யென் பாரே.

(ப-ரை.) வீணர் - (பயனற்றவர்களாகிய) ஏழைகள், தங்கம் ண்டாலும் - பொன்னாபரணங்களை யணிந்தாலும், மாண் - பெரும தங்கிய, உலகத்தோர் - உலகத்திலுள்ள மதிகுறைந்த மனிதர், வறும்-பயனற்ற, பொய்யாம் - பொய்த்தன்மை நிறைந்த, (அல்லவது போலித்தன்மையாகிய), மேற்பூச்சு என்பார் - மேலே மாத்ரம் தங்கம் பூசப்பெற்ற தாழ்ந்த உலோக நகையென்று கூறுவர்; ணுவார் - பொன்னாபரணந் தரிக்கத்தக்க தனவந்தர்கள், தரா - த்தளை நகைகளை, பூண்டாலும் - அணிந்தாலும், பொருந்திய - பர்வுற்ற, தங்கம் என்பார் - தங்க நகையென்று கூறுவார்; காண - லருங் காணும்படி, பனைக்கீழ் - பனைமரத்தடியிலிருந்து, ஆப்பால் - சுவின் பாலை, குடிக்கினும்-குடித்தாலும், கள்ளே என்பார் - மதுவேன்று கூறுவார்கள்; புல்லர் - கீழ்மக்கள், (சற்று தனமுடையவர்ளாயிருந்தால்), வழங்கும் உரை-(அவர்கள்) சொல்லும் பொய் வார்த்தகளையும், மெய் என்பார் - உண்மையென்று சொல்லுவார்கள்.

(வி - ரை.) தங்கம், தரா என்பன காரண வாகுபெயர்கள்; வை இவற்றாலாகிய நகைகளை யுணர்த்தின. மேற்பூச்சு - தொழி ாகுபெயர்; இதுவும் ஆபரணத்தை யுணர்த்திற்று. பித்தளை - செம் ம் நாகமுங் கலந்த உலோகம். (உஅ)

விரையில் அழிந்துபோகத்தக்கவை.

இதுவுமது.

ப்பிலாக் குமரி வாழ்க்கை முனையிலா வரசன் வீரங்
ப்பிலா விளைந்த பூமி கரையிலா திருந்த வேலி

கோப்பிலான்கொண்டகோலங் குருவிலான்கொண்ட ஞான
ஆப்பிலாச் சகடு போல வழியுமென் றுரைக்க லாமே.

(ப-ரை.) மூப்பு இல்லா - (தனக்கு) மூத்தோரில்லாத, (அ
தாவது: தனக்கு மூத்த ஒருவருக்குள் அடங்கி வாழாமல் சுயேச்
யாக வாழ்கின்ற), குமரி - இளம் பெண்ணினுடைய, வாழ்க்கை
வாழ்வும்; முனை இல்லா - கோபமில்லாத, அரசன் - மன்னனுடைய
வீரம் - வீரமும்; காப்பு இல்லா - காத்தலில்லாத, விளைந்த பூமி
நெல்விளைந்த நிலமும்; கரை இல்லாது இருந்த-வலிய கரையில்லா
லிருந்த, ஏரி - குளமும்; கோப்பு இல்லான் - பெருமையையுடை
ஐசுவரியம் தன்னிடத்தி லில்லாதவன், கொண்ட-செய்துகொண்ட
கோலம் - இடம்பமான அலங்காரமும்; குரு இல்லான் - (ஞானோ
தேசம் செய்யும்) ஆசிரியனில்லாதவன், கொண்ட - தானே க
றுக்கொண்ட, ஞானம்-கல்வியறிவும், (வலியற்றனவாதலின்), ஆப்
இல்லா - அச்சாணியில்லாத, சகடுபோல - வண்டில்போல, அழியு
என்று- (நிச்சயமாக) அழிந்துபோமென்று, உரைக்கலாம் - சொல்
லாம்.

(வி-ரை.) மூப்பு, கோப்பு என்பன ஆகுபெயர்கள். (உ

விரைவில் உயிரிழப்பவர்.

இதுவுமது.

அரவினை யாட்டு வாரு மருங்களி றாட்டு வாரும்
இரவினிற் றனிப்போ வாரு மெறியுநீர் நீந்து வாரும்
விரைசெறி குழலி யான வேசியை விரும்பு வாரும்
அரசனைப் பகைத்திட் டாரு மாருயி ரிழப்பர் தாமே.

(ப-ரை.) அரவினை - சர்ப்பத்தை, ஆட்டுவாரும் - ஆட்டுகின்
றாம்பாட்டிகளும்; அரும் களிறு சமீபத்தில் நெருங்குவதற்கரிதாகி

ரயை, ஊட்டுவாரும் - உண்பிக்கின்ற (அஃதாவது: உணவூட்டி க்கின்ற) பாகரும்; இரவினில் - இராக்காலத்தில், தனி - துணை றி) ஒன்றியாக, போவாரும் - பிரயாணஞ் செல்வாரும்; எறியும்- களாற் கரையைமோதுகின்ற, நீர் - நீரையுடைய குளத்தில், வாரும் - நீந்திச் செல்வாரும்; விரை செறி - வாசனை நிறைந்த, லியான-கூந்தலையுடையவளான, வேசியை-பரத்தையை, விரும்பு ம்-விரும்பி நேசங் கொள்வாரும்; அரசனை-(தம்மை ஆளுகின்ற) னை, பகைத்திட்டாரும் - பகைத்துக்கொண்டவர்களும், ஆர் - நிறைந்த உயிரை, இழப்பர் - இழந்துவிடுவார்கள்.

(வி-ரை.) சர்ப்பத்தை எவ்வளவு அன்போடு வளர்த்தாலும் சம ற் கடித்துக் கொல்லும்; "பாம்பொடுபழகேல்" என்பது ஔவை ு. தன்னை விருப்பத்தோடு வளர்க்கும் பாகரை யானை நிச்சயமாக சமயத்தில் கொன்றுவிடும்; "யானை அறிந்தறிந்தும் பாகனையே ல்லும்" என்பது (நாலடியார்) முதுமொழி. இரவில் தனித்துச் வார்க்குத் திருடர் முதலியவர்களால் அபாயம் நேரும்; "அஞ் ற் றனிவழியே போகவேண்டாம்" என்பது மூதாட்டியுரை. வதில் மிகத் தேர்ச்சி யுடையவராயினும் வெள்ளத்தில் நீந்துவோ மரணஞ் சம்பவிப்பது திண்ணம்; "நீர்விளையாடேல்" என்பது பவள் சொல். பரத்தையரிடத்தில் பல துஷ்டரும் வருவார்க லின் அவர்கள் பகை கொள்வதாலும், நோய் முதலியவற்றாலும் களை நேசிப்பவர்க்கு மரணம்வரும்; "மைவிழியார் மனையகல்" து ஔவை வாக்கு. அரசனைப் பகைப்பவர்க்கும் உடனே கேடு ; "அரசன் அன்றறுக்கும்" என்பது முதுமொழி. (௩0)

### எதுவும் விதியின்படியே நடக்குமெனல்.

இதுவுமது.

ழ்வது வந்த போது மனந்தனின் மகிழ வேண்டாங்
ழவது வந்த தானற் றளர்வரோ தக்கோர் மிக்க

ஊழ்வினை வந்த தானு லொருவரால் விலக்கப் போமோ
ஏழையா யிருந்தோர் பல்லக் கேறுதல் கண்டி லீரோ.

(ப-ரை.) (உலகிலுள்ளவர்களே!) வாழ்வது - (உயர்ந்த) வாழ்வானது, வந்தபோது-வந்து சேர்ந்த சமயத்தில், மனந்தனில்-மனத்தில், மகிழவேண்டாம்-(அது நிலையற்றதாதலின் அதன்பொருட்டு) மகிழ்ச்சி யடையவேண்டாம்; (அதுபோலவே, தாழ்வு வந்தபோதும் தளர்ச்சி யடையவேண்டாம்); தாழ்வது-அத்தாழ்வானது, வந்ததானால் வந்து சேருமானால், தக்கோர்-(அறிவுடைய) மேலோர், தளர்வரோ-தளர்ச்சி யடைவார்களோ? (விதிப்பயனென்று நினைத்துத் தளரா திருப்பார்: நன்மை தீமை யிரண்டும் விதிப்படியே வருமாதலின்); மிக்க-மிகுதியான, ஊழ்வினை-(நன்மை தீமைக்குரிய) அப்பழவினையானது, வந்ததானால்-வந்து நன்மையோ தீமையோ ஏற்படுமானால், (அவை), ஒருவரால்-ஒரு மனிதரால், விலக்க-நீக்க, போமோ-அகலுமோ? (அகலமாட்டா); ஏழையா யிருந்தோர்-(முன்னே) தரித்திரரா யிருந்தவர், பல்லக்கு ஏறுதல் - (ஊழ்வினை வசத்தால்) பல்லக்கேறுதலை, கண்டிலீரோ - (நீர்) பார்த்திலீரோ?

(வி-ரை.) 'உலகிலுள்ளவர்களே' என்னும் விளி வருவிக்கப்பட்டது. 'வாழ்வு வந்தால் மகிழவேண்டாம்'என்பதற்கேற்ப, 'தாழ்வு வந்தால் தளரவேண்டாம்' என்பதும் உரையில் வருவித் துரைக்கப்பட்டது. 'கண்டிலீரோ' என்பதற்குமுன் 'நீர்' என்னும் தோன்றா எழுவாயும் வருவிக்கப்பட்டது. நன்மை தீமையிரண்டையுஞ் சமமாக வெண்ணி அனுபவிக்க வேண்டுமென்பது இச்செய்யுட் கருத்து. ()

பயனற்ற உறவு.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பருப்ப தங்கள்போ னிறைந்திடு நவமணிப்
பலன்க ளைக்கொடுத் தாலும்

விருப்ப நீங்கிய கணவரைத் தழுவுதல்
வீண தாம்விரை யார்ந்த
குருக்கொள் சந்தனக் குழம்பினை யன்பொடு
குளிர் தரவணிந்தா லும்
செருக்கு மிஞ்சிய வற்பர்தந் தோழமை
செய்வ திங்கா காதே.

(ப-ரை.) பருப்பதங்கள் போல் - மலைகளைப்போலக் (குவியல் குவியலாக), நிறைந்திடும் - அதிகரிக்கும், நவமணி - ஒன்பதுவகை இரத்தினங்களின், பலன்களை - இலாபங்களை, கொடுத்தாலும் - உதவினாலும், விருப்பம் நீங்கிய-(மனத்தில்) அன்பில்லாத, கணவரை-நாயகரை, தழுவுதல்-(ஒரு பெண்) கூடிவாழுதல், வீணதாம்-பயனற்ற வாழ்க்கையாம்;(அதுபோல அற்பர்), விரை ஆர்ந்த-வாசனை நிறைந்த, குருக்கொள் - (நல்ல) நிறத்தைக்கொண்ட, சந்தனக் குழம்பினை - சந்தனக் குழம்பை, இன்பொடு - (நடிப்பான) அன்புடனே, குளிர் தர - (தேகத்தில்) குளிர்ச்சி யுண்டாகும்படி, அணிந்தாலும் - பூசிப் பொய்ந்நேயம் பாராட்டினாலும், செருக்கு மிஞ்சிய - (மனத்திலே) அகங்கார மிகுந்த, அற்பர் தம் - அப் புலவருடைய, தோழமை - உறவை, செல்வது - (ஒருவர் தமக்கு) உண்டாக்குவது, (அஃதாவது: அவர் நேயத்தைக் கொள்வது), இங்கு - இவ்வுலகத்தில், ஆகாது - கூடாது.

(வி-ரை.) நவ ரத்தினங்களாவன: கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. "காதலிருவர் கருத்தொருமித் தாதரவு பட்டதே யின்பம்' என்று மூதாட்டி கூறியபடி, மனைவி புருடன் ஆகிய இருவரும் மனமொத்து வாழ்தலே சிறப்புடைத்து; இருவருள் ஒருவரேனும் இதற்கு மாறாக விருப்பின் பயனில்லையாதலின், அன்பற்ற நாயகரைச் சேர்ந்து வாழ்தல் வீணென்று இச்செய்யு ளாசிரியர் கூறினர். (௩௨)

## அற்பரியல்பு.

கலிவிருத்தம்.

பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும்
மருத்துள தோவெனில் வாக டத்திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமே.

(ப-ரை.) (அற்பருக்கு), பெருத்திடு - அதிகரிக்கும், செல்வமாம்- செல்வமாகிய, பிணி-நோயானது, வந்து உற்றிடில்-வந்து கூடினால், (அப்பிணியின் செய்கையாலே), உரு-(அவர்களின் முன்னே எதிர்ப்பட்டவருடைய) வடிவம், தெரியாமல்-(பலநாள் பழகியிருந்தாலும்) தெரியாதபடி, ஒளி - (அவர்களுடைய) கண்ணொளியானது, மழுங்கிடும்-குறையும்; (அஃதாவது: அச்செல்வச் செருக்கால் எதிர்ப்பட்டவரோடு வார்த்தை யாடாது அறியாதவர்போற் செல்வர்); மருந்து-(இவ்வாறு கண்ணொளியை மழுக்கிய அச்செல்வமாகிய பிணிக்கு) அவுடதம், உளதோ எனில்-இருக்கின்றதோ என்று ஆராயின், வாகடத்து-வைத்திய சாஸ்திரங்களில், இல்லை-கிடையாது; (பின்னை எதனால் இது தீருமெனில்), தரித்திரம் என்னும்-வறுமையென்கிற, ஓர் - ஒப்பற்ற, மருந்தின் - அவுடதத்தாலேயே, தீரும் - அகலும்.

(வி-ரை.) செல்வம் அற்பருக்குக் கெட்ட குணத்தை உண்டாக்குகிறபடியால், அது பிணி யென்று கூறப்பட்டது. "இயல்பினும்...'' (நன். உயி. பு.) கரு என்னுஞ் சூத்திரவிதிபற்றி, 'உருத்தெரியாமலே' என்பதில் வலி மிக்கது. மருத்து-மருந்து என்பதன் வலித்தல் விகாரம். (௩௩)

## வேசையர் நெஞ்சக் கருத்தை அளவிட முடியாதெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அத்தியின் மலரும் வெள்ளை யாக்கைகொள் காக்கைதானும்
பித்தர்தம் மனமு நீரிற் பிறந்தமீன் பாதந் தானும்

அத்தன்மால் பிரம தேவ னுலள விடப்பட் டாலுஞ்
சித்திர விழியார் நெஞ்சந் தெளிந்தவ ரில்லை கண்டீர்.

(ப-ரை.) அத்தியின்-அத்தி மரத்தினுடைய, மலரும் - பூவும், வெள்ளை-வெண்மை நிறம்பொருந்திய, யாக்கை - உடம்பை, கொள்-கொண்ட, காக்கைதானும்-காக்கையும், பித்தர்தம்-பைத்தியங் கொண்டவர்களுடைய, மனமும் - மனக்கருத்தும், நீரில் பிறந்த - ஜலத்திலுண்டாகிய, மீன் - மீனினுடைய, பாதந்தானும் - பாதமும், அத்தனல் - சிவனும், மாலால் - விஷ்ணுவாலும், பிரமதேவனல் - பிரமதேவனலும், அளவிடப்பட்டாலும்-(ஒருசமயம்) ஆராய்ந்து அளவிட்டறியப்பட்டாலும், சித்திரம் - அழகுவாய்ந்த, விழியார் - கண்களையுடைய பரத்தையரது, நெஞ்சம் - மனக்கருத்தை, தெளிந்தவர்-(அத்தேவர்களுள்ளும்) நிச்சயித் தறிந்தவர்கள், இல்லை - ஒருவருமில்லை.

(வி-ரை) சிவன் முதலிய மூத்தேவர்களால், உலகத்தவர் அறிய முடியாத அத்திமலர் முதலியன ஒருசமயம் அளவிட் டறியப்பட்ட போதிலும், பரத்தையர் நெஞ்சத்தை அளவிட்டறிதல் அவராலும் முடியாதென்பது இச்செய்யுளின் கருத்து. 'ஆல்' என்னும் மூன்றனுருபு மூன்றிடத்தும் கூட்டப்பட்டது. கண்டீர்-ஒருவகை அசை.

### அற்பர், துர்ப்போதனையால் சிநேகத்தைக் கைவிடுவா ரேன்பது.

இதுவுமது

சொல்லுவார்வார்த்தைகேட்டுத்தோழமையிகழ்வார்புல்லர்
நல்லவர் விசாரி யாமற் செய்வரோ நரிசொற் கேட்டு
வல்லரி யெருதுங் கூடி மாண்டதோர் கதையைப் போலப்
புல்லிய வொருவ ராலே போகுமே யற்பர் நேசம்.

(ப-ரை.) புல்லர் - அற்பர், சொல்லுவார் - (துர்ப்போதனை) சொல்பவருடைய, வார்த்தை கேட்டு-(மித்திரபேதமான) வார்த்தை

களைக் கேட்டு (நன்றாக விசாரியாமல்), தோழமை - ஒருவருடைய சிநேகத்தை, இகழ்வார் - இகழ்ந்து அவர்க்குத் தீங்குசெய்வார்; நல்லவர் - (நட்பின் தன்மையை அறியும்) நற்குணமுடையார், (ஒருவர் தம் சிநேகிதர்மீது பிழை கூறினும்), விசாரியாமல்-(அதைப் பற்றி நன்றாக) விசாரித்துத் தெரிந்துகொள்ளாமல், செய்வரோ- (சிநேகிதர்க்குத்) தீங்கு செய்வாரோ? (ஒரு நாளும் செய்யமாட்டார் கள்: அற்பரே அவ்வாறு செய்வார்கள்); அற்பர் நேசம் (மேற்கூறிய) புல்லருடைய நேசம், (இன்னும் எப்படிப்பட்டதெனில்), வல் அரி- வலிய ஒரு சிங்கமும், எருதும் - (ஒரு) காளையும், கூடி - உறவு பூண்டு, (ஒரு நரி அச் சிங்கத்துக்குச்செய்த துர்ப்போதனையாலே), மாண்டதோர் - (அவ்வெருது அப்புலியால்) இறந்ததாகிய ஒரு, கதையைப்போல - சரித்திரத்தைப்போல, புல்லியர் ஒருவராலே - (மித்திரபேதஞ் செய்யும்) அற்பரொருவராலே, போகும்-நீங்கிவிடும்.

(வி-ரை.) நரியின் சொல்லைக் கேட்டுச் சிங்கம் எருதைக் கொன்ற கதை பஞ்சதந்திரம் மித்திரபேதத்தி லுளது. (௩௫)

## வைதல் இன்பமாகுதல்.

### கலிவிருத்தம்.

கதலி வீரர் களத்திடை வையினுங்
குதலை வாயிற் குழவிகள் வையினும்
மதிகொ ணேய மடந்தையர் வையினும்
இதமு றச்செவிக் கின்பம் விளையுமே.

(ப-ரை.) களத்திடை-போர்க்களத்தினிடத்திலே, கதலி-விரு துக் கொடியையுடைய, வீரர் - சேனாவீரர், வையினும்-(ஊக்கத்தை உண்டாக்கும் பொருட்டு ஒருவரை) வைதாலும்; குழவிகள் - குழந் தைகள், குதலைவாயின் - (சொல் நிரம்புதலில்லாத) குதலை மொழி களையுடைய வாயினாலே, வையினும்-(இளம்பருவத்தில்) வைதாலும்;

மதிகொள் - (இல்லறவியலை நடத்தத்தகுந்த) அறிவைக்கொண்ட, நேயம்-விசுவாசம் பொருந்திய, மடந்தையர்-மனைவியாகிய பெண்கள், வையினும் - (பிணக்குக் காலத்தில்) வைதாலும், (இவையெல்லாம்), செவிக்கு-அவருடைய செவிகளுக்கு, இதம் உற-நன்மையாகப் பொருந்துவதனாலே, இன்பம் விளையும்-இனிமை யுண்டாகும்.

(வி-ரை.) போர்க்களத்தில் வீரர் தம்சேனையில் ஒருவரை வைதலால், அவர்க்கு மிக்க ஆத்திரமுண்டாக, அதனால் அவர் வன்மையோடு யுத்தம்புரிந்து வெற்றிபெறுவாராதலின், அதனை இனிமையாகவே கொள்வர். பிள்ளைகள் எவ்வாறு வையினுந் தந்தையர்க்கு அது மிக்க மனக்களிப்பையே தரும்; "குழலினிது யாழினி தென்பர்தம் மக்கள், மழலைச்சொற் கேளா தவர்" என்பது திருக்குறள். ஊடற்காலத்தில் மனைவியர் வைதலைக் கணவர் இனிமையாகக் கொள்ளுதலும் இயற்கை.

## புத்தியுள்ளவனே பலவானெனல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

புத்திமான் பலவா னுவான் பலமுளான் புத்தி யற்றால்
எத்தனை விதத்தி னுலு மிடாது வந்தே தீரும்
மற்றொரு சிங்கந் தன்னை வனமுயல் கூட்டிச் சென்றே
உற்றதோர் கிணற்றிற் சாயல் காட்டிய கதையை யோர்வீர்.

(ப-ரை.) புத்திமான் - புத்தியையுடையவன், (தாழ்ந்தவனுயிருந்தாலும்), பலவான் ஆவான்-(தன் புத்தி நுட்பத்தால்) பலமுடையவனுவான்; பலம் உள்ளான் - (இயற்கையில்) பலமுடையவன், (உருவத்தில் பெரியவனு யிருந்தாலும்), புத்தி அற்றால் - (தனக்குரிய) புத்தியை இழந்தால், எத்தனை விதத்தினுலும் - (அவன் செய்யும்) எத்தனையோ வகையான சாமர்த்தியமான செய்கைகளாலும், இடாது - துன்பமானது, வந்தே தீரும் - (இவனுக்கு) நிச்சய

மாகவரும்; (புத்தியுள்ளவர்களே!), ஒரு சிங்கந்தன்னை-(வீரமுள்ள) ஒரு சிங்கத்தை, வனம் - காட்டிலுள்ள, முயல் - (ஒரு சிறிய) முயலானது, கூட்டிச் சென்று - (உபாயமாக) அழைத்துச் சென்று, (அதற்கு), உற்றதோர்-(ஆழம்) பொருந்தியதாகிய ஒரு, கிணற்றில்-கூபத்தில், சாயல் காட்டிய - (அதன்) பிரதிபிம்பத்தைக் காண்பித்து அதனை அதிற் பாயும்படி செய்து கொன்ற, கதையை-சரித்திரத்தை, ஓர்வீர் - ஆராய்ந்து (இவ்வுண்மையை) உணர்வீராக.

(வி-ரை.) மற்று-அசை. வந்தே-ஏகாரம் தேற்றம். காட்டிய கதை-என்பதில், 'அதனை அதிற் பாயும்படி செய்து கொன்ற' என்னும் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. 'ஓர்வீர்' என்பதற்கேற்ப, 'புத்தி யுள்ளவர்களே!' என்னும் விளியும் வருவித்துரைக்கப்பட்டது. சிங்கத்தை முயல் கிணற்றில் வீழ்த்திக் கொன்ற கதை பஞ்சதந்திரம் மித்திரபேதத்தி லுள்ளது. (௧௭)

## மானமுள்ளோ ருயர்வு.

### இதுவுமது

மானமுள் ளோர்க டன்னோர் மயிரறி னுயிர்வா ழாத
கானுறு கவரி மான்போற் கனம்பெறு புகழே பூண்பார்
மானமொன் றில்லார் தாமு மழுங்கலாய்ச் சவங்க லாகி
ஈனமாங் கழுதைக் கொப்பா விருப்பரீ துண்மை தானே.

(ப-ரை.) மானம் உள்ளோர்கள் - (உலகத்தில்) மானமுடையவர்கள், தன்-தன்னுடைய, ஓர் - ஒரு, மயிர் அறின்-உரோமம் அறுபடினும், உயிர் வாழாத - உயிருடனிராத (அஃதாவது: மடிகின்ற), கான் உறு - காட்டிற் பொருந்திய, கவரிமான்போல் - கவரிமானைப் போல, (மானம் போகுமிடத்து உயிரைவிட்டேனும்), கனம் பெறு-உயர்வைப் பெறுகின்ற, புகழே - கீர்த்தியையே, பூண்பார் - தேடி ஆபரணமாக) அணிவார்கள்; மானம் - வெட்கம், ஒன்று - சிறிதும்,

இல்லார்-இல்லாதவர்கள், மழுங்கல் ஆய்-(தங்கள் புத்தி) மழுங்குத லடைந்து, சவங்கல் ஆகி-(தேகத்தில்) சோம்புதல் உண்டாகித் (தங் கட்கு நேர்ந்த மானக்கேட்டைப் பற்றிச் சிறிதும் சிந்தியாராகி), ஈனம் ஆம்-தாழ்மையான, கழுதைக்கு ஒப்பா - கழுதைக்கு நிகராக, இருப்பர்-உயிர்வாழ்ந் திருப்பார்கள், ஈது உண்மை-இது சத்தியம்.

(வி-ரை.) இல்லார்தாமும் - இதில்: தாம், உம் அசைகள். நீட் டல் விகாரத்தால் 'இது', 'ஈது' என நீண்டது. (௩அ)

## மூடரை மூடர் புகழ்ந்து கொள்ளுதல்.

கலித்துறை.

கழுதை காவெனக் கண்டுநின் றாடிய வலகை
தொழுது மீண்டுமக் கழுதையைத் துதிசெயல் போலும்
பழுதி லாநமக் கார்நிக ரிங்கெனப் பகரும்
முழுது மூடரை மூடர்கொண் டாடிடு முறையே.

(ப-ரை.) (எப்பொழுதும் அறிவற்ற செயல்களையே செய்தா லும் அவற்றைக் குற்றமுடையவையென ஓராமல் சிறந்த செயல்க ளாகவே நினைத்து), பழுது இல்லா-குற்றமற்ற, நமக்கு—, இங்கு - இவ்வுலகத்தில், யார் நிகர் - எவர் நிகராவர்?, என - என்று, பகரும் - (தம்மைப்போன்ற மூடரிடத்தே) சொல்லிப் புகழ்ந்து கொள்ளும், முழுது மூடரை - அறிவு முழுதும் மூடமான மடையரை, மூடர் - (அவரைப்போன்ற) அறிவீனர், கொண்டாடிடும் - (நம்மைப்போல வும் உலகத்திற் புத்தியிற் சிறந்தவ ரொருவரு மிரார் என்று) புகழ்ந் திடும், முறை - முறைமை, (எப்படிப்பட்டதெனில்), கழுதை - (விகார சப்தத்தையுடைய) கழுதையானது, கா என - கா என்று பெருங்குரலிட்டுக் கதற, கண்டு-(அவ்வாறு கதறிய அதனைப்) பார் த்து, (அதன் பெருங்குரலை இனிய இசையாகக் கருதி ஆனந்தங் கொண்டு), நின்று-அதனெதிரேநின்று, ஆடிய-ஆனந்தக்கூத்தாடிய,

அலகை-விகாரவடிவுள்ள பேயானது, மீண்டும் - திரும்பவும், தொழுது - (அவ்விசையின் இனிமைக்காக) வணங்கி, அக் கழுதையை - அந்தக் கழுதையை, துதிசெயல்-(நின்னுடைய குரலைப்போல் நான் எங்குங் கண்டதில்லை என்று) துதித்துக் கூறுவதை, போலும் - நிகர்க்கும்.

(வி-ரை.) வேப்பிலையை உணவாக உண்பவர் இதற்கு மிஞ்சின சுவையுள்ள உணவு வேறெங்கு மிராதென்று கூறி அதனைப் புகழ்ந்து கொள்வது இயற்கை. அதுபோல, மூடர் தம்முடைய இழி குணங்களையும் உயர்ந்த குணங்களாகக் கருதக் கூடியவராதலின் தங்கள் மூடமதிக்கேற்ப ஒருவரை யொருவர் புகழ்ந்து கொள்வர்.(௩௧)

## ஆசாரத்தின் உயர்வு.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆசாரஞ் செய்வா ராகி லறிவொடு புகழு முண்டாம்
ஆசார நன்மை யானு லவனியிற் றேவ ராவார்
ஆசாரஞ் செய்யா ராகி லறிவொடு புகழு மற்றுப்
பேசார்போற் பேச்சு மாகிப் பிணியொடு நரகில் வீழ்வார்.

(ப-ரை.) ஆசாரம் - ஒழுக்கத்தை, செய்வாராகில் - (உலகத்திலுள்ளவர்) செய்வார்களேயானல், (அவர்களுக்கு), அறிவொடு - ஞானத்துடனே, புகழும் - கீர்த்தியும், உண்டாம் - உண்டாகும்; (உலகத்தில் ஒருவருடைய) ஆசாரம் - ஒழுக்கமானது, நன்மையானல் - நன்மை யுடையதானல், (அந் நன்மையான ஆசாரத்தையுடையவர்), அவனியில்-உலகத்தில், தேவர் ஆவார்-(மனிதராயிருந்தாலும்) தேவரேயாவர்; (உலகத்தவர்), ஆசாரம்-ஒழுக்கத்தை, செய்யாராகில்-செய்யாமலிருப்பார்களேயானல், (அவர்), அறிவோடு-ஞானத்தோடு, புகழும் - கீர்த்தியும், அற்று - நீங்கி, (பலவிதமான பிணிகளைக் கொண்டு), பேசார்போல் - வாய் பேசாத ஊமைகளைப்போன்று,

பேச்சும் ஆகி - தங்களுடைய பேச்சும் அவயக் குறிப்பாற் பேசும் பேச்சாக, (அஃதாவது: நா உள்ளே யிழுத்துப் பேச்சுக் குறைய), பிணியொடு-அந் நோயுடனே, (இம்மையில் துன்பத்தை யடைந்து), நரகில் வீழ்வார் - (மறுமையில்) நரகத்திலே விழுந்து வருந்துவார்.

(வி-ரை.) பேச்சுமாகி - இதில் ஆக என்னும் செயவெனெச்சம் ஆகி என்னும் செய்தனெச்சமாகத் திரிந்துவந்தது. (௩௦)

அற்பருக்குச் செல்வம்வந்தால் வீண்செருக்கடைவரேன்பது.

இதுவுமது

செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணார்
சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார்
வெல்வதே கருமமல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்
வல்வினை விளையு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்.

(ப-ரை.) மண்ணின் மேல் - இந் நிலவுலகத்தின்மீது, வாழும்-வாழ்கின்ற, மாந்தர் - (அறிவற்ற) மனிதர்கள், (தங்களுக்கு), செல்வம் - ஐசுவரியமானது, வந்து உற்றகாலை - வந்து சேர்ந்தபொழுது, தெய்வமும் - (தெய்வங்களுக்காதாரமான) தெய்வத்தையும், சிறிது - சிறிதுபோதாவது, பேணார் - விரும்பித் தியானிக்கமாட்டார்கள்; சொல்வன - (சமயத்துக்குப் பொருந்துமாறு) சொல்லத்தக்க வார்த்தைகளை, அறிந்து - ஆராய்ந்து, சொல்லார் - பிறர் திருப்தியடையும் படி) பேசமாட்டார்கள்; சுற்றமும்-பந்துக்களையும், துணையும்- உதவி செய்யும் நண்பரையும், நோக்கார் - (தமக்குரியவராகக்) கருதமாட்டார்கள்; (இன்னும் அவர்களுக்குத் தங்களுடைய செருக்கால்), வெல்வதே - வெற்றிகொள்ளுங் கருத்தே (அஃதாவது: பிறரை வெல்ல வேண்டுமென்று நினைப்பதே), கருமம் அல்லால்-காரியமாகுமல்லாமல், (எதிரிகள் வலிமையுடையவரா யிருந்தாலும்), வெம்பகை -

அவர்களுடைய கொடிய விரோதத்தை, வலிது என்று-வலிமையுடையதென்று, எண்ணார்-அவர் நினைக்கமாட்டார்; வல் வினை-கொடிய செய்கையால் வரும், விளைவும் - பாவ சம்பவத்தையும், ஓரார் - (கெட்டதென) ஆராய்ந்தறியாமலழிவர்.

(வி-ரை.) நோக்கார் என்பதிலுள்ள நோக்கம், நோக்கனோக்கம் ஆகி எண்ணார் என்னும் பொருள்பட்டது. நோக்கனோக்கம் (நோக்கு அல் நோக்கம்)-கண்ணால் பார்க்கும் பார்வையல்லாத பார்வை; அஃதாவது: மனப்பார்வை. (சக)

## காலம், வலி, இடம் இவற்றை நோக்கிக் காரியம் நடத்தவேண்டுமேன்பது.

### கலிவிருத்தம்.

*யானையைச் சலந்தனி லிழுத்த வக்கரா*
*பூனையைக் கரைதனிற் பிடிக்கப் போகுமோ*
*தானையுந் தலைவருந் தலம்விட் டேகினாற்*
*சேனையுஞ் செல்வமுந் தியங்கு வார்களே.*

(ப-ரை.) யானையை - கரியை, சலந்தனில் - (தனக்குவலிமையைத்தரும் தன்னுறைவிடமாகிய) நீரில், இழுத்த-வெளவி யிழுத்த, அக்கரா-அவ்வலிபொருந்திய முதலையானது, பூனையை-(உருவத்திலும் வலியிலும் சிறிதாகிய) பூனையை, கரையில் - (தனக்கு வலிகுறையும்) கரையிலே, பிடிக்க - பிடிப்பதற்கு, போகுமோ - செல்லுமோ,? (தனக்குப் பலந்தரும் நீரைவிட்டு வெளியிலே சென்றால் அச்சிறிய பிராணியையும் பிடித்தல் நம்மாலியலாதென்று நினைத்துச் செல்லமாட்டாது; அதுபோல அரசரும் காலம் வலி இடம் முதலியவற்றை ஆராய்ந்து பகைவரோடு எதிர்க்கவேண்டும்; அவ்வாறின்றி), தலைவரும் - (சேனைகளுக்குத் தலைவராகிய) அரசரும், தானையும் - தங்கள் சேனையும், தலம்விட்டு-தங்கட்கு வலிமையைத் தருமிடத்தை

விட்டு, ஏகினுல் - வலிமை குறையு மிடத்தில் எதிர்க்கச் சென்ருல், சேனையும் - (அவர்களுடைய) படையும், செல்வமும்-ஐசுவரியமும், (நிலைகுலையப் பெற்று), தியங்குவார்கள் - (வலியின்றிப் பகைவரிடம் அகப்பட்டு) மயங்குவார்கள்.

(வி-ரை.) சேனையுஞ் செல்வமுந் தியங்குவார்கள் - இத்தொடரில் சினைவினை முதலொடு முடிந்தது. 'நிலைகுலையப்பெற்று' என்பது சொல்லெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. (சஉ)

## சாஸ்திரப் பயிற்சியும் நற்குணமுமில்லா மங்கையரைக் கூடலாகா தெனல்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கொண்டநற் கலைக ளோடு குணமிலாக் கோதை மாரைக்
கண்டுவிண் டிருப்ப தல்லாற் கலக்கலா காது புல்லின்
உண்டென மதுவை யுண்ண வோவியப் பூவில் வீழ்ந்த
வண்டினம் பட்ட பாடம் மனிதரும் படுவர் தாமே.

(ப-ரை.) கொண்ட - (ஆராய்ந்து மனத்துட்) கொண்ட, நல்கலைகளோடு - நல்ல சாஸ்திரப் பயிற்சியோடு, குணம் - நற்குணமும், இல்லா-இல்லாத, கோதைமாரை-பெண்களை, கண்டு-பார்த்து, (அவர் அழகுடையவரா யிருந்தாலும்), விண்டு - விட்டு விலகி, இருப்ப தல்லால்-இருப்ப தல்லாமல், கலக்கல் ஆகாது-(அவர்களுடைய அழகை விரும்பிக் கலியாணஞ் செய்துகொண்டுஅவர்களுடன்)கூடலாகாது; புல்லின் - (அவ்வாறின்றி அவர்களை மணம் புரிந்துகொண்டு) கலந்தால், ஓவியப்பூவில் - சித்திரத்தில் எழுதின தாமரைப்பூவில், மது உண்டு என - தேன் இருக்கின்றது என்று நினைத்து, மதுவை உண்ண-அத்தேனை உண்ணும்பொருட்டு, வீழ்ந்த-(அப்பூவினிடத்தே) விழுந்து அடிபட்டு வருந்திய, வண்டினம்-வண்டுக் கூட்டங்கள், பட்டபாடு-அடைந்த துன்பத்தில், அம்மனிதரும் - (அவ்வாறு நற்குண

மில்லாப் பெண்களைக்கூடிய) அம்மானிடரும், படுவர் - அகப்பட்டு வருந்துவர்.

(வி-ரை.) மது - என்பதைத் தீபகமாக்கி, 'மது உண்டென', 'மதுவை உண்ண' என இரண்டிடத்துங் கூட்டுக. இச்செய்யுட் கருத்தால், சாஸ்திரப்பயிற்சியும் நற்குணமும் இல்லாப் பெண்ணை மணக்கலாகா தென்பதும், அவ்வாறு மணந்தால், சித்திரப்பூவில் மதுவுள்ள தென்று நினைத்து அதன்மேல் வீழ்ந்து வருந்திய வண்டுக் கூட்டங்களைப்போல, அம்மாதரிடம் குணமில்லாக் காரணத்தால் வருந்துதல் கூடுமென்பதும் விளங்கும். (சரு)

## மயில், குயில் முதலியவற்றின் குணங்களை உடையவரைத் தெய்வமாகக் கருதவேண்டுமெனல்

இதுவுமது.

மயில்குயில் செங்கா லன்னம் வண்டுகண் ணாடி பன்றி
அயிலெயிற் றரவு திங்க ளாதவ னாழி கொக்கோ [மை
டுயரும்விண் கமலம் பன்மூன் றுறுகுண முடையோர் தம்
இயலுறு புவியோர் போற்று மீசனென் றெண்ண லாமே.

(ப-ரை.) மயில்-மயிலும், குயில்-குயிலும், செம் கால் - சிவந்த கால்களையுடைய, அன்னம்-அன்னமும், வண்டு-வண்டும், கண்ணாடி-பளிங்குக் கண்ணாடியும், பன்றி - வராகமும், அயில் - கூர்மையான, எயிறு - பற்களையுடைய, அரவு - சர்ப்பமும், திங்கள் - சந்திரனும், ஆதவன் - சூரியனும், ஆழி - சமுத்திரமும், கொக்கோடு - கொக்கும், உயரும் விண் - உயர்ந்த ஆகாயமும், கமலம் - தாமரையும், (ஆகிய), பன்மூன்று - இப்பதின்மூன்றினிடத்தும், உறு குணம் - பொருந்துகின்ற குணத்தை, உடையோர்தம்மை-உடையவர்களை, இயல் உறு-நற்குணம் பொருந்திய, புவியோர் - உலகத்திலுள்ளவர், போற்றும்-

வணங்கித் துதிக்கத்தக்க, ஈசன் என்று - கடவுள் என்று, எண்ண லாம் - கருதலாம்.

(வி - ரை.) கொக்கோடு - இதில் ஒடு எண்ணுருபு. மயிலுக் குள்ள நற்குணமாவது: மூத்தமயில் உள்ளவரை இளைய மயில்கள் தோகைவிடமாட்டா; இதனை மிக்க ஆராய்ச்சியுடையார் கூறுகின்ற னர்; "மயில்முறையா யிருத்தல்வேண்டும்" என்று ஒரு பழமொழி யும் வழங்குகின்றது. குயிலுக்குள்ள குணமாவது: குயில் காக்கை யின் கூட்டில் அக் காக்கையிட்ட முட்டைகளோடு முட்டையிட்டு விட்டுச் சிரமமில்லாமல் பக்கத்தே காத்திருந்து, அக்காக்கை அடை கிடந்து குஞ்சுகளை வெளிப்படுத்தியவுடன் தன்னுடைய குஞ்சுக்கு மாத்திரம் இரையூட்டி, அக்குஞ்சு காக்கையினிடமும் இரைவாங்கி யுண்டு இருவகை யுணவாலும் பருத்துப் பருவமடைந்தவுடன் அத னைத் தன்னுடன் கூட்டிச்செல்லும்; அக்குஞ்சும் தன் உண்மைத் தாயுடன் விசுவாசமாகச் சேர்ந்துகொள்ளும்; இவ்வருமைச் செயலை நாம் நேரில் பார்த்திருக்கின்றோம். அன்னத்துக்குள்ள குணமாவது: அன்னம் பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலைமாத்திரம் பரு கும்; "கல்வி கரையில கற்பவர் நாள்சில, மெல்ல நினைக்கிற் பிணி பல—தெள்ளிதின், ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப், பாலுண் குருகிற் றெரிந்து" என்னும் நாலடிச்செய்யுள் இதனை வலியுறுத்தும். வண்டுக்குள்ள குணமாவது: இஃது, உலகத்தில் எத்தனையோ உணவுக ளிருப்பினும், அவற்றையெல்லாம் உண்ணாது எல்லாவற்றினு மிகுந்த சுவையுள்ள தேனையே தேடி யுண்ணும்; இதனை, "வண்டே கானத் திடை யிருந்தும் வந்தே கமல மதுவுண் ணும்" என்பதாலுணர்க. கண்ணாடிக்குள்ள குணமாவது: இது, தனக்கெதிர்ப்பட்ட பொருளைச் சிறிதும் ஒளிக்காமல் உள்ளபடியே காட்டிவிடும்; "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங் கடுத்தது காட்டு முகம்" என்னுந் திருக்குறள் இதனை யுணர்த்தும். பன்றிக்

4

துள்ள குணமாவது: ஒரு தாய் வயிற்றிற் பிறந்த ஆண் பன்றிகளுள் மூத்தபன்றி யிருக்கும்வரை இளைய ஆண்பன்றிகள் பெட்டைக ளோடு சேர்வதில்லையென உலக அனுபவமுள்ள சில பெரியோர் கூறக் கேட்டிருக்கின்றோம்; இஃதன்றி, இது ஒரு காரியங் கருதி ஒரு திசையை நோக்கிச் சென்றால், இடையில் என்னதடை நேர்ந் தாலும் அத்தடையால் திரும்பாது மடங்கி மடங்கி யோடிக் குறித்த விடமே போய்ச்சேரும்; இஃதனுபவம். அரவத்தின் குணமாவது: மந்திரத்துக்குக் கட்டுப்பட்டு அடங்கும்; "கல்லெறிந் தன்ன கயவர்வா யின்னாச்சொல், எல்லாருங் காணப் பொறுத்துய்ப்பர் - ஒல்லை, இடு நீற்றாற் பையவிந்த நாகம்போற் றத்தம், குடிமையான் வாதிக்கப் பட்டு" என்னும் நாலடிச் செய்யுளால் இவ்வுண்மை விளங்கும். சந் திரன் குணமாவது: இது நெடுந்தூரத்தி லிருந்தாலும் பூமியிலுள்ள ஆம்பலை மலர்விப்பதும், இருளை நீக்கி உலகத்தி லுள்ளவர்க்குக் குளிர்ச்சியைத் தருவதுமாம்; இச்செயல்கள் இதற்கு உண்டென் பதை, இந்நூலின் 'மங்குலம்பதினாயிரம்' என்ற செய்யுளில், "திங்க ளாதவற் கிரட்டியோசனையுறச் சிறந்திடு மரக்காம்பல்" என்ற மூன் றா மடியயாலும், "மண்டலம் பயிலுரகர் பேருயிர்ப்பினுன் மயங்கி, டலம் பொரவருந்திய பெருந்துயர் மாற, மண்டலந்தனை நிழலெனு மரபினாற் றனது, மண்டலம்பொழி யமிழ்தின் மெய்குளிரவே வைத்தோன்" என்ற பாரதச் செய்யுளாலும் உணர்க. சூரியன் குண மாவது: இது மிக்க தூரத்தி லிருந்தாலும் தாமரையை மலர்வித் தலும், உலகத்தைவிழிக்கச்செய்து உதவி புரிவதுமாம்; இவ்வுண் மை, மேற்கூறிய 'மங்குலம் பதினாயிரம்' என்ற செய்யுளின் "தங்கு பானுநூ றுயிரம்யோசனை தாமரை முகம் விள்ளும்" என்ற இரண் டா மடியாலும், இதற்குள்ள 'அலரி' என்னும் பெயராலும் நன் குணரப்படும்; அலரி-உலகத்தை மலர்விப்பது; அதாவது: விழிக்கச் செய்வது. சமுத்திரத்தின் குணமாவது: சலதாரை நீர் முதலிய தாழ்ந்த நீரையும் விலக்காது தன்னுடைய இனமென்று சேர்த்துத்

தழுவிக்கொள்ளுதல்; இதனை, "சலதாரை வீழு நீருஞ் சாகரந் தன்னைச் சார்ந்தாற், குலமென்றே சொல்வ தல்லாற் றுறைகடல் வெறுப்பதுண்டோ" என்பதனாலுணர்க; இன்னும் இஃது எல்லை கடவாதிருத்தலையுங் கூறலாம். கொக்கின் குணமாவது: இது, நீரோடையில் பல சிறு மீன்களோடினும் அவற்றைப் பிடிக்காமல் பொறுமையோடு ஒரு பெருமீன் வருமளவுங் காத்திருந்து அதனைப் பிடித்து ஒரே சமயத்தில் தன் பசியைத் தணித்துக் கொள்வதாம்; இதனை, "அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக், கடக்கக் கருதவும் வேண்டா — மடைத்தலையில், ஓடுமீ னோட வுறுமீன் வருமளவும், வாடி யிருக்குமாங் கொக்கு" என்ற வாக்குண்டாம் செய்யுளா லுணர்க. ஆகாயத்துக்குள்ள குணமாவது: களங்கமற்றிருத்தலும், தன்னெல்லையை அளவிடக்கூடா திருத்தலுமாம். தாமரையின் குணமாவது: தன் நாயகனாகிய சூரியன் ஒருவனுக்கே முகமலர்வதாம்; இதுவும், 'மங்குலம்பதினாயிரம்' என்ற செய்யுளா லுணரப்படும்.

பன்றி என்பதை அன்றில் எனப் பாடமோதலு மொன்று; அவ்வாறு கூறின், அன்றில் துணையைப் பிரிந்து உயிர் வைத்திராத தன்மையை அதன் சிறந்த குணமாக வுரைக்கலாம்.

ஆகவே, மயிலைப்போல முறைமை கடவாதவரையும், குயிலைப் போல புத்திநுட்பமும் இனந் தழுவிக்கொள்ளுதலு முடையவர்களையும், அன்னத்தைப்போல நன்மை தீமைகளை ஆராய்ந்து நன்மையைக் கைக்கொள்ளத் தக்கவரையும், வண்டைப்போல உயர்ந்த வஸ்துவையே நாடக்கூடியவர்களையும், கண்ணாடிபோலக் கண்டதை ஒளிக்காமல் வெளிப்படுத்தக்கூடிய மெய்ம்மை யுடையாரையும், பன்றிபோல முறைமையை அல்லது உத்தேசித்ததை நிறைவேற்றும் உறுதியை யுடையாரையும், (அல்லது அன்றிலைப்போலத் துணைவர் பொருட்டு உயிர் கொடுப்போரையும்), அரவத்தைப்போலச்

சத்தியத்துக்குக் கட்டுப்படுவோரையும், சந்திரனைப்போலத் தமக்குரியாரை மகிழ்வித்து உலகினுக்கு இனிமையைத் தருவோரையும், சூரியனைப்போலத் தமக்குரியவரை முகமலர்வித்து உலகத்தவரை அஞ்ஞானமாகிய தூக்கத்தினின்றும் விழித்தெழச் செய்வோரையும், சமுத்திரத்தைப்போலச் சுற்றந் தழுவுதலையும், ஆணை கடவாத் தன்மையையு முடையாரையும், கொக்கைப்போலப் பொறுத்திருந்து பெருங் காரியத்தை முடிக்கும் மதிநுட்ப முடையோரையும், ஆகாயத்தைப்போலக் களங்கமற்ற தன்மையையும், அளந்தறிய முடியாத அறிவு மிகுதியையும் உடையாரையும், தாமரையைப்போலத் தமக்குரியார்க்கே முகமலரும் கற்பு வாய்ந்தவரையும் தெய்வம்போலக் கருதவேண்டுமென்பது இச்செய்யுட் கருத்தால் விளங்கும்.

## பயனற்றவை.

### கலிவிருத்தம்.

தெருளிலாக் கலையினர் செருக்கு மாண்மையும்
பொருளிலா வறிஞரைம் பொறி யடக்கமும்
அருளிலா வறிஞர்த மௌன நாசமுங்
கருவிலா மங்கையர் கற்பு மொக்குமால்.

(ப-ரை.) தெருள் இல்லா - தெளிவில்லாத, கலையினர் - கல்வியாளருடைய, செருக்கும் - அகங்காரமும், ஆண்மையும் - மன வன்மையும்; பொருள் இல்லா - திரவியமில்லாத, வறிஞர் - தரித்திரர்களுடைய, ஐம்பொறி அடக்கமும் - பஞ்சப்பொறிகளின் அடக்கமும்; அருள் இல்லா - கிருபை யில்லாத, அறிஞர் - ஞானிகளுடைய, மௌன நாசமும் - மௌன நீங்குகையையும்; கரு இல்லா - சந்ததியில்லாத, மங்கையர் பெண்களுடைய, கற்பும் - கற்பின் தன்மையும், (பயனற்றவாய்), ஒக்கும் - (குணத்தில் ஒன்றற்கொன்று) சமமாகும்

(வி-ரை.) தெளிந்த கல்வியில்லாதவர் செருக்கையும் ஆண்மையையு மடைந்தால் அவர்க்கு இழிவுண்டாகுமேயன்றிப் புகழ்சேராது; ஆதலின், அவர் அவற்றை யடைவதால் பயனொன்றுமில்லை. உலகில் பொருளுடையவர்க்கே ஐம்பொறிகளாலும் நுகரப்படும் நுகர்ச்சி எளிதிற் கிடைக்கும்; அதனால் அவர்களுடைய பொறிகளின் வழியே புலன்கள் தடையின்றிச் செல்லும்; ஆதலின், அவர்கள் ஐம்பொறிகளையு மடக்குதலே சிறந்ததாம்; வறிஞர் ஐம்பொறிகளை அடக்காது விடினும் நுகர்ச்சி யெய்தப்பெறா ராதலின், அவர் அடக்கலும் அடக்காதிருத்தலும் ஒன்றேயாம்; ஆகவே, அவர்களுடைய ஐம்பொறி அடக்கத்தாற் சிறப்பில்லை. அருளற்ற ஞானிகள் வாய் திறந்து பேசினும் அப்பேச்சால் உலகத்தார்க்குப் பயனொன்றுமில்லை. நல்ல சந்ததிகளைப் பெற்று உயர்ந்த வாழ்வடைதலே கற்பின் பயனாதலால், அச் சந்ததி முதலியன இல்லாத பெண்களுடைய கற்பும் பயனற்றதாம். கருவிலா - இதில் கரு-என்னும் பகுதி உகரச்சாரியையும் வகரவுடம்படு மெய்யும் பெற்று, 'உயிர்வரி னுக்குறண் மெய்விட்டோடும்' என்ற சூத்திரவிதியால் அவ்வுகரங் கெட, இல் ஆ - என்ற எதிர்மறை விகுதிகளை யேற்று வந்தது. ஆல்-அசை. (சஔ)

## சிநேகத்தின் உயர்வு.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மங்கு லைம்பதி னாயிரம் யோசனை மயில்கண்டு நடமாடும்
தங்கு பானுநா றாயிரம் யோசனை தாமரை முகம்விள்ளும்
திங்களாதவற் கிரட்டியோ சனையுறச் சிறந்திடு மரக்காம்பல்
எங்கணாயினு மன்பரா யிருப்பவ ரிதயம்விட் டகலாரே.

(ப-ரை.) ஐம்பதினாயிரம் யோசனை - ஐம்பதாயிரம் யோசனை தூரத்திலிருக்கின்ற, மங்குல் - மேகத்தை, மயில் கண்டு - மயிலானது பார்த்து, நடம் ஆடும்-(களித்து) நர்த்தனஞ் செய்யும்; நூறாயி

ரம் யோசனை - இலட்சம் யோசனை தூரத்தில், தங்கு - தங்குகின்ற, பானு-சூரியனை, தாமரை (கண்டு) - தாமரை யரும்பானது பார்த்து, முகம் விள்ளும் - முகம் மலரும்; ஆதவற்கு - அச்சூரியனுக்கு, (அஃதாவது: அவனிருக்குந் தூரத்தினும்), இரட்டி யோசனை - (அதைப் போல்) இரண்டுபங்கு அதிகமான யோசனை தூரத்தில், (அஃதாவது இரண்டிலட்சம் யோசனை தூரத்தில்), திங்கள் உற - சந்திரன் பொருந்தியிருக்க, (அவனைக் கண்டு), அரக்கு ஆம்பல் - செவ்வாம்பலரும்பு, சிறந்திடும் - மலர்ந்து சிறந்திடும்; (இவைபோல), அன்பரா யிருப்பவர் - (ஒருவர்க்கு) அன்புடையவரா யிருப்பவர், எங்கண் ஆயினும் - எவ்விடத்தி லிருந்தாலும், (அவர்) இதயம் விட்டு-அவருடைய மனத்தைவிட்டு, அகலார் - நீங்கமாட்டார்.

(வி-ரை.) ஐம்பதினாயிரம்யோசனை மங்குல்-ஏழாம் வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்கதொகை. நூறுயிரம் யோசனை தங்கு ஏழாம் வேற்றுமையுருபு தொக்கதொகை. கண்டு என்பதைத் தீபகமாக்கித் தாமரைக்குங் கூட்டுக. ஆதவற்கு - இதில் நான்கனுருபு எல்லைப் பொருளில் வந்தது. யோசனை - நான்கு காதம்; ஒருகாதம் ஏழரை நாழிகை வழி; நான்கு கூப்பிடு தூரங் கொண்டதே காதமென்று சிலர் கூறுவர். யோசனையி னளவு பலவகையாக வழங்குகின்றது: ஜைனர் நாற்காதந்தான் யோசனையென்றும், மலைநாட்டார் நான்கு நாழிகைவழி அல்லது ஏழரை நாழிகைவழி யோசனையென்றும், வடநாட்டார் ஆறு நாழிகைவழி யோசனை யென்றுங் கூறுவர்.

## பயனற்றவை.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சந்திர னில்லா வானந் தாமரை யில்லாப் பொய்கை
மந்திரி யில்லா வேந்தன் மதகரி யில்லாச் சேனை
சுந்தரப் புலவ ரில்லாத் தொல்சபை சுதரில் வாழ்வு
தந்திக ளில்லா வீணை தாலியில் மங்கை போலாம்.

(ப-ரை.) சந்திரன் இல்லா-மதி பிரகாசிக்காத, வானம்-ஆகாயமும்; தாமரை இல்லா - தாமரைக்கொடி படர்ந்து மலரப்பெறாத, பொய்கை - குளமும்; மந்திரி இல்லா - (நன்மை தீமைகளை ஆராய்ந்துரைக்கும்) அமைச்சனில்லாத, வேந்தன் - அரசனும்; மதகரி இல்லா- மதம் பொருந்திய யானையில்லாத, சேனை - படையும்; சுந்தரம் - அழகு நிறைந்த, புலவர் இல்லா - வித்வான்களில்லாத, தொல் சபை - பழமையான சபையும்; சுதர் இல்-நற்புத்திரரில்லாத, வாழ்வும்- இல்வாழ்க்கையும்; தந்திகள் இல்லா - (வாசித்தற்குரிய) நரம்புகளில்லாத, வீணை - யாழும்; தாலி இல் - திருமங்கலியமில்லாத, மங்கை போலாம் - கைம் பெண்ணைப்போலச் சிறப்பற்றனவாம்.

(வி-ரை.) அஃறிணை மிகுந்திருக்கும் மிகுதிபற்றி, 'வேந்தன்' என்னும் உயர்திணையும் அஃறிணை முடிபை யேற்றது. (சஎ)

## எப்பொழுதும் ஏற்படாதவை.

### கலிவிருத்தம்.

குரைகடல் வறுமையுங் குறத்தி யுண்மையும்
நரையற மருந்தையுண் டிளமை நண்ணலும்
விரைசெறி குழலினள் வேசை யாசையும்
அரையரன் பமைவது மைந்து மில்லையே.

(ப-ரை.) குரை - சப்திக்கின்ற, கடல் வறுமையும் - சமுத்திரத்தின் குறைவும், (அஃதாவது நீர் வற்றிப்போதலும்); குறத்தி - குறச் சாதிப் பெண்ணினிடத்து, உண்மையும் - மெய்ம்மையும்; மருந்தை உண்டு - (உலகத்திலுள்ள) அவுடதங்களை யருந்தி, நரை அற - நரைதிரை மாற, இளமை-வாலிபத்தை, நண்ணலும்-பொருந்துதலும்; விரை செறி - வாசனை மிகுந்த, குழலினள்-கூந்தலையுடையவளாகிய, வேசை-தாசியினிடத்து, ஆசையும் - (நேயங் கொண்டார் மீதுண்டாகும்) விருப்பமும்; அரையர் - அரசரது, அன்பு-அருள், அமைவதும்-

(ஒருவரிடத்தே) பொருந்துவதும்; (ஆகிய) ஐந்தும் - ஆகிய இவ் வைந்து செய்கைகளும், இல்லை-(எப்பொழுதும்) உண்டாவன வல்ல.

(வி-ரை.) கள்ளமே பொருந்திய குறத்தி எப்பொழுதும் உண்மை கூறமாட்டாள். வேசையர்க்கு எவ்வளவு திரவியங் கொடுப்பினும் சிறிதும் அன்புண்டாக மாட்டாது. அரசர் பொதுவாக எல்லோரிடத்தும் அன்பைச் செலுத்துவது செங்கோன் முறையாதலின், அவர் ஒருவரிடத்துமட்டும் அருளைச் செலுத்தமாட்டார்கள்; அவ்வாறு செலுத்தின் நடுவுநிலைமை குறையும். அரையர்-மொழியிடைப்போலி; "அ ஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்" என்ற (நன். எ. கூஅ) சூத்திர விதிப்படி அகரத்துக்கு ஐகாரம் போலியாக வந்தது. (சஅ)

## வலியார்க்கும் வலியா ருண்டென்பது.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

முடவனை மூர்க்கன் கொன்றால் மூர்க்கனை முனிதான் கொல்லும்
மடவனை வலியான் கொன்றால் மறலிதா னவனைக் கொல்லும்
தடவரைக் குயமா தேயித் தரணியிற் செருக்கி னாலே
மடவனை யடித்த கோலும் வலியனை யடிக்குங் கண்டாய்.

(ப-ரை.) தடம் - விசாலமாகிய, வரை - மலைபோன்ற, குயம் - கொங்கைகளையுடைய, மாதே - பெண்ணே!, இத் தரணியில் - இப் பூவுலகில், முடவனை - (கால் கை முதலியன) முடங்கி வலியற்றவனை, மூர்க்கன்-ஒரு துஷ்டன், கொன்றால்-கொல்லுவானேயானால், மூர்க்கனை-அத் துஷ்டனை, முனி - (அவனிலும் மிக்க) கோபத்தையுடைய மற்றொருவன், கொல்லும்-(பின்னொரு சமயத்தில்) கொல்லுவான்; மடவனை புத்தியற்ற ஓர் ஏழையை, வலியான் - வலிமிகுந்த ஒருவன், கொன்றால் - கொல்லுவானேயானால், அவனை - (அப்படிக் கொன்ற) அவ்வலிமை யுடையவனை, மறலி - எமன், கொல்லும் - கொன்றுவிடுவான்; (இன்னும்), செருக்கினாலே - செல்வச் செருக்

காலே, மடவனை - புத்தியற்ற ஏழையை, அடித்த - (வலியவன் கைக்கொண்டு) அடித்த, கோலும் - கொம்பும், (பின்னொருகாலத்தில் அவனினும் வலியவனாகிய ஒருவன் கையிலமைந்து), வலியனை - (முன்னே ஏழையையடித்த) அவ்வலிமை யுடையானை, அடிக்கும் - (அவன் தாழ்ந்துவீழ) அடிக்கும்.

(வி-ரை.) முனி - முதனிலைத் தொழிற்பெயர்; இது ஆகுபெயராய் அதனை யுடையவனை யுணர்த்திற்று. முனி யென்பதை மிக்க கோபத்தையுடைய ஒரு தேவதையெனவுங் கூறலாம்; சடாமுனி, சுடலை முனி என வழங்குதல் காண்க. இச்செய்யுள் மகடூஉ முன்னிலையாகக் கூறப்பட்டது. கண்டாய்-ஒருவகை அசை. வலியராயினும் எளியவர்க்குத் தீங்கு செய்யலாகாதென்பதும், அவ்வாறு செய்யின் அவரும் பிறரால் துன்பத்தை யடைவரென்பதும் இச்செய்யுட் கருத்தால் விளங்கும். (சக)

## பொருளற்றோர்க்குச் சிறப்பில்லை யென்பது.

### இதுவுமது.

பொருளிலார்க் கின்ப மில்லை புண்ணிய மில்லை யென்று
மருவிய கீர்த்தி யில்லை மைந்தரிற் பெருமை யில்லை
கருதிய கரும மில்லை கதிபெற வழியு மில்லை
பெருநிலந் தனிற்சஞ் சாரப் பிரேதமாய்த் திரிகு வாரே.

(ப-ரை.) பொருள் இல்லார்க்கு - (உலகத்தில்) திரவியமிழந்த தரித்திரர்க்கு, இன்பம் இல்லை-உலக சுகமில்லை; புண்ணியம் இல்லை - அப்பொருளால் ஏற்படுவதாகிய அறமில்லை; என்றும்-எக்காலத்தும், மருவிய - பொருந்திய, கீர்த்தி இல்லை - புகழுமில்லை; மைந்தரில் - மனிதர் கூட்டத்துள், பெருமை இல்லை - அவனுக்கு உயர்வில்லை; (அஃதாவது மனிதர்களால் அவர் நன்குமதிக்கப்படுவ தில்லை); கருதிய - எண்ணிய, கருமம் இல்லை-காரியசித்தி யில்லை; (அஃதாவது

நினைத்தபடியே காரிய முடிவதில்லை); கதி பெற - நற்பதவியடைய, வழியும் இல்லை - மார்க்கமும் இல்லை; (அவர்கள்) பெருநிலந்தன்னில்-இந்தப் பெரிய பூமியில், சஞ்சாரப் பிரேதமாய் - நடைப் பிணமாய், திரிகுவார் - (பயனற்று) அலைவார்.

(வி-ரை.) உலகத்தில் பொருளே எல்லா நன்மைகளையும் அடைவதற்குக் காரணமா யிருத்தலால், அஃதில்லார் மனிதரேயாயினும் பிரயோசனமற்ற பிணத்தை நிகர்ப்பார். திரிகுவார்: இதில் கு-சாரியை. (௫௦)

என்ன செய்யினும் இயற்கைக் குணம் மாறாதென்பது.

இதுவுமது.

தூம்பினிற் புதைத்த கல்லுந் துகளின்றிச் சுடர் கொடாது
பாம்புக்குப் பால்வார்த் தென்றும் பழகினும் நன்மை தாரா
வேம்புக்குத் தேன்வார்த் தாலும் வேப்பிலை கசப்பு மாறா
தாம்பல நூல்கற் றாலுந் துர்ச்சனர் தக்கோ ராகார்.

(ப-ரை.) தூம்பினில்- (பலரும் நடக்கும்) வழியில், புதைத்த - பதிக்கப்பெற்ற, கல்லும் - கல்லானதும், (பலராலும் மிதிக்கப் பட்டுத் தேய்ந்தாலும்), துகள் இன்றி-(தனக் கியற்கையா யேற்பட்ட)களங்கமில்லாமல் மாசு நீங்கி, சுடர் கொடாது - (பொன் முதலியன தேய்ந்தால் மிக்க பிரகாசத்தைக் கொடுப்பதுபோல) ஒளியைத் தராது; பாம்புக்கு-(விஷத்தையுடைய) சர்ப்பங்களுக்கு, என்றும்-எப்பொழுதும், பால் வார்த்து - பாலைக் கிண்ணத்தி லூற்றிப் பருகுவித்து வளர்த்து, பழகினும் - (அவற்றோடு) பழகிவந்தாலும், நன்மை தாரா - (அவை விஷம் நீங்கி) நற்குணத்தைத் தரமாட்டா; வேம்புக்கு - வேப்பமரத்துக்கு, தேன் வார்த்தாலும் - தேனை ஊற்றி அதனை வளர்த்தாலும், வேப்பிலை-அவ்வேம்பிலுள்ள இலைகள், கசப்பு மாறா - (தமக்கேற்பட்ட) கசப்பு நீங்கித் தேனின் சுவையைக் கொடுக்கமாட்டா; (இவை

போல), துர்ச்சனர்தாம் - கீழ்மக்கள், பல நூல் - பல நீதிசாஸ்திரங்களை, கற்றாலும் - படித்துணர்ந்தாலும், தக்கோர் ஆகார் - மேலோராகமாட்டார்.

(வி-ரை.) உம்மைகள் இழிவுசிறப்புப் பொருளன. "பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய" (நன். பெ. உரு) என்னுஞ் சூத்திரவிதியால், து-என்னும் ஒன்றன்பால் விகுதியையேனும், வை, அ, கள் என்னும் பலவின்பால் விகுதிகளுள் ஒன்றையேனும் ஏற்றுப் பாலைப் பகுத்துக்காட்டாத 'பாம்பு' என்னும் பால்பகா வஃறிணைப் பெயர் 'தாரா' என்னும் பன்மை முடிபை யேற்றதனால், பன்மைப் பால் என்பது துணியப்பட்டது. 'வேப்பிலை' என்பதும் இத்தன்மைத்தே. (ருக)

நற்குணமில்லாரை நம்பலாகா தெனல்.

இதுவுமது

கல்லாத மாந்தரையுங் கடுங்கோபத் துரைகளையுங்
காலந் தேர்ந்து
சொல்லாத வமைச்சரையுந் துயர்க்குதவாத் தேவரையுஞ்
சுருதி நூலில்
வல்லாவந் தணர்தமையுங் கொண்டவனோ டெந்நாளும்
வலது பேசி
நல்லார்போ லருகிருக்கு மனைவியையு மொருநாளு
நம்பொ ணாதே.

(ப-ரை.) கல்லாத-படிக்காத, மாந்தரையும்-மனிதரையும்; கடும் கோபம் - கொடிய கோபத்தையுடைய, துரைகளையும் - அரசரையும்; காலம் தேர்ந்து - வருங்கால நிகழ்ச்சிகளை ஆராய்ந்துணர்ந்து, சொல்லாத-(வரும் நன்மை தீமைகளை முன்னரே) சொல்லாத, அமைச்சரையும்-மந்திரிகளையும்; துயர்க்கு-துன்பம் வந்தகாலத்தில், உதவா-

உதவிசெய்து அத்துன்பத்தை நீக்காத, தேவரையும் - தேவதைகளை யும்; சுருதி நூலில் - வேதசாஸ்திரங்களில், வல்லா - வல்லமையில் லாத, அந்தணர்தமையும் - பிராம்மணர்களையும்; கொண்டவனோடு - மணம் புரிந்துகொண்ட புருஷனோடு, எந்நாளும் - எந்த நாளிலும், வலது பேசி - (தன்னிடத்தே ஒரு சிறந்த குணமு மில்லாவிடினும் எல்லாக் காரியங்களிலுஞ் சிறந்தவள்போல் நடித்து) வல்லமைகூறி, நல்லார்போல்-நல்லவர்களைப்போல, அருகு இருக்கும்-நாயகனருகே யிருந்து அவனை ஏமாற்றும், மனைவியையும் - (துர்க்குணம் நிறைந்த) பாரியையும், நம்பொணாது - (உலகத்தோர்) நம்புதல் கூடாது.

(வி-ரை.) வருங்காலத்தில் நிகழும் நன்மை தீமைகளை ஆராய்ந்து அரசனுக் குரைப்பது மந்திரிக்கு முக்கிய தொழிலாகும்; "கருவி யுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு, மருவினையு மாண்ட தமைச்சு" என்பது திருக்குறள். (௫௨)

## தீயர்க்கு நன்மை செய்யினுந் தீங்கு வருமென்பது.

இதுவுமது.

தேளது தீயில் வீழ்ந்தாற் செத்திடா தெடுத்த பேரை
மீளவே கொடுக்கி னாலே மெய்யுறக் கொட்டும் பல்லோர்
எளனம் பேசித் தீங்குற் றிருப்பதை யெதிர்கண் டாலுங்
கோளினர் தமக்கு நன்மை செய்வது குற்ற மாமே.

(ப-ரை.) தேளது - தேளானது, தீயில் வீழ்ந்தால் - நெருப் பிலே விழுந்தால், செத்திடாது - அது சாகாமல், எடுத்தபேரை - (அதனை) எடுத்தவர்களை, மீள - (தன் வாற்புறம் அவர்கள் பக்க மாகத்) திரும்ப, கொடுக்கினாலே - தன் கொடுக்கால், மெய்யுற - அவர்களுடைய தேகத்திற் பதிய, கொட்டும் - கொட்டி வேதனை செய்யும்; (அதுபோல), பல்லோர் - பலரும், எளனம் பேசி - தம் முடைய இழிதன்மையைப் பற்றிப் பரிகாச வார்த்தைகளைப் பேசி,

கோளினர் - கோட்சொல்லும் கொலைஞர், தீங்குற்று இருப்பதை - துன்பமடைந் திருப்பதை, எதிர் கண்டாலும் - நேரே பார்த்தாலும், கோளினர் தமக்கு - அக்கோளராகிய தீயருக்கு, நன்மைசெய்வது, நலஞ்செய்வது, குற்றமாம் - கெடுதியாக முடியும்.

(வி-ரை.) பேச வென்னும் செயவெனெச்சம் பேசி யெனச் செய்தெனெச்சமாகத் திரிந்துவந்தது. கோளினர் என்பதை இரண் டிடத்தும் கூட்டுக. துஷ்டருக்கு நன்மை செய்யினுந் தீங்காய் முடியு மென்பது இச் செய்யுட் கருத்து; "வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்த விடதாரி, ஆங்கதனுக் காகார மானாற்போல் - பாங்கறியாப், புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம், கல்லின்மே லிட்ட கலம்" என்னும் வாக்குண்டாம் செய்யுளானு மிதனை யுணர்க. (ருநு)

## அறிஞர் பெருமை.

### இதுவுமது.

அறிவுளோர் தமக்கு நாளு மரசருந் தொழுது தாழ்வார்
நிறையொடு புவியிலுள்ளோர் நேசமாய் வணக்கஞ் செய்வார்
அறிவுளோர் தமக்கி யாதோ ரசடது வருமே யாகில்
வெறியரென் றிகழா ரென்று மேதினி யுள்ளோர் தாமே.

(ப-ரை.) அறிவுள்ளோர்தமக்கு-அறிவுடையவர்களுக்கு, நாளும் தினந்தோறும், அரசரும்-(பிறரைவணங்காத) மன்னரும், தொழுது-வணக்கஞ்செய்து, தாழ்வார் - கீழ்ப்படுவார்கள்; புவியில் உள்ளோர்-இவ்வுலகிலுள்ள மற்றவர்களும், நிறையொடு - உறுதிப்பாட்டோடு, நேசமாய்-பிரியமாய், வணக்கம் செய்வார் - அவர்களுக்குப் பணிதல் செய்வார்கள்; அறிவுள்ளோர் தமக்கு - அத்தகைய அறிவுடையவ ருக்கு, யாதோர் - யாதேனுமொரு, அசடது - குற்றமானது, வருமே யாகில் - வந்தால், மேதினியுள்ளோர் - இப்பூமியிலுள்ள மனிதர்கள்,

(அவ்வாறு அவர்களுக்குக் குற்றம் வந்ததின்பொருட்டு அவரை), வெறியர் என்று - பித்தர் என்று, என்றும் - என்றைக்கும், இகழார் - நிந்திக்க மாட்டார்கள்.

(வி-ரை.) அறிவுடையோர் ஒரு சமயம் தாழ்மையுறினும் பூமியிலுள்ள மேலோர் அவரை இகழ்ந்து கூறமாட்டார்கள்; மதியின்றிப் பணமொன்றையே பெற்ற சில அறிவிலிகள் மட்டும் அடக்கமுடையாரை அறிவிலரென்று கூறி யிகழ்வர். (௬௪)

## பிறருக்குச் சொல்லத் தகாதவை.

### இதுவுமது.

குருவுப தேச மாதர்க் கூடிய வின்ப நெஞ்சில்
மருவிய நியாயங் கல்வி வயதுறச் செய்த தன்மம்
அரியமந் திரம் விசார மாண்மையிங் கிவைக ளெல்லாம்
ஒருவருந் தெரிய வொண்ணு வுரைத்திடி லிழிவுண் டாமே.

(ப-ரை.) குரு உபதேசம் - (உலகத்தில் ஒருவன்பெற்ற இரகசியமான) ஆசாரியருடைய ஞானோபதேசமும், மாதர் - பெண்களை, கூடிய - சேர்ந்தனுபவித்த, இன்பம் - சுகமும், நெஞ்சில்-(நியாயாதிபதியாயிருக்கும் ஒருவனுடைய) மனதில், மருவிய - சேர்ந்திருந்த, (அஃதாவது அவன் தீர்ப்புச்செய்ய ஆலோசித்திருந்த), நியாயம் - நீதியும், கல்வி - (ஒருவன் அருமையாகப் பெற்ற உயர்ந்த) வித்தையும், வயது - ஆயுளும், உற - மிகுதியாக, செய்த - (ஒருவன்) இயற்றிய, தன்மம் - தருமமும், அரிய - பெறுதற் கரிதாகிய, மந்திரம் - (ஒருவன் பெற்ற) மந்திரோபதேசமும், விசாரம்-துன்பமும், ஆண்மை - வீரச்செய்கையும், (ஆகிய) இவைகள் எல்லாம்-ஆகிய இவை யாவும், இங்கு - இவ்வுலகத்தில், ஒருவரும் - நற்குணமில்லாத பிறரொருவரும், தெரியவொண்ணு - அறியக்கூடாவாம்; உரைத்திடில்-

(இவைகளைப் பிறருக்குச்) சொன்னால், இழிவு உண்டாம் - (அவ்வாறு சொன்னவர்க்குத்) தாழ்வுண்டாகும்.

(வி-ரை.) தன்மம் - வடமொழித்திரிபு. குருவுபதேசத்தை வெளியிட்டால் அதற்கு மதிப்பில்லாமற்போகும். மாதராலெய்திய வின்பத்தை வெளியிடின் தூற்றுதலுண்டாம். ஒரு நியாயாதிபதி தான் தீர்மானிக்க மனதிற் குறித்த விஷயத்தைத் தீர்ப்புச் செய்யுமுன் வெளியிட்டால், குற்றவாளிகளுடைய தூண்டுதலால் தன்னுடைய நேயர் முதலியோர் அதனை மாற்றும்படி வேண்ட, அதனால் ப்ாரபக்ஷம் செய்ய எதுவுண்டாம்; அவ்வாறு செய்யின் பழிப்புண்டாகும். கல்வியை மூடரிடத்திற் கூறினால் அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளாததோடு, சொன்னவனையும் பழிப்பார்கள்; "மெஞ்ஞானக் கோட்டி யுறழ்வழி விட்டாங்கோர், அஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்க், கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன், சொன்ஞானஞ் சோர விடல்" என்னும் நாலடிச்செய்யுள் இதனை வலியுறுத்தும். ஒருவன் தன் வயதை அளவிட்டுக் கூறினால் ஆயுள் குறையுமெனப் பெரியோர் கூறுவர். செய்த தருமத்தைக் கூறினால் தற்புகழ்ச்சி யென்னுங் குற்றமுண்டாவதோடு, தருமத்திற்கும் பலனின்றாம். ஆசிரியர் உபதேசித்த மந்திரத்தை அறிவற்றோரிடம் வெளியிடின், அவர் கண்ட விடமெல்லாம் அதனைப் பரப்பிவிட, அதற்கு மகிமை யில்லாதுபோகும். ஒருவன் தான் அடைந்த துன்பத்தை மூடரிடத்து வெளியிடின், அவர் அதனைப் பலரிடத்துஞ் சொல்லித் தன்னை இகழ்வர். ஒருவன் எத்தகைய வீரனாயினும் தன்னுடைய வீரத்தைச் செய்கையிற் காட்டவேண்டுமே யன்றி, வாயினாற் சொல்வது கூடாதாம்; அவ்வா றுரைப்பின், 'பனையின்மேல் வற்றியவோலை கலகலக்கும்' என்றபடி, 'இவரிடத்து ஆண்மை யில்லாததால் வாயினால் வீரங் கூறுகின்றனர்' என்று பலரு மிகழ்வர். "சூரியனாயினும் வீரியம்பேசேல்" என்பது ஒளவைகூற்று. (கூ)

## ஈதற்சிறப்பும் உலோபத்தால் வருங் கேடும்.

இதுவுமது.

இடுக்கினால் வறுமை யாகி யேற்றவர்க் கிசைந்த வெல்லாங்
கொடுப்பதே மிகவு நன்று குற்றமே யின்றி வாழ்வார்
தடுத்ததை விலக்கி னோர்க்குத் தக்கநோய் பிணிக ளாகி
உடுக்கவோ ருடையு மின்றி யுண்சோறு மருமை யாமே.

(ப-ரை.) வறுமை ஆகி - தரித்திர மேற்பட்டு, இடுக்கினால் - அத் தரித்திர துன்பத்தால், ஏற்றவர்க்கு - (மானம்விட்டு) யாசித்த வர்க்கு, இசைந்தவெல்லாம்-அவர் மனத்திற்குப் பொருந்தியவற்றை யெல்லாம், கொடுப்பதே-ஒருவர் ஈதலே, மிகவும் நன்று-உலகத்தில் மிக்க நன்மையாம்; (இத்தகைய ஈகையுள்ளவர்), குற்றமே இன்றி - யாதொரு குறைவுமில்லாமல், வாழ்வார் - வாழ்வார்கள்; அதை - அத் தருமத்தை, தடுத்து - (தாமும் ஈயாதிருப்பதுடன் பிறரையும்) தடைசெய்து, விலக்கினோர்க்கு - நீக்கிய உலோபர்க்கு, தக்க-(அவர் கொடுஞ் செய்கைக்குத்) தகுந்த, நோய் - வருத்தங்களும், பிணிகள் - வியாதிகளும், ஆகி - உண்டாகி, உடுக்க - அரையி லுடுப்பதற்கு, ஓர் உடையும்-ஓர் ஆடையும், இன்றி - இல்லாமல், உண் சோறும் - உண்ணத்தக்க சோறும், அருமையாம் - கிடைப்ப தருமையாகிவிடும்.

(வி-ரை.) யாசகர்க்கு மனவிருப்பு நீங்கும்வரை கொடுத்தலே தானங்களில் முதன்மைபெற்ற தானமாதலின், இச்செய்யுளாசிரியர் 'இசைந்தவெல்லாம்' என்று கூறினர். (௫௬)

## சத்தியத்தின் மேன்மையும், அசத்தியத்தின் தாழ்மையும்.

இதுவுமது.

மெய்யதைச் சொல்வா ராகில் விளங்கிடு மேலா நன்மை
வையக மவரைக் கொள்ளு மனிதரிற் றேவ ராவார்

பொய்யதைச் சொல்வ ராகிற் போசன மற்ப மாகும்
நொய்யவ ரிவர்க ளென்று நோக்கிடா ரறிவுள் ளோரே.

(ப-ரை.) மெய்யதை-உண்மையை, சொல்வாராகில்-(ஒருவர்) சொல்வாரானால், மேலாம்-உயர்வாகும், நன்மை-கீர்த்தி முதலிய நலங்களெல்லாம், விளங்கிடும்-(அவரிடத்தே அமைந்து) பிரகாசிக்கும்; (இன்னும்), அவரை-(உண்மையுடைய) அவர்களை, வையகம்-உலகத்திலுள்ளவர்கள், கொள்ளும் - (மேன்மை யுடையவரென் றுபசரித்து) ஏற்றுக்கொள்வார்கள்; (அன்றியும் அவர்), மனிதரில்-மனிதருக்குள், தேவராவார் - தேவர்களைப்போன்று விளங்குவார்; (உலகத்திலுள்ள ஒருவர்), பொய்யதை - அசத்தியத்தை, சொல்வராகில் - சொல்வார்களே யானால், (அவர்களுக்கு), போசனம் - உணவும், அற்பமாகும் - குறைவாகும், (அஃதாவது: போசனங் கிடைக்காது); அறிவுள்ளோர் - அறிவுடையவர், (அப்பொய்யர்களை), இவர்கள் நொய்யவர் என்று - இவர்கள் அற்பர்களென்று கருதி, நோக்கிடார் - கண்ணாலும் பாரார்கள்.

(வி-ரை.) வையகம் - இடவாகுபெயராய்ப் பூமியிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. பொய் சொன்னவர்க்குப் போசனங் கிடைக்காதென்பதை, "பொய்சொன்ன வாய்க்குப் போசனங் கிடையாது" என்னும் பழமொழியாலு முணர்க. (௬எ)

தந்தை முதலியோர் வார்த்தையைத் தட்டலாகா தெனல்.

கலிவிருத்தம்.

தந்தையுரை தட்டினவன் றாயுரை யிகழ்ந்தோன்
அந்தமுறு தேசிகர்த மாணையை மறந்தோன்
சந்தமுறு வேதநெறி தாண்டினவ னல்வர்
செந்தழலின் வாயினிடை சேர்வதுமெய் கண்டீர்.

(ப-ரை.) தந்தை - தகப்பனுடைய, உரை - வார்த்தையை, தட்டினவன்-(கேளாமல்) மறுத்து நடந்தவனும்; தாய்-மாதாவினுடைய,

உரை-(புத்தியான) வார்த்தையை, இகழ்ந்தோன்-அவமதித்து நடந்தவனும்; அந்தம் உறு - அழகு பொருந்திய, தேசிகர்தம் - குருமார்களுடைய, ஆணையை-கட்டளையை, மறந்தோன்-மறந்துவிட்டவனும்; சந்தம் உறு-நற்குணம்பொருந்திய, வேத நெறி-வேதத்தின் வழியை, தாண்டினவன்-கடந்து நடந்தவனும், (ஆகிய) நால்வர்-ஆகிய நான்கு பேரும், செந்தழலின்-சிவந்த அக்கினி வடிவமான நரகத்தின், வாயினிடை-வாயிலே, சேர்வது-அடைவது, மெய்-சத்தியமாகும், கண்டீர் - (அறிவுடையவர்களே!) இவ்வுண்மையை அறியுங்கள்.

(வி-ரை.) தந்தை முதலியோருடைய வார்த்தைகளைத் தட்டுவோர் தங்கள் இஷ்டம்போல் கெட்டவழிகளில் நடந்து பாவத்தைத் தேடிக்கொள்வா ராதலின், அவர்க்கு நரகங் கிடைப்பது நிச்சயம். அழல் வடிவமாகிய நரகமாவது: தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபை, இரத்தப்பிரபை, அழற்பிரபை என்னும் எழுவகை நரகங்களுள்ளும், ஈற்றிலுள்ள அழற்பிரபை யென்னும் நரகமாம். கண்டீர் - இது காணுங்கோள் என்னும் பொருள்படுவதைச் சீவகசிந்தாமணி 547-ம் செய்யுளில் "நங்குடித் தெய்வங்கண்டீர்" என்பதற்கு "நங்குடித் தெய்வங்காணுங்கோள்" என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறி யிருப்பதனாலுணர்க; கண்டீர் என்பது ஒருவகை அசையுமாம். (௫அ)

நடுநிலைமை.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நாரிகள் வழக்கா றனு நடுவறிந் துரைப்போர் சுத்தர்
ஏரிபோற் பெருகி மண்மே லிருகண்ணும் விளங்கி வாழ்வார்
ஓரமே சொல்வா ராகி லோங்கிய கிளையு மாண்டு
தீரவே கண்ணி ரண்டுந் தெரியாமன் மாழ்கு வாரே.

(ப-ரை.) நாரிகள் - (தீரமாகத் தங்கள் வழக்கை யெடுத்துப் பேசும் திறமையில்லா) ஏழைப் பெண்களுடைய, வழக்காறனலும்

வழக்கா யிருந்தபோதிலும், நடுவு அறிந்து - (அதனை நன்றாக விசாரித்து உண்மையை) நடுவுநிலைமையாக அறிந்து, உரைப்போர்-தீர்ப்புச் சொல்பவர், ஏரிபோல்-நீர்நிறைந்த குளம்போல், பெருகி - பல வாழ்வும் பெருகப்பெற்று, மண்மேல் - இந்நிலவுகத்தில், இருகண்ணும் - இரண்டுகண்களும், விளங்கி-பிரகாசமாகத் தெரியப்பெற்று, வாழ்வார்-நீண்டகாலம்வரை வாழ்ந்திருப்பார்கள்; (ஒருவர்), ஓரமே - (நடுவு நிலைமையின்றி) பக்ஷபாதமே, சொல்வாராகில் - சொல்லித் தீர்ப்புச் செய்வார்களானால், (அவர்கள்), ஓங்கிய-உயர்ந்த, கிளையும்-சுற்றத்தார்களும், மாண்டு-மாள, தீர - சந்தேகமற, கண் இரண்டும்-இரண்டு கண்களும், தெரியாமல் - விளங்காமற் கெட்டு, மாழ்குவார்-வாதனைப்பட் டிறப்பார்கள்.

(வி-ரை.) பெருகி, விளங்கி, மாண்டு என்பன செயவெனெச்சத் திரிபுகள்; இவற்றைப் பெருக, விளங்க, மாள எனச் செயவெனெச்சமாக்கிப் பொருள்கூறுக. தீரவே-என்பதில் ஏகாரம் தேற்றம். நடுவுநிலைமை யற்றோர் கெடுவாரென்பதை, "கெடுவல் யானென்ப தறிகதன் னெஞ்சம், நடுவொரீஇ யல்ல செயின்" என்னும் திருக்குறளானு முணர்க. (௩௬)

## அருட்பெருமை.

### இதுவுமது.

ஏரிநீர் நிறைந்த போதங் கிருக்குமே பட்சி யெல்லாம்
மாரிநீர் வறண்டபோது வந்ததி லிருப்ப துண்டோ
பாரினை யாளும் வேந்தன் பட்சமு மறந்த போதே
யாருமே நிலையில் லாம லவரவ ரேகு வாரே.

(ப-ரை.) ஏரி-ஒரு குளத்தில், நீர்-சலமானது, நிறைந்தபோது-பெருகிய சமயத்தில், அங்கு-அக்குளத்தினிடத்தே, பட்சியெல்லாம்-பறவைகளெல்லாம், இருக்கும் - (வந்து தங்களுக்கு இரை முதலியன கிடைப்பதால்) கூடியிருக்கும்; மாரிநீர்-(அக்குளத்தில்நிறைந்த)

மழைத் தண்ணீரானது, வறண்டபோது - (அக்குளத்தி லில்லாமல்) வற்றிய சமயத்தில், வந்து இருப்பதுண்டோ - (அவை) வந்து கூடி யிருப்பதுண்டோ? (இல்லை); (அதுபோல), பாரினை - இப்பூமியை, ஆளும் - ஆட்சிபுரிகின்ற, வேந்தன் - அரசன், (பட்சமுடையவனு யிருந்தால் அவனிடத்தே நலங்கருதி எல்லோரும் வந்து கூடியிருப் பார்); பட்சமும் - (மனிதருக்கு உபகாரமற்றவனு யிருத்தலோடு) அன்பையும், மறந்தபோது - மறந்து கைவிட்ட சமயத்தில், யாரும் - எவரும், நிலையில்லாமல் - அவனிடத்து நிலைபெறுமல், அவரவர் - ஒவ்வொருவரும், ஏகுவார் - தங்கள் தங்களுக்கு இதமான விடத்திற் குச் சென்று விடுவார்கள்.

(வி-ரை.) பட்சமும் என்பதில் உம்மை எச்சவும்மை. அரசர் உபகாரமற்றவரா யிருப்பினும், முகமலர்ச்சியோடு அன்பையாவது பெற்றிருக்கவேண்டும்; அஃதுமின்றேல் அவரிடத்து எவரும் சேரார். எச்சவும்மைக்குத் தக, 'மனிதர்க்கு உபகாரமற்றவரா யிருத்த லோடு' என்னும் வாக்கியங்கள் வருவிக்கப்பட்டன. (சுo)

### பிச்சையிடாதோ ரியல்பு.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மண்ணார் சட்டி கரத்தேந்தி மறநாய் கௌவுங்
காலினராய்
அண்ணுந் தேங்கி யிரப்பாரை யறிந்தோ மறிந்தோ
மம்மம்மா!
பண்ணார் மொழியார் பாலடிசில் பைம்பொற் கலத்திற்
பரிந்தூட்ட
உண்ணு நின்ற போதொருவர்க் குதவா மாந்த
ரிவர் தாமே.

(ப-ரை.) மண் ஆர் - மண்ணினுல் பொருந்திய, (அஃதாவது மண்ணுற் செய்யப்பட்ட), சட்டி - பிச்சைப்பாத்திரத்தை, காத்து.

கையில், ஏந்தி - தாங்கி, (வீதிகளிற் சென்று), மறம் - கோபம் பொருந்திய, நாய்-தெருக்களிற்றிரியும் நாய்கள், கௌவும் - (தங்கள் விகார வடிவத்தைக்கண்டு மருண்டு கோபித்துக்) கடிக்கும், காலினராய்- கால்களை யுடையவர்களாய், அண்ணாந்து - தலையை மேலே தூக்கிக் கெஞ்சி, ஏங்கி - (பசியினால்) ஏக்கமுற்று, இரப்பாரை - யாசிப்பவரை, அறிந்தோம் - (இன்னவரென) நாம் தெரிந்துகொண்டோம் தெரிந்துகொண்டோம், அம்மம்மா - ஆ! ஆ!, இவர்தாம் - இவர்கள், (யாரெனில்: முற்பிறப்பிலே), பண் ஆர்-இசை நிறைந்த, மொழியார் - சொற்களையுடைய தங்கள் மனைவியர், பால் அடிசில் - பாற்சோற்றை, பைம்பொன் - பசும்பொன்னாலாகிய, கலத்தில் - தட்டில் வைத்து, பரிந்து - விரும்பி, ஊட்ட - தங்களுக்கூட்ட, உண்ணா நின்றபோது - உண்ணுகின்ற சமயத்தில், ஒருவர்க்கு - பிச்சை கேட்டுவந்த ஒரு மனிதர்க்கு, உதவா - அன்னங்கொடாத, மாந்தர்-மனிதராவார்.

(வி-ரை.) அம்மம்மா-வியப்பிடைச்சொற்கள். 'பசுமை+பொன்' என்பது பைம்பொன் என்றாயது; "ஈறுபோதல்......(நன். ப. கூ)' என்னுஞ் சூத்திர விதிப்படி மைவிகுதியும், நடுநின்ற உயிர்மெய்யுங் கெட்டு, முதலிலிருந்த அகரம் ஐகாரமாகி, வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுந்தது. முந்தின ஜன்மத்தில் பிச்சை யிடாதவரே இந்த ஜன்மத்தில் பிச்சை யேற்றுத் திரிபவர் என்பது இச்செய்யுட் கருத்து. (கூக)

இன்னவர் பாவம் இன்னவரை அடையுமென்பது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மண்டலத் தோர்கள் செய்த பாவமன் னவரைச் சேருந்
திண்டிறன் மன்னர் செய்த தீங்குமந் திரியைச் சேருந்
தொண்டர்கள் செய்ததோடந் தொடர்ந்துதங் குருவைச்சேருங்
கண்டன மொழியாள் செய்த கன்மமுங் கணவற் காமே.

(ப-ரை.) மண்டலத்தோர்கள் - மண்ணுலகத்தி லுள்ளவர்கள், செய்த - இயற்றிய, பாவம் - அதர்மம், மன்னவரை - (அவர்களை யாளும்) அரசரிடத்தே, சேரும் - அடையும்; திண்-வலிமையையும், திறல் - வெற்றியையும், (உடைய), மன்னர் - அரசர், செய்த -இயற்றிய, தீங்கு - பாவமானது, மந்திரியை-(நன்மை தீமைகளை ஆராய்ந்துரைத்து அவர்களைச் செங்கோன்முறையில் நடத்தும்) அமைச்சரிடத்தே, சேரும் - அடையும்; தொண்டர்கள் - அடியார்கள், செய்த- இயற்றிய, தோடம் - குற்றமானது, தொடர்ந்து - பின்பற்றி, தம் குருவை - அவர்களுடைய குருவினிடத்தே, சேரும்-அடையும்; (புருஷனு யிருப்பவன் தான் செய்யும் பாவத்தோடு), கண்டு அன்ன-கற்கண்டை நிகர்த்த சுவையுள்ள, மொழியாள் - சொற்களையுடைய மனைவி, செய்த - இயற்றிய, கன்மமும் - தீச்செயலாகிய பாவமும், கணவற்காம் - அப்புருஷனுக்கே யாகும்.

(வி-ரை.) மன்னவரை என்பதில் ஐ உருபுமயக்கம்; மந்திரியை, குருவை என்பவற்றிலுள்ள ஐ-களும் இத்தன்மை யுடையவைகளே. மன்னர் முதலியோர் கட்டளைப்படியே மண்டலத்தோர் முதலியவர்கள் நடக்கக்கூடியவர்களா யிருத்தலால், அவர்கள் செய்த பாவம் அம்மன்னர் முதலியவரையே சேரும். (சுஉ)

## இம்மையில் சுவர்க்கத்துக்குச் சம மானவைகள்.

இதுவுமது

நற்குண முடைய வேந்தை நயந்துசே வித்த லொன்று
பொற்புடை மகளி ரோடு பொருந்தியே வாழ்த லொன்று
பற்பல ரோடு நன்னூல் பகர்ந்துவா சித்த லொன்று
சொற்பெறு மிவைகண் மூன்று மிம்மையிற் சுவர்க்க மாமே.

(ப-ரை.) நற்குணமுடைய-நல்லசுபாவம் பொருந்திய, வேந்தை அரசனை, நயந்து - விரும்பி, சேவித்தல் - பணிந்து பணிபுரிதலாகிய,

ஒன்று - ஒரு காரியமும்; பொற்புடை - (நற்குண மிருத்தலோடு), அழகு முடைய, மகளிரோடு - மனைவியராகிய பெண்களுடன், பொருந்தி - சேர்ந்து, வாழ்தல் - (இல்லறத்தில்) வாழ்தலாகிய, ஒன்று - ஒருகாரியமும்; பற்பலரோடு - பல கல்வி யறிவினரோடு, நல் நூல்-நல்ல சாஸ்திரங்களை, பகர்ந்து - வாயினாற்சொல்லி, வாசித்தல் - படித்தலாகிய, ஒன்று-ஒரு காரியமும்; (ஆகிய), சொற்பெறு- உயர்ந்த புகழ்ச்சொல்லைப் பெறத்தக்க, இவைகள் மூன்றும் - இச்செய்கைகள் மூன்றும், இம்மையில் - இவ்வுலகத்தில், சுவர்க்கமாம் - தெய்வலோக பதவியைப் போல இன்பந் தருவனவாம்.

(வி-ரை.) நற்குணமுடைய அரசனைச் சேவித்தல் முதலாகிய மூன்றும் மனத்திற்குத் திருப்தியைத் தரக்கூடியவைக ளாதலின், சுவர்க்கத் தின்பத்தைப்போன்ற இன்பம் பயப்பனவாம். இவற்றுள், நூலாராய்ச்சி யுடையவரோடு பழகி வாசித்தல் மிக்க இன்பமுடைய தென்பதை, "தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார், இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ, நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத், தும்ப ருறைவார் பதி" என்னும் நாலடிச் செய்யுளானு முணர்க. (சுஞ)

பேரின்பத்தின் உயர்வும், சிற்றின்பத்தின் தாழ்வும்.

இதுவுமது

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்க
 ணிமலன் றூளைக்
கிட்டையிலே கொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங்
 கிடைக்கும் வேட்கை
வெட்டையிலே மதிமயங்குஞ் சிறுவருக்கு மணம்பேசி
 விரும்பித் தாலி
கட்டையிலே கொடுத்துநடுக் கட்டையிலே கிடத்துமட்டுங்
 கவலைதானே.

(ப-ரை.) நிட்டையிலே - (பஞ்சவிடயங்களுமொடுங்கி மனம் ஒரு நிலைப்படும்) யோகத்திலே, இருந்து - (அசைவற்றுத்) தங்கி, மனத்துறவு - மனோவிச்சையின் நீக்கத்தை, (அஃதாவது வேறுவிடயங்களிற் செல்லாமல் ஒரே தன்மையையுடைய மனத்தை), அடைந்த-சேர்ந்த, பெரியோர்கள்-மகான்கள், நிமலன்-மலமற்ற கடவுளுடைய, தாளை-பாதங்களை; கிட்டையிலே-முதன்முதல் தியானத்தில் சேரும்போது, தொடுத்து - (மகிழ்ச்சி) ஆரம்பித்து, முத்தி பெறுமளவும்-(எல்லாவற்றையுங்கடந்து) வீடு பெறும் வரையிலும், பெரிய சுகம்-பேரின்பமே, கிடைக்கும்-அவர்களுக்குச் சேரும்; வேட்கை-பெண் விருப்பென்னும், வெட்டையிலே - வெப்பத்திலே, (அகப்பட்டு), மதிமயங்கும்-புத்திகலங்கும், சிறுவருக்கு-சிறியோர்களுக்கு, மணம் பேசி - கல்யாண காரியத்தைத் தாய்தந்தையர் பேசி, (ஒரு பெண்ணைத் தீர்மானித்து), விரும்பி - பிரியங்கொண்டு, தாலி-திருமங்கலியத்தை, கட்டையிலே - (அப்பெண்ணின் கழுத்திற்) கட்டும்போது, தொடுத்து-(துன்பம்) ஆரம்பித்து, (பின்னர் அவர் இறந்து அவருடைய பிரேதத்தைச் சுடுகாட்டிற் கொண்டுபோய்), கட்டை நடுவிலே - (எரிக்கும்பொருட்டு அடுக்கிய) விறகின் மத்தியிலே, கிடத்துமட்டும்-சுற்றத்தார் போடும்வரையிலும், கவலையே-(அவருக்கு) விசாரமேயாம்.

(வி-ரை.) பேரின்பத்தை யடைவோரை அச் செய்கைக்குத் தகப் பெரியோரென்றும், சிற்றின்பத்தை விரும்பித் துன்பமடைவோரை அச் செய்கைக்குத் தகச் சிறியோரென்றும் இச் செய்யுளாசிரியர் கூறினர். நடுக்கட்டையில் என்பதைக் கட்டை நடுவில் என மாற்றுக. ஈற்றிலுள்ள தான் அசை. (கூசு)

பாவித் துன்பம் வரும் விதம்.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆவின மழைபொழிய வில்லம் வீழ
வகத்தினளோய் தனில்வருந்த வடிமை சாவ

மாவீரம் போகுமென்று விதைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொடொருவ னெதிரே செல்லத்
தள்ளவொண்ணு விருந்துவரச் சர்ப்பந் தீண்டப்
பாவாணர் கவிபாடிப் பரிசு கேட்கப்
பாவிமகன் படுந்துயரம் பார்க்கொ ணுதே.

(ப-ரை.) பாவி மகன் - (உலகத்தில்) பாவியாயிருக்கும் ஒரு மனிதன், ஆ ஈன - தன்னுடைய பசு கன்றைப் பெற, (அதற்கு மருத்துவம் பார்த்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில்), மழை பொழிய- (அதற்கிடையூருக) விடா மழை பெய்ய, (அம்மழையினுல்), இல்லம் வீழ - (தன்னுடைய) வீடு இடிந்து விழ, (அதற்காகக் கலங்கும் போது), அகத்தினள் - தன்வீட்டுக்குடையவளாகிய மனைவி, நோய் தனில் - பிரசவ வேதனையில், (சிக்குண்டு), வருந்த - துன்பப்பட, (இதற்கென்செய்வோமென்று மயங்குந்தருணத்தில்),அடிமை சாவ- தன் அடிமைப் பெண் இறந்துபோக, (அப்போது விதைவிதைக்குந் தருணமா யிருந்தபடியால்), மா ஈரம் போகும் என்று - (இன்று தவறின் நாளை புன்செயில்) சிறந்த ஈரங் காய்ந்து போகுமென்றெண்ணி, (அடிமைப்பெண்ணையும் எடுத்தடக்கம்செய்யாமல்அப்படியேபோட்டு விட்டு), விதைகொண்டு-விதையை எடுத்துக்கொண்டு, ஓட-நிலத்தை நோக்கி விரைந்து செல்ல, (அத்தருணத்தில்), வழியிலே - மார்க்கத்திலே, கடன்காரர்-கடன் கொடுத்தவர், மறித்துக்கொள்ள-(கடனைக் கொடுத்துவிட்டு அப்பாற் செல்) என்று தடுத்துக்கொள்ள, (அப்போது அவர்க்குத் தக்க சமாதானஞ்சொல்லி அப்பாற் செல்லுந் தருணத்தில்), ஒருவன் - ஒருமனிதன், சாவோலை கொண்டு - (தன் பந்துக்களில் முக்கியமான ஒருவர் இறந்துபோன விவரமெழுதிய) மரணவோலையைக்கொண்டு, எதிரே செல்ல - அவனுக்கெதிரே சென்று அவ்வோலையை நீட்ட, (அவ்விவரத்தையுந் தெரிந்து கொண்டு செல்லும்போது), தள்ள ஒண்ணு - நீக்கமுடியாது,

விருந்து வர - விருந்தினர் வந்து சேர, (அவர்களை வீட்டிற்கனுப்பி விட்டு அப்பாற் செல்லும்போது), சர்ப்பம் தீண்ட-(தன்காலிலே) அரவங்கடிக்க,(அதனால் விஷமேறி மயங்குந் தருணத்தில்),பாவாணர்-வித்வான்கள், (அவன் துன்பமான நிலைமையை உணராமல்), கவி பாடி - செய்யுட்களைப் படித்து, பரிசு கேட்க - சன்மானம் கேட்டு வருத்த, படும் - (இவ்வாறு பல துன்பங்களெய்தி ஒன்றுஞ் செய்ய வியலாமல், இத்துன்பங்களின் மிகுதியாலும் பாம்பின்விஷத்தாலும்) இறப்பான்; துயரம் - (அவன் இவ்வாறடையும்) துன்பம், பார்க்க ஒண்ணாது - பார்த்து நாம் சகிக்க முடியாது.

(வி-ரை.) பாவியாயிருக்கும் ஒருவனுக்கு இப்படித்தான் துன்பங்கள் வருமென்பதை விளக்கிக் காட்டற்பொருட்டு, உதாரணமாக இவ்விஷயங்கள் அடுக்கிக் கூறப்பட்டன. இப்பாடல் மூன்றாமடியிலிருந்து, "கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக், குருக்கள் வந்து தட்சிணைக்குக் குறுக்கே நிற்கப், பாவாணர் கவிபாடிப் பரிசுகேட்கப், பாவிமகன் படுந்துயரம் பார்க்கொணாதே" என்று ஒருவகையாகவும், "சாவோலை கொண்டொருவ னெதிரே செல்லத், தள்ளவொண்ணா விருந்து வரச் சர்ப்பந் தீண்டக், கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக், குருக்கள் வந்து தட்சிணைக்குக் குறுக்கிட்டாரே" என்று மற்றொரு வகையாகவும் வழங்குகின்றது; இவ்வகைப் பாடபேதங்களால் சரியான முடிபின்மை யானும், பொருட்பொருத்த மில்லாமை யானும், பொருள் சிறக்குமாறு அவ்விரண்டடிகளும் மாற்றிக்கொள்ளப்பட்டன. (சுரு)

### உரியோரும் பகைவரா மியல்பு.

#### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தாய்பகை யன்பற் றோளேற் றந்தையுங் கடன்வைத் தானேல்
வாய்பகை மனைவி நல்ல மதியிழந் திருப்பா ளாகிற்

பேய்பகை யறிவுண் டாகும் பெருமைநூல் கல்லா விட்டாற்
சேய்பகை யொருவர்க் காகுந் தெளிந்தவ ருரையி தாமே.

(ப-ரை.) ஒருவர்க்கு-(உலகத்தில்) ஒருவர்க்கு, தாய் - அன்னை யானவள், அன்பு அற்றாளேல் - (தம்மீது) அன்பு நீங்கி யிருப்பாளே யாகில், பகை ஆகும் - அவளும் விரோதியாவாள்; தந்தையும் - தகப்ப னும், கடன் வைத்தானேல் - தமக்குக் கடனை யேற்படுத்தி வைப்பா னாகில், வாய் பகை (ஆகும்)-அவனும் பொருந்திய விரோதியாவான்; மனைவி - இல்லாள், நல்ல மதி - நல்லறிவை, இழந்திருப்பாளாகில் - நீங்கியிருப்பாளானால், பேய்(ஆகும்)-பேயாவாள்; (அன்றியும்), பகை (ஆகும்) - விரோதியுமாவாள்; அறிவு உண்டாகும்-ஞானம் விருத்தி யடைகின்ற, பெருமை - உயர்வையுடைய, நூல் - சாஸ்திரங்களை, சேய் - புத்திரன், கல்லாவிட்டால் - படிக்காவிடின், பகை (ஆகும்)- அவனும் விரோதியாவான்; இது - இவ்விஷயங்களடங்கிய இந்நீதி, தெளிந்தவர் உரையாம் - (சாஸ்திர நுட்பங்களை) ஆராய்ந்துணர்ந்தவ ருடைய வார்த்தை யாகும்.

(வி-ரை.) ஆகும் என்பதைத் தீபகமாக்கி நான்கிடத்துங் கூட்டுக. பகை ஆகுபெயராய் அதனை யுடையவரை யுணர்த்திற்று. இருக்கவேண்டிய ஒழுங்கு தவறி யிருப்பார்களேயானால், தாய் முதலியவர்களும் ஒருவர்க்கு விரோதிகளாவார்கள் என்பது இச்செய்யுட் கருத்து. (கூகூ)

நிலை தளர்ந்தபோது துணைசெய்யத் தக்கவரும்
கேடுசெய்வா ரென்பது.

இதுவுமது.

நிலைதளர்ந் திட்ட போது நீணிலத் துறவு மில்லை
சலமிருந் தகன்ற போது தாமரைக் கருக்கன் கூற்றம்
பலவனம் எரியும் போது பற்றுதீக் குறவாங் காற்று
மெலிவது விளக்கே யாகின் மீண்டுமக் காற்றே கூற்றாம்.

(ப-ரை.) தாமரைக்கு-(தடாகத்திலுள்ள) கமலத்துக்கு, (நீரிருக்குமளவும் சூரியன் நன்மையைச் செய்வதாகும்) சலம் இருந்து - தான் செழித்து வளர்தற்குரிய அந்நீர் தன்னுடன் சேர்ந்திருந்து, அகன்றபோது - வற்றி நீங்கிய சமயத்தில், அருக்கன் - (தன்னை முன்பு செழித்து வளரச்செய்த) அச்சூரியனே, கூற்றம் - தன்னைக் கொல்லும் யமனாகும், (அஃதாவது: தன்னை வாட்டிக் கருகச் செய்வதாகும்); பலம் - நற்பயனையுடைய, வனம் - காடானது, எரியும் போது - தீப்பற்றிப் பெருநெருப்பா யெரியுங்காலத்தில், பற்று - அதிற் பற்றுகின்ற, தீக்கு - நெருப்பிற்கு, காற்று - வாயுவானது, உறவாம் - துணையாகி அதனை அதிகப்படுத்தும்; அது - அப்பெருநெருப்பானது, மெலிவு - மெலிவையுடைய, (அஃதாவது சிறிய), விளக்கே யாகின்-விளக்கு நெருப்பாகவே யிருக்குமானால், மீண்டும்- திரும்பவும், அக்காற்றே - (முன் தான் காட்டுப்பெருந்தீயா யிருக்குங் காலத்தில் உதவியாயிருந்த) அவ்வாயுவே, கூற்றும் - அவ்விளக்கு நெருப்பிற்கு யமனாகும், (அஃதாவது: தன்னை அணைத்துவிடத்தக்கதாகும்); (இவைபோல), நிலைதளர்ந்திட்டபோது-மனிதர் தம்முடைய உயர்ந்த நிலைமை கெட்ட சமயத்தில், உறவும் - (தமக்குதவியா யேற்பட்டிருந்த மனிதருடைய) சிநேகமும், இல்லை - இல்லாமற் போய்விடும்.

(வி-ரை.) தாமரை நீரோடு சேர்ந்து செழிப்பாயிருக்கும் போது அதனை மலரச்செய்த சூரியனே அந்நீர் வற்றியபோது அதனை வாட்டுவது போலவும், தீ பெருநெருப்பா யிருக்கும்போது அதனை அதிகமாக மூளும்படி செய்து உதவி புரிந்த காற்றே அது குறுகிச் சிறிய விளக்குத் தீயா யிருக்கும்போது அதனை அணைத்து விடுவது போலவும், மனிதர் செல்வத்தோடு வாழும்போ திருந்த பலருடைய நேசம் அவர் தாழ்ந்தபோது இல்லாமற் பகையாகும். (௬எ)

ஈகையாற் கெடுவோ ரில்லையென்பது.

இதுவுமது.

மடுத்தபா வாணர் தக்கோர் மறையவ ரிரப்போர்க் கெல்லாங்
கொடுத்தெவர் வறுமை யுற்றூர் கொடாதுவாழ்ந் தவரார் மண்மேல்
எடுத்துநா டுண்ட நீரு மெடாதகாட் டகத்து நீரும்
அடுத்தகோ டையிலேவற்றி யார்ந்தகார்ப் பெருகுந் தானே.

(ப-ரை.) நாடு - நாட்டிலுள்ள மனிதர்கள், எடுத்து உண்ட - மொண்டு பருகிய, நீரும்-(ஊரை யடுத்துள்ள) தடாக நீரும், எடாத-(அவரால்) மொண்டு பருகப்படாத, காட்டகத்து - காட்டினிடத்தே யிருக்கும் பள்ளங்களிலுள்ள, நீரும் - சலமும், (மனிதர் பருகுவதாற் குறைதலும், பருகாமையால் அதிகப்படுதலுமில்லை); அடுத்த-நெருங்கிய, கோடையிலே - வெயிற்காலத்திலே, வற்றி - (அவைகள் இயற்கையாகவே) வறண்டு, ஆர்ந்த-(அதன் பின்னால் வந்து) பொருந்திய, கார்-கார் காலத்தில், பெருகும்-(மீண்டும்) நிறையும்; (இவைபோல), மடுத்த-(தம் மனத்திலே) நிறைந்த, பாவாணர்-பாடல்களால் வாழக்கூடிய புலவருக்கும், தக்கோர் - தகுதியுடைய முனிவர்க்கும், மறையவர் - அந்தணர்க்கும், இரப்போர்க்கு - யாசிக்கும் ஏழைகட்கும், எல்லாம் - (தம் கையிலுள்ள) எல்லாவற்றையும், கொடுத்து-உதவி (அதனால்), மண்மேல் - உலகத்தில், எவர் வறுமை உற்றூர்-தரித்திரத்தை யடைந்தவர் எவர்? (ஒருவருமில்லை); கொடாது - (ஒன்றையும்) கொடாமல், (செட்டாயிருந்து அதனால்), வாழ்ந்தவர் ஆர் - வாழ்வடைந்தவர் யாவர்? (ஒருவருமில்லை); (இவர்களுக்குத் தாழ்வும் வாழ்வும் பழ வினைப்பயனால் நேருமேயன்றி, கொடுப்பதனாலும் கொடாமையாலும் நேர்வதில்லையாம்).

(வி-ரை.) தடாகத்தின் நீர் பலர்எடுத்துப் பருகுவதால் குறைவதில்லை; காட்டு நீர் ஒருவரும் பருகாமையால் அதிகப்படுவதில்லை; இவ்விரண்டும், குறையுங் காலமாகிய வேனிற்காலத்தில் வறண்டுபோம்;

பெருகுங் காலமாகிய கார்காலத்தில் நிறைவுறும்; இவை காலத் தகுதி யால் ஏற்படக் கூடியவைகள். இவைபோல: மனிதரானவர், பாவா ணர் முதலியோர்க்குக் கொடுப்பதனுல் வறுமையடைய மாட்டார்கள்; கொடாதிருப்பதனுல் செல்வத்தை யடையமாட்டார்கள்; இவர்கள் பழவினைப்பயனுல் குறைவு வரும்போது குறைவார்கள், உயர்வு வரும்போது உயர்வார்கள்; இவை செலவிடுதலாலும், செலவிடாமை யாலும் ஏற்படுவனவல்ல. ஆதலின், ஈகையையே உயர்வாகக் கருதிச் செய்யவேண்டும்; அவ்வாறு செய்யின், அஃது இம்மைக்கும் மறு மைக்கும் பயனைத்தருவதாகும். நாடு - இடவாகுபெயர்; அதிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. தான், ஏ - ஈற்றசைகள். (சுஅ)

மன்மத வாதனை கொடிதென்பது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

உணங்கி யொருகான் முடமாகி யொருகண் ணின்றிச்
செவியிழந்து
வணங்கு நெடுவா லறுப்புண்டு மன்னு முதுகில்
வயிறெட்டி
அணங்கு நலிய மூப்பெய்தி யகல்வா யோடு
கழுத்தேந்திச்
சுணங்கன் முடுவல் பின்சென்று லியாரைக் காமன்
றுயர்செய்யான்.

(ப-ரை.) (உலகத்தில் மன்மதன் எத்தகையர் மனத்தையுங் கலக்கித் துன்புறுத்துவான்; அம்மன்மத வாதனையால்), உணங்கி - உடல் மெலிந்து, ஒருகால் முடமாகி - ஒற்றைக்கால் நொண்டியாகி, ஒரு கண் இன்றி - ஒரு கண்ணில்லாமல், செவி இழந்து - (அறு பட்டதனுல்) செவிகளு மில்லாமல், வணங்கு - வளைந்த, நெடு வால் - நீண்டவால், அறுப்புண்டு அறுக்கப்பெற்று, மன்னும் - பொருந்திய, முதுகில் - முதுகிலே, வயிறு ஒட்டி - வயிறு ஒட்டப்பெற்று, அண

கு - அழகானது, நலிய - குறைய, மூப்பு எய்தி - முதுமையை யடைந்து, அகல்வாயோடு-அகன்ற வாயோடு பொருந்திய, கழுத்து ஏந்தி - கழுத்தைத் தாங்கிக்கொண்டு, (இவ்வாறு மிகத் தாழ்ந்த நிலைமையை யடைந்த) சுணங்கன் - ஒரு நாயும், (ஒரு பெட்டை நாயைத் தேடிச் செல்லும்; இவ்வாறு அது), முடுவல் பின் - ஒரு பெட்டை நாயின் பின்னே, சென்றால் - (காம வாதனையால்) செல்லுமேயானால், காமன்-மன்மதன், (உலகத்தில்), யாரை - எவரைத் தான், துயர் செய்யான் - துன்பப்படுத்த மாட்டான்? (எல்லோரையும் துன்பப்படுத்தியே தீருவான்; ஆதலின், ஒவ்வொருவரும் அவ்வேதனைக் கிடங்கொடாமல் மனத்தை நல்வழியிற் றிருப்பி ஒழுக்கத்தை யடைதல்வேண்டும்).

(வி-ரை.) மோகமானது, அருவருக்கத்தக்க நாய் முதலியவற்றையும் துன்புறுத்தக் கூடிய தாதலால், அது உலகத்தில் எத்தகையரையுந் தொடர்ந்து வருத்தும்; ஆயினும், அறிவுடையோர் அதற்கிடங் கொடாது அதனைத் தள்ளி நல்வழிப்பட் டுய்யவேண்டும். "தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந், துன்னுமென் று துணிநருமுளரே" என்னும் (நன்-மெய். ௩) சூத்திரவிதியால், 'சென்றால் யாரை' என்னுந் தொடரில் லகரமெய்க்கு முன் யகரம் வர இகரந் தோன்றிற்று. (௬௬)

## துர்க்குண மாதரை நம்பலாகா தெனல்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கோளரி யடர்ந்த காட்டிற் குறங்கில்வைத் தமுத மூட்டித்
தோளினிற் றூக்கி வைத்துச் சுமந்துநண் புடன் வளர்த்த
ஆளனைக்கிணற் றிற்றள்ளி யரிவையோர் முடவற்சேர்ந்தாள்
தாளநேர் கண்ணி னாரைக் கனவிலு நம்பொ ணாதே.

(ப-ரை.) அரிவை - (நற்குணமில்லாத) ஒருபெண், (முன்னொரு காலத்தில் தான் தளர்ந்திருந்தபோது), குறங்கில் வைத்து - (தன்னைத்) தொடைமீது வைத்து, அமுதம் ஊட்டி - உணவூட்டி, தோளினில் தூக்கிவைத்து-(பிரிய மிகுதியால் தன்னைத்) தோளின் மேலே தூக்கிவைத்து, சுமந்து - தாங்கி, நண்புடன்-சிநேகத்தோடு, வளர்த்த - காப்பாற்றிய, ஆளனை - தன்னையாளும் நாயகனை, கோள்-கொலை செய்தலையுடைய, அரி - சிம்மங்கள், அடர்ந்த - நெருங்கிய, காட்டில்-வனத்தில், கிணற்றில் தள்ளி - (நன்றி மறந்து) கிணற்றிலே தள்ளிவிட்டு, ஓர் முடவன் - ஒரு முடவனை, சேர்ந்தாள் - (புருஷனாகக்கொண்டு) கூடினாள்; (ஆதலால் இத்தகைய மகா பாதகம் பொருந்திய), காளம் நேர்-விஷத்தைப்போன்ற, கண்ணினாரை - கண்களையுடைய கெட்ட மாதரை, கனவிலும் - சொப்பனத்திலும், நம்பொணாது - நம்பலாகாது.

(வி-ரை.) ஒரு பெண் முடவனை விரும்பிக் கணவனைக் கிணற்றிற் றள்ளிய இச்சரித்திரம் பஞ்சதந்திரம் லப்தஹானியிலுள்ளது. இத்தகைய குணமுடைய பெண்களை நம்புவோர்க்கு எப்பொழுதும் தீங்கே சம்பவிக்கும்; ஆதலின் நற்குணமுடைய பெண்களையே தேடி மணஞ் செய்யவேண்டும். (எ0)

பேண்ணை மணம் புரிந்துகோள்ள லாகாதேன்பது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பரவும் பட்டீச் சுரத்தானே!
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

(ப-ரை.) சேய் கொண்டு-சிவப்பு நிறத்தைக் கொண்டு, ஆரும்-பொருந்திய, கமலம் - தாமரைமலரி லிருக்கின்ற, செம்மலுடனே -

பெருமையிற் சிறந்தவனுகிய பிரமனுடனே, அரவம் - ஆதிசேட னென்னும் பாம்பாகிய, பாய் - சயனத்தை, கொண்டானும்-கொண் டவனுகிய விஷ்ணுவும், பரவும் - துதித்து வணங்கும், பட்டீச்சுரத் தானே-திருப்பட்டீச்சுரமென்னுந் தலத்தி லெழுந்தருளிய சிவபெரு மானே! (ஒரு மனிதன்), நூறு வயதளவு இருந்து-நூறுவயது நிறை யும் வரையிலும் நிலைபெற்றிருந்து, நோய் - பிணியையே, கொண் டாலும் கொள்ளலாம் - கொண்டிருந்தாலுங் கொண்டிருக்கலாம்; (அஃதன்றி), பேய் - ஒரு பேயை, கொண்டாலும் கொள்ளலாம் - தனக் குரிமையாகக் கொண்டாலும் கொள்ளலாம், (அஃதாவது இவற்றைக்கொண்டு இவற்ருல் வரும் துன்பத்தை யடைந்தாலு மடையலாம்); பெண்கொள்ளல் - ஒரு பெண்ணைக் கலியாணஞ் செய்துகொள்ளுதல், (அஃதாவது: ஒரு பெண்ணை மணம் புரிந்து கொண்டு துன்புறுவது), ஆகாது - கூடாதாம்.

(வி-ரை.) இச் செய்யுள், ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் இல்லற வின்பத்தை வெறுத்துக் கூறியதாகும்; "நிட்டையிலே யிருந்து..." என்னுஞ் செய்யுளும் இவர்கள் கூறியதேயாம். இவர்கள் இவ்வாறு, 'பெண் கொள்ள லாகாது' என்று பொதுப்படக் கூறி யிருப்பினும், தூர்க்குணமுடைய பெண்ணைக் கொள்ளலாகாது எனப் பொருள் கொள்ளுதலே தகுதியுடையதாம். எத்தகைய பெண்ணைக் கொண்டா லும் சமுசாரம் துக்க நிறைந்த தாதலின், சுவாமிகள் இங்ஙனம் இல் லறத்தை வெறுத்தும், துறவறத்தைச் சிறப்பித்தும் கூறினுர்கள். செம்மை - என்பது 'ஈறுபோதல்' என்னும் விதியால் மை விகுதி கெட்டு, 'முன்னின்ற மெய் திரிதல்' என்னும் விதியால் மகரமெய் யகரமெய்யாகத் திரிந்து, 'ஆதி நீடல்' என்னும் விதியால் முதல் நீண்டு, 'சேய்' என்ருயது. (எக)

### மானிட ரின்பம் அற்பமான தென்பது.

கலித்துறை.

கொண்டு விண்படர் கருடன்வாய்க் கொடுவரி நாகம்
மிண்ட நாகத்தின் வாயினில் வெருண்டவன் றேரை

மண்டு தேரையின் வாயினி லகப்படு மதுக்கொள்
வண்டு தானுக ரின்பமே மானிட ரின்பம்.

(ப-ரை.) மானிடர் - (அடுத்துவரும் மரணமுதலிய ஆபத்துக்
களுக்குள் அகப்பட்டிருந்து அற்பமாகிய போகங்களை யனுபவிக்கும்)
மனிதருடைய, இன்பம்-நிலையற்ற சுகமானது, (எத்தகையதெனில்
பருகுதற்குத் தேனை வாயிற்கொண்ட ஒரு வண்டு ஒரு தவளையின்
வாயிலகப்பட, அத்தவளை அவ்வண்டைக் கவ்வியபடியே ஒரு நாகத்
தின் வாயிற் சிக்க, அந்நாகம் அத்தவளையைக் கவ்வியபடியே ஒரு
கருடன் வாயி லகப்பட, அக்கருடன் எல்லாவற்றுடனும் அந்நாகத்
தைத் தூக்கிச்செல்லும்போது), கொண்டு-அவ்வாறு வாயாற் கவ்விக்
கொண்டு, விண்-ஆகாயத்தில், படர்-செல்லுகின்ற, கருடன் - அக்
கருடனுடைய, வாய் - வாயிலகப்பட்ட, கோடு - வளைவாகிய, வரி -
படத்தின் இரேகைகளையுடைய, நாகம்-அரவமும், விண்ட-கருடன்
வாயி லகப்பட்டதாகக்கூறிய, நாகத்தின்-அவ்வரவத்தின், வாயினில்
வாயில் (சிக்கி), வெருண்ட-பயந்த, தேரை - அத்தவளையும், மண்டு
அந்தப் பாம்பின் வாயில் நெருங்கிய, தேரையின்-அந்தத் தவளையின்
வாயினில்-வாயில், அகப்படும் - சிக்கிய, மதுக்கொள்-தேனை வாயிற்
கொண்ட, வண்டு - வண்டும், நுகர் - அநுபவிக்கின்ற, இன்பமே
அவ்வற்ப இன்பம் போன்றதேயாம்.

(வி-ரை.) பல துன்பங்களுக்கிடையி லகப்பட்ட மனித
இடையில் அனுபவிக்கும் அற்ப வின்பமானது, மரணம் அடுத்திரு
தும் அதற்கிடையி லகப்பட்ட இரையில் இந்தப் பிராணிகள் திருப்தி
கொண்டது போலாம். (எஉ

என்னசெய்தாலும் புல்லர்குணம் மாறாதெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கற்பூரப் பாத்திகட்டிக் கஸ்தூரி யெருப்போட்டுக்
கமழ்நீர் பாய்ச்சிப்

பாற்பூர வுள்ளிதனை விதைத்தாலு மதன்குணத்தைப்
பொருந்தக் காட்டும்
சாற்பேதை யர்க்கறிவிங் கினிதாக வருமெனவே
சொல்லி ஞலும்
ற்போதம் வாராதாங் கவர்குணமே மேலாக
நடக்குந் தானே.

(ப-ரை.) கற்பூரம் - பச்சைக் கற்பூரத்தால், பாத்தி கட்டி -
ரம்புகட்டிச் சிறுசெய் உண்டாக்கி,(அதில்),கஸ்தூரி-கஸ்தூரியை,
ருப்போட்டு-எருவாக இட்டு, கமழ் நீர்-வாசனை நீராகிய பனிநீரை,
ாய்ச்சி - பெருக்கி, பொற்பு ஊர-அழகு அதிகரிக்க, உள்ளிதனை-
வெள்ளைப்பூண்டை, விதைத்தாலும் - விதைத்தபோதிலும், (அது
ளைத்து வெளிப்படுங் காலத்தில்), அதன் குணத்தை-அதனுடைய
கெட்ட வாசனையாகிய குணத்தையே, பொருந்த - பொருந்தும்படி,
ாட்டும் - வெளிப்படுத்தும்; (அதுபோல), சொல்-பழிச்சொற்களை
டைய, (அஃதாவது: பழிச்சொற்களை ஏற்றுக்கொள்ளத்தக்க),
பதையர்க்கு-முழு மூடருக்கு, இங்கு - இவ்வுலகத்தில், இனிதாக-
இனிமையாக, அறிவு வரும் என-அறிவுண்டாகுமென்று நினைத்து,
சொல்லினுலும்-(நற்புத்திகளை எடுத்துக்) கூறினுலும், நல்போதம்-
ல்லறிவு, வாராது - வரவே மாட்டாது; ஆங்கு - அவர் பொருந்தி
ருக்கின்ற அவ்விடத்தில், அவர் குணமே - அவருடைய துர்க்
ணங்களே, மேலாக - உயர்வாக, நடக்கும்-அவரிடத்தில் விருத்தி
ாகி வளர்ந்துகொண் டிருக்கும்.

(வி-ரை.) ஆங்கு - அசையுமாம். (எஅ)

அற்பர் நேயம் கூடா தெனல்.
இதுவுமது.

மருவுசந்தனக்குழம்புநன் மணமலர்மகிழ்மிகவணிந்தாலுஞ்
ருவ வையமா மனமுள மாதர்பாற் சார்வது மாகாதே

பருவதங்கள்போற்பற்பல நவமணி பைம்பொனையீந்தாலும்
செருவ மிஞ்சிய மானிட ருறவெணிக் கிட்டலு மாகாதே.

(ப - ரை.) மருவு - பொருந்திய, சந்தனக்குழம்பு - சந்தனத் தேய்வையையும், நல் - நல்ல, மணமலர் - வாசனைபொருந்திய புஷ்பங்களையும், மகிழ் மிக-(பார்ப்பவர்களுக்குச்) சந்தோஷம் அதிகரிக்கும்படி, அணிந்தாலும்-அணிந்து அலங்கரித்துக்கொண்டிருந்தாலும், சருவம்-முழுமையும், ஐயம் ஆம்-சந்தேகமாகிய, (அஃதாவது: 'எந்த சமயம் நமக்குக் கேடு செய்யுமோ என்று பிறர் சந்தேகிக்கத்தக்க) மனம் உள்ள - அன்பற்ற மனம்பொருந்திய, மாதர்பால் - வேசைப் பெண்களிருக்கும் பக்கத்தில், சார்வதும்-ஒருவர் பொருந்திச் செல்வதும், ஆகாது-கூடாது; (அதுபோல), பருவதங்கள்போல்-மலைகளைப் போல (மிகுதியாக), பல்பல - பலபலவாகிய, நவமணி - ஒன்பது வகை ரத்தினங்களையும், பைம்பொன்னை-பசும்பொன்னையும், ஈந்தாலும் - கொடுத்தாலும், செருவம் மிஞ்சிய - அகங்காரம் அதிகரித்த, மானிடர் - மனிதர்களுடைய, உறவு எண்ணி - நேயத்தை விரும்பி, கிட்டலும்-அவர் சமீபத்தில் ஒருவர் நெருங்குதலும், ஆகாது - கெட்டதாம்.

(வி-ரை.) வேசையரிடத்தும், அகங்கார முடையவரிடத்தும் நேயங்கொள்ளாவிடினும் சமீபத்தில் நெருங்குவதும் தீங்காமாதலின், 'சார்வது மாகாது' என்றும், 'கிட்டலுமாகாது' என்றும், எச்சவும்மை கொடுத்து இச்செய்யுளாசிரியர் கூறினர்; நெருங்குவதும் தீங்காமெனவே, நேயங்கொள்வது பெருந்தீங்காமென்பது தானே விளங்கும். (எச)

எண்ணியபடி ஒன்றும் முடியா தென்பது

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கரியது திங்கட் காகுங் கானவன் மூன்று நாளாம்
இரிதலைப் புற்றி னுக மின்றுணு மிரையா மென்று

ரிதலை வேடன் கையின் விற்குதை நரம்பைக் கவ்வி
ரியனார் பட்ட பாடு நாளைநாம் படுவ மாதோ.

(ப-ரை.) (உலகத்தவரே! நாம் நிலையற்ற செல்வ முதலியவற்ற இன்றைக்காகும், நாளைக்காகுமென்று கணக்கிட்டுப் பெருக்கி, ணே உலகமாயையிற் சிக்கி யுழல்கின்றோம்; அவற்றை எண்ணிய டியே நாம் அனுபவித்தல் முடியாது; அடுத்த நிமிஷத்திலேயே ரணஞ் சம்பவித்து, அப்பொருள்கள் நமக் குதவாமற் போம்; நம் டைய வாழ்வு நிலையற்றதா யிருந்தும், நாம் இவ்வாறு பொருளா ச முதலியவற்றை விருத்திசெய்வதால், ஒருவேடன் ஒரு காட்டிற் சென்று ஒரு புற்றின் மீதேறி நின்று எதிரே வந்த யானையைப் ாணத்தா லெய்ய, அப்பாணம் அதன் நெற்றியிற் பட்டமாத்திரத் ல் அது அப் புற்றிற் பாய்ந்து வீழ்ந்திறக்க, அத்தருணத்தில் அப் ற்றிலிருந்த நாகம் வெளிப்பட்டு அவ்வேடனுடைய காலைக் கடிக்க, டனே அவன் அப்பாம்பின் தலையை வெட்டி அதனைக் கொன்று, னும் விஷம் தலைக்கேறி யிறந்து கிடக்க, அப்போது அங்கு வந்து றந்து கிடந்த வேடனுடைய தேகத்தையும், யானைமுதலியவற்றை ம் கண்ட)நரியனார்-ஒரு நரியானது, (எல்லாப் பிரேதங்களையும் பார் து), கரி-(இங்கே இறந்து கிடக்கும்) யானை, அறு திங்கட்கு-ஆறு ாதங்களுக்கு, இரை (ஆகும்)-உணவாகும்; கானவன்-வேடன், மூன் நாள் (இரை) ஆம்-மூன்றுநாளைக்கு உணவாவான்; புற்றில் - இப் ற்றிலிருந்ததும், இரி தலை - நசுங்கிக்கெட்ட தலையையுடையது ாகிய, நாகம் - இப்பாம்பானது, இன்று - இன்றைக்கு, உண்ணும்- ருந்துகின்ற, இரையாம் - உணவாகும்; என்று - என்று கணக்கிட் ப் பேராசைகொண்டு, (இப்பொழுது முதலில் இச்சிறிய உணவை ாத்திரம் உண்ணுவோம்; பின்னர் மற்றவற்றை உண்ணலாம் எனத் ர்மானித்து), விரி தலை - மயிர்முடி அவிழ்ந்து பரந்த தலையை டைய, வேடன் கையின் - அவ்வேடன் கரத்திலிருந்த, வில் -

வில்லின், குதை - குதையிலேற்றியிருந்த, நரம்பைக் கவ்வி - நா
நரம்பைக் கடித்து, (அந்நரம் பறுபடவே, வளைந்திருந்த வில் வி
யுட னிமிர்ந்து அதன் தொண்டையிற் பாய, அதனால் ஒன்றைய
அனுபவியாம லிறந்து), பட்டபாடு - (நரி) அடைந்த துன்பத்
நாளை - அடுத்த தினமே, நாம் படுவம் - நாம் அனுபவிப்போம்.

(வி-ரை.) நரி இங்ஙனம் வீணாசை கொண்டிருந்த கதை, ஜை
முனிவராகிய திருத்தக்கதேவர் செல்வநிலையாமை, தேக நிலையா
முதலியவற்றைப் பற்றிப் பாடிய 'நரி விருத்தம்' என்னும் நூலி
ளது. இச்செய்யுட் கருத்திற்குப் பெரும்பான்மையு மிணங்க, அ
விருத்த மென்னும் நூலில், "களிறறு திங்கட் காகுங் கானவ
மேழ்நாள், ஒளிறுவா ளெயிற்று நாக முண்டொர்நாட் கிரையெ
றெண்ணி, வெளிறிலாச் சிலையிற் கோத்த நாரிவாய்க் குதையை
கவ்விக், குளிறு பேழ் வாயி லுய்ப்பக் கொடுவிற்கோத் திட்ட த
றே" என்னும் பாடல் கூறப்பட்டுள்ளது. இரை - என்பதைத் தீ
மாக்கி, மூன்றிடத்துங் கூட்டுக. நரியனார் என்பதில், "உவப்பி
முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழுப்பினும் பால்தி
யிழுக்கினு மியல்பே" என்னும் (நன். பொ. உஅ) சூத்திரவிதிப்ப
இழிவினால் அஃறிணை உயர்திணை யாயிற்று. இச் செய்யுட் கருத்தி
கேற்ப, நரிக்கதை முதலியன வருவித் துரைக்கப்பட்டன. இச்செ
யுளில், 'கரியொரு திங்க ளாறு' என்றும், 'இருதலைப் புற்றி ஞக
என்றும் பாடபேத முண்டு. (எ

கீர்த்தி யற்றோரை உலகத்தார் மதியா ரென்பது.

இதுவுமது

பூதலத்தின் மானிடரா யொருவர்பிறந் திடலரிது
பொருந்தி னாலும்
ஆதிமறை நூலின்முறை யறிந்துபுக ழார்தலங்க
ளன்பாச் சென்று

நீதிவழு வாமல்வரும் வழக்குரைத்து நல்லோரை
நேசங் கொண்டு
காதவள வேனும்பேர் பரப்பாரே லவர்பிறப்புக்
கழுதை யாமே.

(ப-ரை.) பூதலத்தில் - இப்பூமியில், ஒருவர் - ஒரு ஜீவர், மானிடராய் - மனிதராய், பிறந்திடல் - ஜனனமெடுப்பது, அரிது- (எல்லாவற்றுள்ளும்) அருமையாம்; பொருந்தினலும் - (அவ்வாறு உயர்ந்த மானிட ஜனனமாகப்) பொருந்திப் பிறந்திட்டாலும், (அப்படிப் பிறந்தவர்), ஆதி - முதன்மையாகிய, மறைநூலின் - வேத சாஸ்திரங்களின், முறை - ஒழுங்குகளை, அறிந்து-தெரிந்து, புகழ் ஆர் - கீர்த்தி நிறைந்த, தலங்கள் - புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு, அன்பாச் சென்று - பிரியத்துடனே யாத்திரைசெய்து, நீதி வழுவாமல் - மனுநீதி முறை பிசகாமல், வரும் - தம்மிடத்தே நியாயத் தீர்ப்புக்காக வரும், வழக்கு - வழக்குகளை, உரைத்து - சரியானபடி நடுவு நிலைமையோடு தீர்ப்புச் செய்து சொல்லி, நல்லோரை-நற்குண முடையவரை, நேசம் கொண்டு - உறவாகக்கொண்டு, காதம் அளவேனும் - (நான்கு கூப்பிடு தூரங்கொண்ட) காததூரத்தளவாவது, பேர்-தம்முடைய பெயரை, பரப்பாரேல் - பரவச் செய்யார்களேயானல், அவர் பிறப்பு - (அப்படி மனிதராகப் பிறந்த) அவருடைய பிறப்பு, கழுதையாம் - கழுதைப் பிறப்பைப்போல இழிவுடையதாம்.

(வி-ரை.) ஒருவர் மானிடராகப் பிறந்தாலும், அவர்க்குச் சாஸ்திர ஞான முதலியன இல்லாவிடின் அவர் பிறப்பு மிக்க இழிவுடையதாகக் கருதப்படும். "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும், வன்மைக் கினமாத் திரிபவு மாகும்" என்னும் (நன். மெ. பு. கசு) சூத்திரவிதிப்படி, 'காதம்' என்பதில் மகரவீறு கெட்டது. (எசு)

புல்லர்க் குபகாரஞ் செய்யின் அது தீங்காய் முடியுமெனல்.

இதுவுமது.

வல்லியந் தனைக்கண் டஞ்சி மாந்தனி லேறும் வேடன்
கொல்லுதன் பசியைத் தீர்த்திரட்சித்தகுரங்கைக்கொன்ருன்

நல்லவன் றனக்குச் செய்த நலமதா லுயர்வுண் டாகும்
புல்லர்க்கு நன்மை செய்தா லுயிர்தனைப் போக்கு வாரே.

(ப-ரை.) (முன்னொருகாலத்தில்), வல்லியந்தனைக்கண்டு-ஒரு புலியைப் பார்த்து, அஞ்சி - பயந்து, மரந்தனில் - ஒருமரத்தில், ஏறும் வேடன் - ஏறிய வேடனொருவன், கொல்லு - மிகவும் வருத்திக்) கொல்லத்தக்க, தன் - தன்னுடைய, பசியைத் தீர்த்து - பசி நோயைத் தணித்து, இரட்சித்த - காப்பாற்றிய, குரங்கை - வானரத்தை, கொன்றான் - (நன்றி யறியாமற்) கொலைசெய்தான்; (அது போல), புல்லர்க்கு-(நன்றிகெட்ட) அற்பருக்கு, நன்மை செய்தால்- நலத்தைச் செய்தால், (அவர்கள் அந் நன்றியைக் கருதாமல்), உயிர் தனை - (அவ்வாறு நன்றி செய்தவருடைய) உயிரை, போக்குவார்- நீக்கிக் கொல்லுவார்; நல்லவன் தனக்கு - நற்குணமுடைய மனிதனுக்கு, செய்த - இயற்றிய, நல மதால் - நன்மையால், உயர்வு உண்டாகும் - மேன்மை அதிகரிக்கும்.

(வி-ரை.) நன்றி செய்த குரங்கை வேடன் கொன்றானென்னும் இக்கதை புராதனக் கதைகளு ளொன்று. (எஎ)

ஒருவன் தன்னைப்போலவே பிறரையுங்
கருதவேண்டு மெனல்.

இதுவுமது.

தன்மானங் குலமானந் தனைவேண்டி வந்தடைந்தோர்
தங்கண் மானம்
என்மான மிவைசமமா மென்றெண்ணிப் பிறரிடத்து
மினிமை யான
நன்மானம் வைத்தெந்த நாளுமவர் தங்களுக்கு
நலஞ்செய் வோனை
மன்மானி யடைந்தோரைக் காக்கின்ற வள்ளலென
வழுத்த லாமே.

(ப-ரை.) தன் - தன்னுடைய, மானம்-பெருமை பொருந்திய, குலமானம் - குலாபிமானம், வேண்டி - விரும்பி, தன்னை-தன்னிடத்தில், வந்து அடைந்தோர் தங்கள்-வந்து சேர்ந்தவர்களுடைய, மானம் - அபிமானம், (அஃதாவது, அவர்கள்மீது செலுத்தும் அபிமானம்), என் - என்று வேறுபிரித்துக் கூறப்படும், மானம் இவை - மானங்களாகிய இவைகளிரண்டும், சமம் ஆம் என்று எண்ணி - ஒரே தன்மை யுடையவைகளாமென்று கருதி, பிறரிடத்தும் - அன்னியரிடத்தும், இனிமையான-இனிமை பொருந்திய, நல் மானம் வைத்து - நல்ல நேசத்தை நிறுத்தி, எந்த நாளும் - எந்நாளினும், அவர் தங்களுக்கு - அவர்களுக்கு, நலம் செய்வோனை-நன்மை செய்யும் ஒருவனை, மன் - பொருந்திய, மானி (என)-மரியாதையுடையவனெனவும், அடைந்தோரை-தன்னைச் சேர்ந்தவரை, காக்கின்ற-காக்கும், வள்ளல் என - ஈகை யுடையவனெனவும், வழுத்தலாம் - சொல்லலாம்.

(வி-ரை.) ஒருவன் தன்குலத்தினிடத்தில் எவ்வளவு அபிமானம் வைத்திருக்கின்றானோ, அவ்வளவு அபிமானத்தைத் தன்னைச் சேர்ந்தவரிடத்துஞ் செலுத்தி அவர்களையும் மேன்மைப்படுத்த வேண்டும்; இவ்வாறு செய்யின் அவன் வள்ளலென்று கொண்டாடப்படுவான். இவ்வாறின்றித் தம்முடைய பெருமையை மாத்திரம் கவனித்துத் தம்மைச் சேர்ந்தவரைத் தாழ்த்துவோர் மடையரிற் சிறந்த மடைய ராவார். தன்னை - உருபு மயக்கம். என—என்பதை இரண்டிடத்துங் கூட்டுக. (எஅ)

## அறிவற்றோ ரியல்பு.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தன்னைத்தான் புகழ்வோனுந் தன்குலமே பெரிதென்று
தான்சொல் வோனும்

பொன்னைத்தான் றேடியறம் புரியாம லதைக்காத்துப்
பொன்றி ஞேரும்
மின்னைப்போன் மனையாளை வீட்டில்வைத்து வேசைதனை
விரும்பு வோரும்
அன்னைபிதா பாவலரைப் பகைப்போரு மறிவில்லாக்
கசடர் தாமே.

(ப-ரை.) தன்னை - தன்னுடைய தன்மையை, தான் - தானே புகழ்வோனும் - புகழ்ந்து சொல்லிக் கொள்பவனும்; தன் குலமே தன்னுடைய சாதியே, பெரிது என்று - (எல்லாச் சாதிகளினும் உயர்ந்ததென்று, தான் - தானே, சொல்வோனும் - சொல்லி பெருமை கொள்வோனும்; பொன்னை - திரவியத்தை, தான் தேடி தானே சம்பாதித்து, அறம்புரியாமல் - அதைக்கொண்டு தருமஞ் செய்யாமல், அதைக் காத்து-(குறை வுறமல்) அதைக் காப்பாற்றி பொன்றிஞேரும் - (அதனல் ஒருபயனையு மடையாமல் அதனை யிழந்து) இறந்த உலோபிகளும்; மின்னைப்போல் - மின்னலை போலுஞ் சாயலையுடைய, மனையாளை - (அழகிய) மனைவியை வீட்டில் வைத்து - வீட்டிலே வருந்தும்படி வைத்துவிட்டு, வேசை தனை - கூடத்தகாத பரத்தையை, விரும்புவோரும் - நேசிக்கின் வர்களும்; அன்னை - மாதாவையும், பிதா - தகப்பனையும், பாவலரை வித்துவான்களையும், பகைப்போரும் - பகைத்துக் கொள்வோரும் (ஆகிய இவர்கள்), அறிவில்லா-அறிவற்ற, கசடர் - கீழ்மக்களாவர்

(வி-ரை.) ஒருவன், அன்னியரால் புகழப்படுதல் சிறப்பே யன் றித் தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளுதல் சிறப்பின்றும். அவ்வாறு புகழ்ந்து கொள்வோனும், மனைவியை நீக்கி வேசையின் சுகத்தை விரும்புவோரும், அன்னை முதலியோரைப் பகைப்போரும், ஆகிய இவர்கள் உலகத்தவரால் நிந்திக்கப்படுவர். (எக

## மூட ரியல்பு.

இதுவுமது.

பெண்டுகள்சொற் கேட்கின்ற பேயர்களே குணமூடப்
பேடி யாவார்
முண்டைகளுக் கிணையில்லார் முனைவீர புருஷரென
மொழியொ ணாது
உண்டுலகி னுதிப்பாருட் கீர்த்தியற மின்னதென
வுணர்த லில்லார்
அண்டினவர் தமைக்கெடுப்பா ரழிவழக்கே சொல்வதவ
றறிவு தானே.

(ப-ரை.) பெண்டுகள் - அறிவற்ற பெண்களுடைய, சொல் - சொற்களை, கேட்கின்ற - கேட்டு நடக்கின்ற, பேயர்களே - பேய்க் குண முடையவர்களே, மூடகுணம் - அறிவற்ற குணத்தையுடைய, பேடி ஆவார்-ஆண்தன்மையிழந்து பெண்தன்மை மிகுந்தவ ராவார்; (இன்னும் இவர்), முண்டைகளுக்கு - கைம்பெண்களுக்கும், இணை இல்லார் - சம மாகமாட்டார்; (இவரை), முனை - யுத்தஞ் செய்யக் கூடிய, வீரபுருஷர் என-வீரம் பொருந்திய மனிதரென, மொழிய ஒண்ணாது - சொல்லுதல் கூடாது; (இன்னும்), உண்டு - (சென்ற ஜன்மங்களிலே தங்கள் தங்கள் பழவினைப் பயன்களை) அனுப வித்து, உலகில் - உலகத்தில், உதிப்பாருள் - மனிதராகப் பிறப்பவர் களுள், கீர்த்தி - இசைபொருந்திய, அறம் - தருமத்தை, இன்னது என - இன்னதென்று, உணர்தல் இல்லார் - அறியுந்தன்மை யில்லா தவர், அண்டினவர் தம்மை - (தம்மை நல்லவரென்று நினைத்துத் தம்மிடம்) சேர்ந்தவரை, கெடுப்பார் - (காப்பாற்றாமல்) கெடுத்து விடுவார்; அழி வழக்கே சொல்வது - கெட்ட வழக் குரைப்பதே, அவர் அறிவு - அவருடைய புத்தியின் இயற்கைக் குணமாகும்.

(வி-ரை.) மாதர் பேதைமை யுடையவராதலின், அவர் சொற் கேட்டு நடப்போர் எத்தகையராயினும் வீரமுடைய மனிதரென்று புகழப்படாமல் இகழப்படுவார்; அறத்தன்மை யுணராதவர் அண்டினோரைக் கெடுத்தல், அழிவழக்குரைத்தல் முதலியன செய்து, அவரும் உலகத்தவரால் நிந்திக்கப்படுவார். குணமூடம் என்பதை மூடகுணம் என மாற்றுக. (அ0)

## பொல்லா ரியல்பும், நல்லா ரியல்பும்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொல்லார்க்குக் கல்விவரிற் கருவமுண்டா
மதனோடு பொருளுஞ் சேர்ந்தால்
சொல்லாதுஞ் சொல்லுவிக்குஞ் சொற்சென்றாற்
குடிகெடுக்கத் துணிவர் கண்டாய்
நல்லோர்க்கிம் மூன்றுகுண முண்டாகி
லருளதிக ஞான முண்டாம்
எல்லோர்க்கு முபகார ராயிருந்து
பரகதியை யெய்து வாரே.

(ப-ரை.) பொல்லார்க்கு - (உலகத்தில்) கெட்டவருக்கு, கல்வி வரின்-கல்வியுண்டானால், (அதனா லேற்படவேண்டிய நற்குணங்களேற்படாமல்), கருவம் உண்டாம்-அகங்காரமுண்டாகும்; அதனோடு-அக் கல்வியோடு, பொருளும் சேர்ந்தால் - திரவியமும் வந்து கூடிவிட்டால், (அப் பொருளானது சாந்தமான வார்த்தைகளைச் சொல்லுவதை நீக்கி), சொல்லாதும் - சொல்லத்தகாத வார்த்தையையும், சொல்லுவிக்கும் - (அவர்களைச்) சொல்லும்படி செய்யும்; (இன்னும் அவர்களுக்கு), சொல் சென்றால் - (அக் கல்வி, பொருள் ஆகியவற்றோடு) செல்வாக்கும் நடக்குமானால், (அவர்கள் பிறர்க்கு நலஞ்செய்வதைவிட்டுப் பல துஷ்டர்களை ஏவி), குடி கெடுக்க - அன்னிய

ருடைய குடும்பத்தைக் கெடுக்க, துணிவர் - எண்ணுவார்கள்; நல்லோர்க்கு-நற்குணமுடையவருக்கு, இம்மூன்று குணம்-இம்மூவகை மேன்மைகளும், உண்டாகில் - ஏற்படுமேயானல், அருள் அதிகம்-கிருபை மிகுதியாம்; ஞானம் உண்டாம் - அறிவுண்டாகும்; (அவர்கள்), எல்லோர்க்கும் - யாவருக்கும், உபகாரரா யிருந்து - உதவியுடையவர்களா யிருந்து, (முடிவில் அவ்வறத்தின் மிகுதியால்), பரகதியை - முத்தியை, எய்துவார் - அடைவார்.

(வி-ரை.) பொல்லார்க்குக் கல்வி முதலியன சேர்ந்தால், அவரியற்கைக்குத் தக்கபடி அவற்றால் நன்மை யெய்தாமல் கர்வ முதலிய தீக்குணங்களையே பெறுவார்கள். நல்லோர்க்கு இம் மூன்றுஞ் சேர்ந்தால், அவர்கள் கல்வியால் அருளையும், பொருளால் அறமுதலியன செய்து அவற்றின் பயனாக வந்தெய்தும் ஆத்மஞானத்தையும், செல்வாக்கினால் பிறர்க்கு நன்மைசெய்து உபகாரரா யிருத்தலையும் பெற்று, இம் மூன்றினாலும் முடிவில் முத்தியைப் பெறுவார்கள். கண்டாய் - அசை. (அக)

பெரியோராகிய புலவர்கள் சிறிய புலவருக்கும்
கௌரவத்தை யுண்டாக்குவா ரெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சலதாரை வீழு நீருஞ் சாகரந் தன்னைச் சார்ந்தாற்
குலமென்றேகொள்வதல்லாற் குரைகடல்வெறுப்பதுண்டோ
புலவர்கள் சபையிற் கூடிப் புன்கவி யாளர் சார்ந்தால்
நலமென்றேகொள்வதல்லானவில்வரோபெரியோர் குற்றம்.

(ப-ரை.) சலதாரை-(வீட்டின் கழிநீர்பாயும்) தூம்பில், வீழும்-விழுகின்ற, நீரும்-(அருவருக்கத்தக்க) சலமும், சாகரந்தன்னை-சமுத்திரத்தை, சார்ந்தால் - அடைந்தால், குரை - சப்திக்கின்ற, கடல் - அச் சமுத்திரமானது, (அச்சலதாரை நீரையும்), குலம் என்றே-தன்

இனமென்றே நினைத்து, கொள்வதல்லால் - தன்னோடு சேர்த்துக் கொள்வதல்லாமல், வெறுப்பது உண்டோ - அதனை வெறுத்துத் தள்ளிவிடுவதுண்டோ? (இல்லை; அதுபோல), புன் கவியாளர் - அற்பமான கவிகளை யுடையவர்களும், புலவர்கள் சபையில் - பெரிய வித்வான்கள் கூடியிருக்கும் கூட்டத்திலே, கூடி - கலந்து, சார்ந்தால் - (புன்கவிகளைப் பாடிக்கொண்டு) அடைந்தால், பெரியோர் - உயர்ந்தோராகிய அப்புலவர்கள், நலம் என்று-அவர்கள் கவி நன்மை யுடையதென்று சொல்லி, கொள்வதல்லால்-அவர்களை ஏற்றுக்கொள்வ தல்லாமல், குற்றம் நவில்வரோ - அவர் மீதும், அவர் பாடல் மீதும் குற்றம் சொல்வாரோ? (சொல்லமாட்டார்கள்).

(வி-ரை.) பெரிய வித்வான்கள் புன்கவியாளர்க்கும் கௌரவத்தை யுண்டாக்குதலை, "மண்ணுண்ணி மாப்பிளையே காவிறையே கூவிறையே, உங்களப்பன் கோவிற் பெருச்சாளி, கன்னு பின்னு மன்னு தென்னு, சோழங்கப்பெருமானே" என்று சோழன்மீது ஒரு விறகு தலையன் பாடிச் சென்ற காலத்தில், கம்பர் அவனைக் கௌரவப்படுத்தியதா லுணர்க. (அ௨)

எதுவும் தெய்வச்செயலின்படி நடக்குமெனல்.

இதுவுமது.

காந்தொருவன் கணைதொடுக்க மேற்பறக்கும் வல்லூற்றின் கருத்துங் கண்டே
ஊர்ந்தையுற்றுக் கானகத்தி லுயிர்ப்புறு பேடுதனக் குரைக்குங் காலை
விரைந்துவிடந் தீண்டவுயிர் விடும்வேடன் கணையால்வல் லூறும் வீழ்ந்த
தான்செயலே யாவதல்லா னஞ்செயலா லாவதுண்டோ வறிவுள் ளோரே.

(ப-ரை.) கானகத்தில்-ஒரு காட்டில், (முன்னொருகாலத்தில்), ஒருவன்-ஒருவேடன், கரந்து - மறைந்திருந்து, (இரண்டு புறாக்களை நோக்கி), கணை தொடுக்க - அம்பை வில்லிற்றொடுத்து விடுப்பதற்கு இழுக்க, (அச் சமயத்தில் அப் புறாக்கள் பறந்துவரின் அவற்றை அடித்துக் கொல்லலாமெனக் கருதி மேலே ஒரு வல்லூறு பறந்து கொண்டிருக்க, அவ்வேடனுக்குப் பயந்து மேலே பறந்து செல்லக் கருதிய அப்புறாக்களுள்), உயிர்ப்புறா-பெட்டையின் உயிரை நிகர்த்த ஆண்புறாவானது,(வேடன் கொடுஞ்செய்கையைக் கண்டதோடு, தன்னையும், தன்பெட்டையையும் கொல்லக்கருதி),மேல்பறக்கும்-மேலே பறக்கின்ற, வல்லூற்றின் - இராசாளியினுடைய, கருத்தும் - தீய எண்ணத்தையும், கண்டு - பார்த்து, உரந்தை உற்று - வருத்தத்தை யடைந்து, பேடுதனக்கு - பெண் புறாவுக்கு, உரைக்குங்காலை - (இவ்வாறு இரண்டு பக்கத்தும் ஆபத்து வந்திருக்கின்றதே, நாம் என் செய்வோம் என்று மயங்கிச்) சொல்லுஞ் சமயத்தில், விடம்-விடத்தையுடைய ஒரு பாம்பானது, விரைந்து-வேகங்கொண்டு, தீண்ட - அவ்வேடனைக் கடிக்க, (அவ்வேடன் பாணத்தை யிழுத்திருந்த கையை விட்டு, அப்பாணம் மேலே செல்லத் தான் உயிர்விட்டான்; அவ்வாறு), உயிர் விடும் - பிராணனை விடுகின்ற, வேடன்-அவ்வேடனுடைய, (அஃதாவது: அவன் கையினின்றும் விடுபட்ட), கணையால் - அப் பாணத்தினாலே, (அப்புறாக்கள் விழாமல்), வல்லூறும் - மேலே பறந்துகொண்டிருந்த இராசாளியும், வீழ்ந்தது - காயம்பட்டு விழுந்திறந்தது; (இதுபோல, உலகத்தில் கொடியர் ஒருவருக்குத் தீங்குசெய்ய நினைப்பினும், தெய்வச்செயலால் அவர்களுடைய எண்ணம் நிறைவேறாமல் அவர்களே அழிவர் ஆதலால்),அறிவுள்ளோரே-அறிவுடையவர்களே!, அரன்செயலே ஆவது அல்லாமல் - சிவன் செயலே மேலிட்டு நடப்பதல்லாமல், நம் செயலால் - நம்முடைய செய்கையால், ஆவது - உண்டாகத்தக்க காரியம், உண்டோ - ஒன்றுண்டோ? (இல்லை),

(வி-ரை.) விடம் - குணவாகுபெயர், அதனையுடைய பாம்பை யுணர்த்தலால். "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும், வன்மைக்கின மாத் திரிபவுமாகும்" என்னும் (நன்-மெ-பு-கசு) சூத்திரவிதியால் 'நம் செயல்' என்பதில் மகரம் ஞகரமாகத் திரிந்தது. "தாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்" என்னும் பழமொழிக் கருத்தையும், "ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும், அன்றி யதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை, நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும், எனையாளு மீசன் செயல்" என்ற நல்வழிச் செய்யுட் பொருளையும் இப்பாடலின் கருத்து ஒத்திருத்த லுணர்க. (அரு)

## மூடரை மூடர் கொண்டாடும் விதம்.

### கலித்துறை.

குரங்கு நின்றுகூத் தாடிய கோலத்தைக் கண்டே
அரங்கு முன்னிநாய் பாடிக்கொண் டாடுதல் போலும்
கரங்க ணீட்டியே பேசிடுங் கசடரைக் கண்டு
சிரங்க ளாட்டியே மெச்சிடு மறிவிலார் செய்கை.

(ப-ரை.) கரங்கள் நீட்டி - (பெருமையாகக்) கைகளை நீட்டி, பேசிடும்-(தம்மைப் புகழ்ந்து) பேசும், கசடரை-கீழ்மக்களை, கண்டு-பார்த்து, சிரங்கள் - தங்கள் தலைகளை, ஆட்டி - அசைத்து; (அஃதாவது: சிரக் கம்பங்கள் செய்து), மெச்சிடும் - அவர்களைப் புகழும், அறிவு இல்லார்-புத்தியில்லாத மூடர்களுடைய, செய்கை-அம்மூடச் செயலானது, குரங்கு - வானரமானது, நின்று - சபையிலே நின்று, கூத்தாடிய - நிருத்தனம் புரிந்த, கோலத்தை - வடிவத்தை, கண்டு-பார்த்து, நாய்-நாயானது, அரங்கு-அந் நாடகமேடையிலே, முன்னி-சார்ந்து, பாடி - அவ் வாட்டத்திற்குத் தகப் பாடி, கொண்டாடுதல் - அக்குரங்கைப் புகழ்தலை, போலும் - நிகர்க்கும்.

(வி-ரை.) 'முன்னி' என்பது சேர்ந்து என்னும் பொருள் படு
தலை, "அரியலார்ந் தமர்த்தலி னனந்தர் நோக்குடைக், கரியவாய்
நெடியகட் கடைசி மங்கையர், வரிவரால் பிறழ்வயற் குவளை கட்பவ,
திருவரை வினய்நகர் நெறியின் முன்னினான்'' என்னும் ஜீவகசிந்தா
மணி, கஉசகூ-ஆம் செய்யுளில், 'முன்னினான்' என்பதற்கு, 'அணு
கினான்' என்று நச்சினார்க்கினியர் பொருளுரைத்திருத்தலா லுணர்க.
அறிவிலார்' என்பது பலரைக் குறிக்கும் பன்மைச் சொல்லாதலின்,
சிரங்களும் பலவாகக் கூறப்பட்டன. மூடர் செய்கை அறிவுடை
யோரால் இகழப்படுவ தாயினும், அதனை அம் மூடர்போன்ற மூடர்
மிகவுங் கொண்டாடுவர்; அச்செய்கை, குரங்கு கூத்தாடுவதைக் கண்டு
அதனைப்போன்ற இழி தன்மையையுடைய நாயானது பாடி அக்
குரங்கைப் புகழ்வதை நிகர்க்கும். (அச)

அடக்கம் வெற்றியைத் தருமெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வில்லது வளைந்த தென்றும் வேழம தறங்கிற் றென்றும்
வல்லியம் பதுங்கிற் றென்றும் வளர்கடா பிந்திற் றென்றும்
புல்லர்தஞ்சொல்லுக்கஞ்சிப்பொறுத்தனர்பெரியோரென்றும்
நல்லதென் றிருக்க வேண்டா நஞ்செனக் கருத லாமே.

(ப-ரை.) (உலகத்தவரே! பகைவரைக் கொல்லுதற்கு வளைந்
திருக்கும் வில்லைப் பார்த்து), வில்லது - இவ் வில்லானது, வளைந்
தது - வளைவுற்றது, (ஆதலால் தீங்குசெய்யாது), என்றும்-எனவும்;
(சமயம் பார்த்துத் தன் பகையை முடிக்கக் கருதி உறங்கும் யானை
யைப் பார்த்து), வேழமது- இந்த யானையானது, உறங்கிற்று -
தூங்கிவிட்டது, (ஆகையால் தீங்கு செய்யாது), என்றும்-எனவும்;
ஒரு பிராணியைக் கொல்லுவதற்குப் பதுங்கிக் கிடக்கும் புலியைப்
பார்த்து), வல்லியம்-இப்புலியானது, பதுங்கிற்று-பதுங்கிவிட்டது,
(ஆதலால் தீங்கு செய்யாது), என்று - எனவும்; (தன் பகைமேற்

பாய்வதற்காகப் பின்னிடும்ஆட்டுக்கடாவைப் பார்த்து), வளர்-வலிமை
மிகுகின்ற, கடா - இவ் வாட்டுக்கடாவானது, பிந்திற்று - பின்னே
சென்றது, (ஆதலால் தீங்கு செய்யாது), என்றும்-எனவும்; (தம்மை
நிந்திப்போர் கெடுவதற்காகவே அந் நிந்தனையைப் பொறுத்திருக்கும்
பெரியோரைப் பார்த்து), பெரியோர் - இம் மகான்கள், புல்லர்தம்-
கீழ்மக்களுடைய, சொல்லுக்கு - கொடிய வார்த்தைகளுக்கு, அஞ்சி-
பயந்தே, பொறுத்தனர் - பொறுத்துக்கொண்டார்கள், (ஆதலின்
இவர்கள் ஒன்றுஞ் செய்யமாட்டார்கள்), என்றும்-எனவும், (கருதி)
நல்லது என்று - (இச் செய்கைகளால் வருவது) நன்மையேயா
மென்று, இருக்கவேண்டா - துணிந்திருக்கவேண்டா, நஞ்சு என
(இவற்றால் வருவது) நஞ்சைப்போன்ற கேடேயென்று, கரு
லாம் - எண்ணலாம்.

(வி-ரை.) வில் வளைவது பகைவனைக் கொல்லுதற்கும், யானை
உறங்குவதுபோல் நடித்திருத்தல் தன் பகைவனை அயர்ந்த நிலையி
கொல்லுதற்கும், புலி பதுங்குவது மற்றொரு பிராணியைக் கொல்லு
தற்கும், கடா பின்னிடுவது எதிரிமேல் வலிகொண்டு பாய்வதற்கு
மாதலால், இச் செய்கைகளால் தீங்கில்லையெனக் கருதுதல் கூடாது
இவைபோல, பெரியோ ரடங்கியிருத்தலால் அவரை நிந்தித்த பு
லர்க்குத் தீங்கேயுண்டா மாதலால், அவர் அச்சத்தால் அடங்கி
ரெனக் கருதுதல் கூடாதாம்; அவர் அடங்கி யிருக்க விருக்க அவ
நிந்திப்போர் நாசமடைவர். 'வில்லது', 'வேழமது' என்பவைகளுள்
அது - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. நஞ்சு - உவமையாகு
பெயராய், அது போன்ற கேட்டை யுணர்த்திற்று. (அ

நேயத்தின் உயர்வு.

இதுவுமது.

சலந்தனிற் கிடக்கு மாமை சலத்தைவிட் டகன்ற போது
கொலைபுரி வேடன் பற்றி வலையினிற் கொண்டு செல்ல

வலிமைசே ரவனை வெல்லும் வகைபுரிந் ததனைக் காத்த
கலையெலி காகம் போல்வார்க் கலத்தலே நலத்த தாமே.

(ப-ரை.) சலந்தனில் - நீரில், கிடக்கும்-கிடந்து வாழ்கின்ற, ஆமை - ஒரு கூர்மமானது, சலத்தைவிட்டு-அந்நீரைவிட்டு, அகன்ற போது-வெளிப்பட்டபோது, கொலை புரி-கொலையைச் செய்கின்ற, வேடன் - ஒருவேடன், (கண்டு), பற்றி - அதனைப்பிடித்து, வலை யினில்-வலையிற்போட்டு, கொண்டு செல்ல-கொண்டுபோக, (அவன் செய்கையைக் கண்டு), வலிமை சேர் - தங்களினும் வலிமை மிக்க, அவனை - அவ்வேடனை, வெல்லும் - வெல்லத்தக்க, வகை புரிந்து- உபாயத்தைச் செய்து, அதனை – அவ் வாமையை, காத்த - (அவன் கையினின்றும் நீக்கிப்) காப்பாற்றிய, கலை - கலைமானையும், எலி எலியையும், காகம் - காகத்தையும், போல்வார் - நிகர்க்கும் சிநேகி தரை, கலத்தலே - சேர்ந்து உறவாடுதலே, நலத்ததாம் - நன்மை யுடைய செய்கையாம்.

(வி-ரை.) முன்னொரு காலத்தில் ஒரு ஆமை தான் வாழும் நீரைவிட்டு வெளியேறிய சமயத்தில், ஒரு வேடன் கண்டு அதனைப் பிடித்து வலையிற்போட்டுக் கட்டிக்கொண்டு செல்ல, அதற்கு உறவா யிருந்த மானும், எலியும், காகமும் கண்டு அதனை வேடன் கையி னின்றும் தப்புவிக்கக் கருதி, உடனே அவ்வேடன் செல்லும் வழி யில் மான் இறந்ததுபோல் விழுந்துகிடக்க, காகம்அதன்மேலிருந்து மாமிசத்தைப் பிடுங்கித் தின்னுவதுபோல் நடித்துக்கொண்டிருக்க, அவ்வேடன் அம்மானைக் கண்டு, 'இன்று மிக்க உணவகப்பட்டது' என்று மகிழ்ந்து, ஆமையை வலையோடு கீழே போட்டுவிட்டு மானருகே செல்ல, அச்சமயத்தில் எலி ஆமை அகப்பட்டிருந்த வலையைக் கடித்து அவ் வாமையை வெளிப்படுத்த, அது பக்கத்தி லிருந்த குளத்தை நோக்கிச் சென்றது; வேடன் மானின் பக்கத் தில் சென்றவுடன் காகம் பறக்க, மானும் எழுந்தோடிற்று; வேடன்

அவமானமுற்று ஆமையையாவது கைப்பற்றலாமென்று திரும்பவே
ஆமை குளத்தருகே சென்றது; அதைக் கண்டு அவன் விரைந்தோட
ஆமையும் சலத்திற் புகுந்தது; அதன்மேல் வேடன் தன் மதியீன
தைப்பற்றித் தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டு சென்றான். இ
கதை பஞ்சதந்திரம் சுகிர்ல்லாபத்தி லுள்ளது. இம்மூன்று பிராண
களும் செய்ததுபோல, உயிர்போகுந் தருணத்தில் காப்பாற்ற
கூடியவர்களையே சிநேகங் கொள்ளவேண்டும்; இத்தகைய சிநே
கத்தால் மிக்க நன்மையுண்டாம் என்பது இச்செய்யுளின் கருத்து. (

## குணவானால் பயனுண் டென்பது.

### இதுவுமது.

நிலமதிற் குணவான் றோன்றி னீள்குடித் தனரும் வாழ்வா
தனமெலாம் வாசந் தோன்றுஞ் சந்தனமரத்தையொப்பான்
நலமிலாக் கயவன் றோன்றி னற்குடித் தேசம் பாழாம்
குலமெலாம் பழுது செய்யுங் கோடரிக் காம்பு நேர்வான்.

(ப-ரை.) நிலமதில் - இப் பூவுலகத்தில், குணவான் - நற்குண
முடைய ஒருவன், தோன்றின் - உண்டானால், (அவனால் தன் சு
றம் வாழ்வதன்றி), நீள் - வாழ்வு நீண்ட, (அஃதாவது: வாழ்வு அதி
கரித்த), குடித்தனரும் - குடி சனங்களும், வாழ்வார் - நல்வாழ்வை
பெறுவார்கள்; (இவன் இவ்வாறு உலகத்திற்குப் பயனுடையவ
யிருத்தலின்), தலம் எல்லாம் - தானிருக்கு மிடங்களிலெல்லாம்
வாசம் தோன்றும் - வாசனை விளங்குகின்ற, சந்தன மரத்தை-சந்தன
விருக்ஷத்தை, ஒப்பான் - நிகர்த்து உலகமெங்கும் புகழ் பரிமளிக்க
விளங்குவான்; நலம் இல்லா - நன்மையற்ற, கயவன் தோன்றின்
கீழ்மகன் உதித்தால், நல் குடி - நல்ல - குடிகளையுடைய, தேசம்
நாடானது, பாழாம்-நாசமாம்; (இவ்வாறு அவன் தன் இனத்தவர
கிய மனிதர்க்கெல்லாம் தீங்கு செய்யக் கூடியவனாயிருத்தலின்)

நலம் எல்லாம் - தன் குலத்திற்கெல்லாம், பழுது செய்யும் - கேட்டைச்செய்யும், கோடரி - கோடரியினுடைய, காம்பு - காம்பை, நேர்வான் - நிகர்ப்பான்.

(வி-ரை.) குலமெலாம்-நான்காம் வேற்றுமைத்தொகை. குணவான் என்றும், கயவன் என்றும் பொதுப்படக் கூறினும், பின்னே குடித்தனர் என்றும், குடித்தேசம் என்றும் கூறுவதால், குணவான் என்பதைக் குடிகளையாளும் நற்குணமுடைய அரசனென்றும், கயவன் என்பதைக் குடித்தேசத்தை யாளும் தீக்குணமுடைய அரசனென்றும் கொள்ளவேண்டும். கோடரிக்காம்பு மரமாயிருந்தும், அதுவே தன்னினமாகிய மரங்களை யெல்லாம் வெட்டுதற்கு உதவியாயிருத்தலால், அது மிகக்கெட்டதாம்; கயவன் இக் கோடரிக்காம்பை நிகர்ப்பான் எனவே, இதுபோலத் தன் னினத்தவருக்குக் கேடு செய்வா னென்பதாயிற்று. (அஎ)

குஷ்டநோய், நரகம் ஆகியவற்றிற் சிக்கி வருந்துவோர் இன்னவ ரென்பது.

இதுவுமது

நட்பிடைக்குய்யம்வைத்தான் பிறர்மனைநலத்தைச்சேர்ந்தான்
கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கி னுனும்
அட்டுயி ருடலந் தின்று னமைச்சனு யரசு கொன்றுன்
குட்டநோய் நரகந் தம்முட் குளிப்பவ ரிவர்கள் கண்டாய்.

(ப-ரை.) நட்பு இடை-சிநேகமானவிடத்தில், குய்யம் வைத்தான் - வஞ்சனையை நிலைநிறுத்தி நடந்தவனும், (அஃதாவது: வஞ்சனை புரிந்தவனும்); பிறர் மனை-அயலார் மனையாளுடைய, நலத்தை-அழகை, சேர்ந்தான்-விரும்பிச்சேர்ந் தனுபவித்தவனும்,(அஃதாவது: பிறர் மனையாளைக் கூடியவனும்), கட்டழல் - மிகுந்த அழல்போலும், காமத் தீயின் - விரகாக்கினியாலே, கன்னியை - கற்பழியாத குமரி

யை, கலக்கினனும்-(வலிதிற்சேர்ந்து அவளுடைய அழியாத்தன்ல
யைக் கெடுத்து அவளை மணமுஞ் செய்யாமல் விடுத்துக்) கலங்
செய்தவனும்; உயிர் அட்டு - (ஒரு பிராணியின்) உயிரைக் கொன்
உடலம் - அதனுடம்பின் மாமிசத்தை, தின்றான் - உண்டவனு
அமைச்சனாய் - மந்திரியாயிருந்து, அரசு கொன்றான் - அரசலெ
கெடுத்தவனும், (ஆகிய) இவர்கள் - ஆகிய இவர்களே, குட்டநோ
குஷ்ட வியாதியிலும், நரகந் தம்முள் - நரகங்களுள்ளும், குளிப்பவ
மூழ்குபவ ராவர்.

(வி-ரை.) இச்செய்யுள் ஜீவகசிந்தாமணி நாமகளிலம்பகத்தி
தருமதத்தன் கட்டியங்காரனுக்குப் புத்தி கூறியதாகத் திருத்தக்கதே
ரால் இயற்றப்பட்டது; ஆயினும், இந்த விவேகசிந்தாமணி யெ
னும் பல செய்யுட்டிரட்டு மூலப் புத்தகத்தில், இது மிகவும் மா
பட்டு வழுக்களோடு வழங்கிவருகின்றது; அதனால் ஜீவகசிந்தாமண
லுள்ளபடி இஃது இப்பொழுது திருத்திக்கொள்ளப்பட்டது. க
டாய்-ஒருவகை அசை; கால வழுமைதியால் 'காண்' என்பது, 'க
டாய்' என வந்ததெனக்கொண்டு, 'இந்நீதியை அறிவாயாக' என்
பொருளுரைத்தலு மொன்று; நச்சினார்க்கினியர், 'இவர்கள் கண்டா
என்பதற்கு, 'இவர்கள்காண்' என உரையெழுதியிருத்தலால் இ
துணியப்படும். ஒரு கன்னியை வலிதிற் சேருதலாகிய இராக்
மணத்தாற் கெடுப்பினும், பண்டைக்கால வழக்கப்படி அவளை மல
புரிந்து கொண்டால், அவளுக்குத் தன் சம்மதமின்றிக் கன்
தன்மை யழிந்ததால் வருத்த மிருந்தாலும், பிறரால் மணத்து
விரும்பப்படாமல் தானிருந் தழியும் துன்ப நீங்குமாதலின், அ
பற்றித் திருப்தியுண்டாம்; அவ்வாறு கெடுத்து மணம் புரியா
விட்டால், அவள் தன் கன்னித்தன்மை கெடுவதோடு, வேறொ
ராலும் மணஞ் செய்யப்படாமல் அளவற்ற துக்கத்தை யடைவா
ஆதலின், கன்னித்தன்மையைக் கெடுத்தலோடு, அவளை மணம்

பாமலும் விட்டுவிடுதல் மகா பாதகமாம்; இக் கருத்துக்கொண்டே, கன்னியைக் கலக்கினனும்' என்றார். இதற்கேற்ப நச்சினார்க்கினியர் உரையில், 'மிக்க அழல்போலும் காமத்தீயினற் கன்னியை அத் தன்மை குலைத்து வரையாதவனும்' என்றும், 'கலக்குதல் - கைக் கிளை வகையாகிய இராக்கதமென்னு மணத்தில் தப்பியதாம்' என்றும் எழுதியிருத்த லுணர்க. இச் செய்யுளில் பல தீச் செய்கைகள் கூறப் பட்டிருப்பினும், இது அமைச்சனு யிருந்து அரசனைக் கெடுக்க நினைத்த கட்டியங்காரனுக் குரைத்ததாதலின், இவற்றுள் 'அமைச்சனு பாசு கொன்றான்' என்பதே விசேஷித்து நின்றது. (அஅ)

## தீங்கு செய்வார்க்குத் தீங்கு வருமெனல்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மதியிலா மறையோன் மன்னன் மடந்தையினிருதுகாலம்
விதியினற்கொடிதா மென்றம் மெல்லியையாற்றிற்போக்கிப்
புதுமையா வெடுத்த போது பெட்டியிற் புலிவா யாலே
அதிருடன் கடியுண் டன்றே யருநர கடைந்தான் மாதோ.

(ப-ரை.) மதி இல்லா - புத்திகெட்ட, மறையோன் - ஒரு வேதியன், (தன்னிடம் கல்வி பயின்றுவந்த ஒரு அரசன் மகள்மேல் மோகங்கொண்டு, அவளைத் தான் எளிதில் அடையவேண்டி), மன்னன்-அவ் வரசனது, மடந்தையின்-அப் பெண்ணின், இருதுகாலம்-பருவமடைந்த காலம், விதியினல் - அவளுடைய தலைவிதியால், கொடிதாம் - கெட்டதாம், (அதனல் அரசாட்சிக்குக் கேடு வரும்; ஆதலால் அவளை ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டி ஆற்றில் விட்டு விடவேண்டும்), என்று - என்று சொல்லி, அம் மெல்லியை - அப் பெண்ணை, ஆற்றில் போக்கி - அவ்வாறே ஆற்றில் செலுத்திவிடும் படிச் செய்து, (தான் அப் பெட்டி வரும்வழியிற் போயிருந்து), எடுத்தபோது-அப்பெட்டியை எடுத்துத் திறந்து பார்த்த சமயத்தில்,

(அதற்கு முன்னே ஓர் அரசகுமாரன் இப்பெட்டியைக் கண்டெடுத் அதற்குள்ளிருந்த பெண்ணை அழைத்துக்கொண்டு, ஒரு புலியை அ னுள் அடைத்து அனுப்பியிருந்தபடியால் அப்புலியானது கோபத்தே டெழுந்து அவ்வேதியனை யறைந்து கடிக்கவே), புதுமையாக-ஆ சரியமாக, பெட்டியில்-அப் பெட்டியிலிருந்த, புலிவாயாலே-அப் பு யின் வாயினாலே, அன்றே-அப்பொழுதே, அதிருடன்-மனத் திடு கத்தோடு, கடியுண்டு - கடிபட்டிறந்து, அரும் - சகித்தற்கரிதாகி நாகு அடைந்தான் - நரகத்திற் சேர்ந்தான்; (ஆதலின், பிறர்க்கு கேடு செய்ய நினைப்பார்க்கு உடனே கேடுவரும்).

(வி-ரை.) முன்னொருகாலத்தில் ஒரு வேதியன், தன்னிடம் கல் பயின்றுவந்த இராஜ கன்னிகையின்மேல் மோகங்கொண்டு, இவளை இங்கே சேர்வது முடியாதென்றும், ஒருவித உபாயத்தால் இவளை இந் நகரைவிட்டு வெளிப்படுத்திவிட்டால் நாம் வெளியிற் சென்று சுலபமாய்ப் பெற்றுக்கொள்ளலாமென்றும் கருதி, அவ்வரசனிடத்தி "இப்பெண் இருதுவான காலம் நன்றாயில்லை; இவள் இங்கேயிருந்தா அரசுக்குக் கேடுவரும்; ஆதலால் இவளை ஒரு பெட்டியில் வைத் த க்கி ஆற்றிற் போட்டுவிடவேண்டும்" என்று கூறினன்; மூடனாகி அரசன் அவ்வாறே செய்தான்; அவ்வேதியன் நெடுந்தூரத்திற்கப்பா சென்று, ஆற்றில் அப்பெட்டிவரும் வழியை நோக்கி, அதை எடுத்து கொள்ளும் பொருட்டுக் காத்திருந்தான். இப்படி யிருக்கும்போது அப் பெட்டி ஆற்றில் மிதந்து செல்ல, அவ்வேதியன் காத்திருக் மிடத்திற் கிப்பால் அவ் வாற்றருகேயுள்ள காட்டில் வேட்டையாட சென்றிருந்த ஓர் அரசகுமாரன் ஒரு புலியை உயிருடன் பிடித்து கொண்டு அவ் வாற்றங்கரையில் வருந் தருணத்தில், நீரில் மிதந் வந்த அப் பெட்டியைக் கண்டெடுத்துத் திறந்து அதற்குட் பெண் ணிருக்கக் கண்டு அவளையழைத்து அவளுக்கு நேர்ந்த அவ்விபத்தை விசாரித்தறிந்து, அவளைத் தான் சேர்த்துக்கொண்டு அப் பெட்டி

ள் தான் கொண்டுவந்த புலியை அடைத்து, மீண்டும் அப் பெட்டி யை அவ்வாற்றில் விட்டுவிட அது மிதந்து அவ்வேதியனிருக்கு மிட திற் சென்றது; அவன் அதைக்கண்ட மாத்திரத்தில் அங்கம் பூரி த்துத் தான் கோரிய பெண் சிக்கினளென மனமகிழ்ந்து, ஆவலோடு அப்பெட்டியைக் கைப்பற்றி அதனைத் திறந்தான்; அவ்வாறு திறந்த டனே அதற்குள் அடைக்கப்பட்டிருந்த புலி மிகவும் கஷ்டத்தை அடைந்திருந்த தாதலால், அடங்காக் கோபங்கொண்டு சீறி அவன் மேற் பாய்ந்து அவனைக் கடித்துக் கொன்றது. இது பண்டைக் காலத்துக் கதைகளு ளொன்று. இக்கதையினால் ஒருவர்க்குத் தீங்கு செய்யக் கருதுவார்க்குப் பெருந்தீங்கு நேருமென்பது விளங்கும். இச்செய்யுள் பிறிதுமொழித லணியாக வமைந்தது. மாதோ-அசை.

### நடிப்பால் துன்பம் வருமெனல்.

இதுவுமது.

மையது வல்லி யம்வாழ் மலைக்குகை தனிற் புகுந்தே
ஐயமும் புலிக்குக் காட்டி யடவியிற் றுரத்துங் காலைப்
பெயவே நரிக்கோ ளாலே படுபொரு ளுணர்ந்து மீண்டு
வெய்யவம் மிருகம் பாய்ந்து கொல்லமை வீழ்ந்த தன்றே.

(ப-ரை.) மையது - ஓர் ஆட்டுக்கடாவானது, (கொழுத்துப் பெருத்திருந்ததனால் அகங்காரங்கொண்டு), வல்லியம் வாழ் - புலி சஞ்சரிக்கின்ற, மலைக்குகைதனில் - மலைக்குகையிலே, புகுந்து - தைரியமாக நுழைந்து, (தான் ஒரு பயங்கரமுள்ள பிராணிபோல் நடித்து), புலிக்கு - அதிலிருந்த புலியினுக்கு, ஐயமும் - அது பய மடையும்படியான சந்தேகமுள்ள தன் வடிவத்தையும், காட்டி - அதற்குத் தோற்றுவித்து, (அது பயந்து வெளிப்பட்டோடவே), அடவியில் - காட்டில், துரத்துங்காலை - அதனைத் துரத்துதலுஞ் செய்யும் சமயத்தில், வெய்ய - வெவ்விதாகிய, அம்மிருகம் - அப்புலி

யாகிய விலங்கு, பைய - மெல்ல, (அஃதாவது: இரகசியமாக), ந
ஒரு நரியினுடைய, கோளாலே - கோள் வார்த்தையினாலே, (அ
தாவது: அவ் வாட்டுக்கடாவுக் கிடையூறாக, 'இஃது அற்பப் பிரா
யாகிய ஆட்டுக்கடாவாயிற்றே; இதற்கேன் பயந்தோடுகிறாய்' என்
சொன்ன வார்த்தையினாலே), படு - அவ் வாட்டுக்கடாவினா லு
டான, பொருள்-நடிப்பாகிய காரியத்தி னுண்மையை, உணர்ந்து
அறிந்து, மீண்டு-திரும்பி, பாய்ந்து-அதன்மேற் பாய்ந்து, கொல்
கொலை செய்ய, மை-அவ் வாட்டுக்கடாவானது, வீழ்ந்தது - இறந்
வீழ்ந்தது; (ஆதலால், இதைப்போல் நடிப்பாகச் செய்யத்தகாத கா
யத்தைச் செய்வோர்க்கு உடனே கேடுவரும்).

(வி-ரை.) இக் கதை அறிவை யுண்டாக்குங் கதைகளு ளொ
ன்று. ஐயமும் - இதிலுள்ள உம்மை எதிரது தழுவிய எச்சப்பொ
ளது. இச் செய்யுளும் பிறிதுமொழித லணியாக வமைந்தது. (கூ

மங்கையர் சொற் கேட்டால் துன்பம் வருமெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மங்கையாங் கைகேசி சொற்கேட்டு தசரதனு
மரண மானான்
செங்கமலச் சீதைசொல்லைச் சீராமன் கேட்டவுடன்
சென்றான் மான்பின்
தங்கையவள் சொற்கேட்ட விராவணனுங் கிளையோடு
தானு மாண்டான்
நங்கையர்சொற் கேட்பவர்க்குக் கேடுவரும் பேருலகோர்
நகைப்பர் தாமே.

(ப-ரை.) தசரதனும் - (மிகவும் புகழ்பெற்ற) தசரதச் சக்க
வர்த்தியும், மங்கையாம்-(நற்குணமில்லாப்) பெண்ணாகிய, கைகேசி-
கைகேயி யென்னும் தன் மனைவியினுடைய, சொல் கேட்டு-வார்த்தை

யைக் கேட்டு, (இராமனைக் காட்டுக்கனுப்பியதனால்), மரணமானான்-புத்திரசோகமுற்று மரணமடைந்தான்; சீ ராமன்-சிறப்பையுடைய இராமனும், செங்கமலம் - செந்தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற (இலக்குமியாகிய), சீதை - சீதாதேவியினுடைய, சொல்லை - (மானைப் பிடித்துத்தா வேண்டுமென்று சொன்ன) வார்த்தையை, கேட்டவுடன் - கேட்டமாத்திரத்தில், மான் பின் - (மாயையாய்க் கெடுக்கவந்த மாரீசனாகிய) மானின்பின்னே, சென்றான் - சென்று சீதையை யிழந்து வருத்தமுற்றான்; தங்கை - தன் தங்கையாகிய, அவள் - அந்தச் சூர்ப்பநகையினுடைய, சொல் கேட்ட - (இராமன் மீது தூர்ப்போதனையாகச் சொன்ன) வார்த்தைகளைக் கேட்டுச் சீதையை எடுத்துச்சென்ற, இராவணனும் - இராவணனாகிய இலங்காதிபதியும், கிளையோடு-தன் சுற்றத்தோடு, தானும் மாண்டான்-தானும் இராமன் கையா லிறந்தான்; (ஆதலால் இவர்களைப்போல), நங்கையர் சொல்-பெண்களுடைய வார்த்தைகளை, கேட்பவர்க்கு - கேட்டு நடப்பவர்க்கு, கேடு வரும் - தீங்கு நிச்சயமாக வரும்; (அன்றியும் அவரடையு மிழிவைப்பார்த்து), பேருலகோர் - இந்தப் பெரிய உலகத்திலுள்ள மனிதர்கள், நகைப்பர் - (ஏளனம்செய்து) சிரிப்பார்கள்.

(வி-ரை.) பெண்கள் பேதைமை யுடையவர்க ளாதலின், அவர்கள் பின்வருவதை யுணராமல் எதையுங் கூறுவார்கள்; ஆகவே, அவர்களுடைய சொல்லைக்கேட்டு அதன்படியே நடந்தால் அப்படி நடப்பவர்க்குத் தப்பாமல் கேடுவரும் என்பது இதன் கருத்து. (கூக)

## உறவின் உயர்வும் தாழ்வும்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருமையாம் பெருமை கொண்ட வறிவின ருறவு தன்னால்
இருமையு மொருமை யாகு மின்புறற் கேது வுண்டாம்
பரிவிலாச் சகுனி போலப் பண்புகெட் டவர்க டம்மால்
உரிமையாய் நிரய மெய்து மேதுவே யுயரு மன்னே.

(ப-ரை.) அருமையாம்-கிடைத்தற் கருமையாகிய, பெருமை-உயர்வை, கொண்ட - பெற்ற, அறிவினர் - அறிவை யுடையவர்களுடைய, உறவுதன்னால் - சிநேகத்தால், (ஒருவர்க்கு), இருமையும் - இம்மை மறுமையென்னு மிரண்டிடத்தும், ஒருமை ஆகும் - ஒரே தன்மையாகும், இன்பு - இன்பத்தை, உறற்கு - அடைதற்கு, ஏது உண்டாம் - காரணமாகிய விஷயங்களுண்டாகும்; பரிவு இல்லா - அன்பில்லாத, சகுனிபோல - சகுனியைப்போல, பண்பு கெட்டவர்கள் தம்மால்-குணங்கெட்டவர்களுடைய சிநேகத்தால், உரிமையாய்-தமக்குச் சொந்தமாக, நிரயம் - நரகத்தை, எய்தும் - அடையும், ஏதுவே-காரணமே, உயரும் - அதிகப்படும்.

(வி - ரை.) அறிவுடையாரோடு சிநேகங்கொண்டால் அவர்கள் தம்மோடு நேயங்கொண்டவரை நல்வழியிற் புகுத்துவார்க ளாதலால் அவர்க்கு இம்மையிலும் மறுமையிலும் ஒரேவிதமான இன்பத்தையடைவதற் கேதுவுண்டாகும்; சகுனிபோலக் கெட்டவ ருறவுகொண்டால், அவர் தம்மோடு நேசித்தவரைக் கெட்டவழியிற் புகுத்துவார்களாதலால், அவர்க்கு மேன்மேலும் நரகத்தை யடைவதற் கேதுவே வளரும்; சகுனியால் துரியோதனன் கெட்டதை யுணர்க. மன்னோ - ஈற்றசை. (கஉ)

புகழுடம்பு, பூதவுடம்பு ஆகியவற்றின் தன்மை.

இதுவுமது.

ஒருவனுக்கிரண்டியாக்கையுண்டொன்றான்பொதிந்தநாற்ற
உருவமாம் புகழொன் றுகு முலகிலே யின்ப முற்று
மருவிய பூத தேக மாய்ந்திடு மற்றொன் றென்றுந்
திருவுட னுலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே.

(ப-ரை.) ஒருவனுக்கு - ஒரு மனிதனுக்கு, இரண்டு யாக்கை - இரண்டு தேகங்கள், உண்டு - உளவாம்; (அவற்றுள்), ஒன்று - ஒ

தகம், ஊன் பொதிந்த-மாமிசம் நிறைந்த, நாற்றம் - நாற்றமுள்ள, ருவமாம்-வடிவத்தையுடைய பூத வுடம்பாம்; ஒன்று-மற்றொன்று, கழ் ஆகும்-புக ழுடம்பாகும்; (அவ்விரண்டனுள்), மருவிய-பொருந் ிய, பூததேகம்-பூதவுடம்பு, உலகிலே - இவ் வுலகத்திலே, இன்பம் ற்று-போகங்களை யனுபவித்து இன்பத்தையடைந்து, மாய்ந்திடும்- ழியும்; மற்றொன்று - மற்றொன்றாகிய புகழுடம்பு, என்றும் - க்காலத்தும், (அழிவடையாமல்), திருவுடன் - அழகோடு, உலகம் த்த-உலகத்தாரெல்லோருங் கொண்டாடும்படி, சிறந்து-சிறப்புற்று, ின் - பூதவுடம்பு அழிந்த பின்னரும், நிற்கும் - நிலைபெற்று விளங் ும்; (ஆதலால், நிலையற்ற பூதவுடம்பைப்பெற்ற ஒவ்வொருவரும் துதழிவதற்கு முன்னே அத னுதவியைக்கொண்டு என்றும் நிலை பறுவதாகிய புகழுடம்பைத் தேடிக்கொள்ளவேண்டும்.)

(வி-ரை.) பூதவுடம்பு - ஐம்பூதங்களாலு மமைந்த தசைவடிவ ாகிய தேகம்; புகழுடம்பு - அப்பூதவுடம்பி னுதவிகொண்டு தேடப் டும் கீர்த்தி. இப் புகழுடம்பு என்றும் நிலைபெற்றிருப்ப தாதலின்; னிதர் இதனை அவசியம் தேடிக்கொள்ளவேண்டும். "ஒன்றா வுல த் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்" என்னும் ிருக்குறள் இக்கருத்தையே உணர்த்துவது அறிக. (கரு)

உரியவரே கேடுசெய்ய நினைத்தால் விலக்க முடியாதெனல்.

கலித்துறை.

வேலி யானது பயிர்தனை மேய்ந்திட விதித்தாற்
ால ஞனவ னுயிர்தனைக் கவர்ந்திட நினைத்தால்
ூல மன்னையர் பாலகர்க் கருத்துவ ராலல்
மெலி தோர்ந்துடன் யார்கொலோ விலக்குவர் வேந்தே.

(ப-ரை.) வேந்தே - அரசனே!, வேலியானது - காவலாகிய வலியே, பயிர்தனை-(தன் காவலுக்குள் ளடங்கிய) பயிரை, மேய்க்

திட - (மிருகங்கள் வந்து) மேய்ந்திடும்படி, விதித்தால் - (அவற்றி
குக்) கட்டளையிட்டாலும்; காலனானவன் - யமன், உயிர்தனை - உ
ரை, கவர்ந்திட-கைப்பற்ற, நினைத்தால்-எண்ணினாலும்; அன்னையா
தாய்மார், பாலகர்க்கு-தம் புத்திரருக்கு, ஆலம்-விடத்தை, அருத்து
ரானால்-ஊட்டுவரானாலும்; மேல்-இப்படிச் செய்ததன்மேல், இது
இக்கொடுஞ் செய்கையை, உடன்-உடனே, ஓர்ந்து-அறிந்து, யா
கொல் - எவர், விலக்குவர் - தடுப்பார்கள், (ஒருவராலுந் தடுத்த
முடியாது).

(வி - ரை.) இச்செய்யுள் அரசனை முன்னிலையாக்கிக் கூறி
தாதலால், அரசன் குடிகளுக்குத் தீங்குசெய்ய லாகாதென்பத
உணர்த்துவதாம். "காவலாயிருக்கும் வேலியே, தன் காவலுக் கு
ளிருக்கும் பயிரை விலங்குகள் மேய்வதற் கிடங்கொடுத்தால், எ
ரும் அதனையறிந்து விலக்குதல் முடியாது; ஏனெனில், அவ்வே
யையே நம்பியிருப்பா ராதலின். யமன் உயிர் கவருந் தொழிலை
யுடையவனாதலின், அவன் ஒருயிரைக் கவர நினைத்துவிட்டா
அவன் செய்கையும் ஒருவராலும் தடுத்தல் முடியாது; நம்பிக்கை
யுள்ள தாய்மாரே பாலர்க்கு விஷத்தை யூட்டினால், அம்மோசச் செ
கையை யறிந்து அதனை அவர்களால் தடுத்துக்கொள்ளுதலு முடி
யாது. இவைபோல, அரசர் குடிகளை யழிக்க நினைத்தால், அக் குடி
ளால் அதனைத் தடுத்துக்கொள்ளுதல் இயலாதாம். ஆதலின், அரச
குடிகளுக்குத் தீங்குசெய்ய லாகாது" என்பது இச்செய்யுட் கருத்து
விதித்தால், நினைத்தால், ஆனால் என்பவற்றில் எண்ணும்மைகள்
தொக்கன. செய்கைகள் மூன்றுமினும் ஒரு தன்மையுடையன வா
லின், பின் 'இது ஓர்ந்து' என ஒருமை முடிபு வந்தது. இச்செய்யு
பிறிதுமொழித லணியாக வமைந்தது. (கூசு)

### வேசையை விரும்பினோர்க்குத் தீங்கு வருமெனல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அறங்கெடு நிதியுங் குன்று மாவியு மாயுங் காய
றங்கெடு மதியும் போகு நீண்டதோர் நரகங் கிட்டும்
றங்கெடுங் கீர்த்தி நீங்கும் வசைமொழி பரவுஞ் சாதித்
திறங்கெடும் வேசைமாதர் சேர்க்கையை விரும்பினோர்க்கே.

(ப-ரை.) வேசை மாதர் - பரத்தைப் பெண்களுடைய, சேர்க்கையை - கூட்டுறவை, விரும்பினோர்க்கு - உலகத்தில் வேண்டினவர்க்கு, அறம் கெடும்-தருமம் குறையும்; நிதியும் குன்றும் - பொருளுங் குறையும்; ஆவியும்-உயிரும், மாயும் தேகத்தைவிட்டு நீங்கும்; காயம்-தேகத்திலுள்ள, நிறம் கெடும்-அழகு அழியும்; மதியும் போகும்-அறிவுங் கெடும்; நீண்டது-நீட்சிபெற்றதாகிய, ஓர்-துன்பஞ்செய்வதில் ஒப்பற்ற, நரசம் கிட்டும் - நரகம் சொந்தமாக வந்துசேரும்; மறம் கெடும் - வீரங் குறையும்; கீர்த்தி நீங்கும்-புகழ்கெடும்; வசைமொழி-நிந்தனை வார்த்தைகள், பரவும் - எங்கும் அதிகரிக்கும்; சாதித்திறம் கெடும் - தங்களுடைய குலத்தின்மேன்மை அழியும்.

(வி-ரை.) பரத்தையர் நேயத்தை விரும்புவோர்க்கு இம்மையிற் பலகேடுகள் சம்பவிப்பதோடு, மறுமையிலும் நரகங் கிடைக்கும்.(கடு)

### வேதியர் ஒழுக்கங் குறைந்தால் எல்லாம் கெடுமென்பது.

இதுவுமது.

இந்திரன் பதமுங் குன்று மிறையவர் பதங்கண் மாறும்
மந்தர முதலா வுற்ற மலைகளின் நிலைக ணீங்கும்
சந்திரன் கதிரோன் சாய்வர் தரணியிற் றேய மாளும்
அந்தணர் கருமங் குன்றி னகிலமீ தியாவர் வாழ்வார்.

(ப-ரை.) அந்தணர் - வேதியர்கள், கருமம்-(தங்கள் வேதமோதல் முதலிய) செய்கைகளில், குன்றின்-குறைந்தால், இந்திரன்-

(தெய்வலோகத்திற் கிறைவனாகிய) இந்திரனுடைய, பதமு
இன்பமும், குன்றும் - குறையும்; இறையவர் - பூவுலகத்திலு
அரசர்களுடைய, பதங்கள் - உயர் பதவிகளும், மாறும் - மாறிவி
மந்தரம் முதலா - மந்தர மலை முதலாக, உற்ற - பொருந்திய, ம
களின் - அஷ்ட பர்வதங்களின், நிலைகள் - நிலைகளும், நீங்கு
அகலும், (அஃதாவது: அவைகளும் நிலைவிட்டுப் பெயரும்);
திரன் - சந்திரனும், கதிரோன் - சூரியனும், சாய்வர் - தங்கள் நி
யை விட்டுச் சாய்வார்கள்; தரணியில் - இப் பூமியிலுள்ள, தேய
தேசங்கள், மாளும் - அழிவடையும்; (இன்னும்), அகிலமீதில் - இ
வுலகத்தில், யாவர் வாழ்வார் - எவர்தாம் வாழ்வார்கள்? (ஒருவ
வாழார்).

(வி-ரை.) வேதியர் யாகாதி கருமங்களைச் செய்யாவிடின், உ
மெல்லாம் கேடடைவதோடு இந்திரனுக்குஞ் சிறப்பில்லாது போ
மாதலால், இச்செய்யுளாசிரியர் 'இந்திரன் பதமுங் குன்றும்' என்
கூறினர். இதனால் எல்லாச் சிறப்பும் வேதியர் ஒழுக்கத்தி லடங்
யிருக்கின்றதென்பது நன்கு விளங்கும். பர்வதங்கள் எட்டாவன:
கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, க
மாதனம் என்பன. (கூ

காமம் கொடிதென்பது.

இதுவுமது.

காமமே குலத்தினையு நலத்தினையுங் கெடுக்கவந்த
களங்க மாகும்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும் புகட்டிவைக்குங்
கடார மாகும்
காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்குங்
கபாட மாகும்
காமமே யனைவரையும் பகையாக்கிக் கழுத்தரியுங்
கத்தி யாமே.

(ப-ரை.) காமமே - (பிறர் பெண்ணிச்சையாகிய) மோகமே, லத்தினையும் - (உலகத்தாருடைய) குலத்தின் மேன்மையையும், லத்தினையும் - நன்மைகளையும், கெடுக்க வந்த-கெடுத்தற்குத் தோன் ன, களங்கம் ஆகும் - குற்றமுடைய செய்கையாகும்; காமமே - ம் மோகமே, தரித்திரங்கள் அனைத்தினையும்-வறுமைகள் எல்லா ற்றையும், (தன்னிடத்தே நிறைத்துக்கொண்டு), புகட்டிவைக்கும்- ல்லோர்க்கும் ஊட்டி அவர்களிடத்தே செலுத்திவைக்கும், கடாரம் குைம் - கொப்பரையாகும்; காமமே - அம் மோகமே, பாகதிக்கு - த்திக்கு, செல்லாமல் - செல்லாதபடி, வழி அடைக்கும் - அம் த்திநெறியை அடைத்துத் தடுக்கும், கபாடம் ஆகும் - கதவாகும்; மமே-அம் மோகமே, அனைவரையும்-உலகத்திலுள்ள எல்லோரை ம், பகை ஆக்கி - விரோதிகளாகச்செய்து, கழுத்து - தங்களுடைய ழுத்தை, அரியும்-அறுத்துக்கொல்லும், கத்தி ஆம்-கத்தியுமாகும்.

(வி-ரை.) அன்னிய மாதரிச்சையானது பலமேன்மைகளையும் றைப்பதோடு உயிரையுங் கொல்லும்; "அச்சம் பெரிதா லதற்கின் ஞ் சிற்றளவால், நிச்ச நினையுங்காற் கோக்கொலையால் - நிச்சலும், ம்பிக்கே கூர்த்த வினையாற் பிறன்றாரம், நம்பற்க நாணுடையார்" ன்னும் நாலடிச்செய்யுளும் இதனை வலியுறுத்திக் கூறும். (கள)

## அன்னிய புருஷரை இச்சிக்கும் பெண்களின் இழிவு.

### கலித்துறை.

டாரி தண்ணுமை திண்டிமஞ் சல்லரி யிடக்கை
டாது கூடியே யொலித்திடல் போலவிப் பாரில்
விடாத நாணகன் றன்னிய புருடனை விழைந்தே
டாது செய்தமங் கையர்வசை யொலித்திடு மன்றே.

(ப-ரை.) இப் பாரில்-இந்தப் பூமியில், விடாத-விடக்கூடாத, ாண் அகன்று - நாணம் நீங்கப்பெற்று, அன்னிய புருடனை - (தன்

நாயகனையன்றி) வேறு புருடனை, விழைந்து - விரும்பி, அடாது தகாத காரியத்தை, செய்த-நடத்திய, மங்கையர் - பெண்களுடைய (அஃதாவது அவர்கண்மீ துண்டாகும்), வசை-பழிமொழியானது (அவர்கள் எவ்வளவு இரகசியமாக அக்கெட்ட காரியத்தை நடத்தினாலும்), அன்றே - அப்பொழுதே, (அக்காரியம் வெளிப்பட்டு) தடாரி - பேரிகையென்னும் வாத்தியமும், தண்ணுமை - உறுமியென்னும் வாத்தியமும், திண்டிமம் - தம்பட்டமென்னும் வாத்தியமும், சல்லரி - பம்பையென்னும் வாத்தியமும், இடக்கை - திரிகையென்னும் வாத்தியமும், படாது-ஓசை யடங்காமல், கூடி-சேர்ந்து ஒலித்திடல்போல - பேரொலியாகச் சப்திப்பதுபோல, ஒலித்திடும் எங்கும் பரவிச் சப்திக்கும்; (ஆதலின், மங்கையர் இக் கெட்ட காரியத்தைச் செய்யா திருப்பாராக).

(வி - ரை.) மங்கையர் எவ்வளவு இரகசியமாக வியபசாரஞ் செய்யினும் அஃது உடனே வெளிப்பட்டு, வாத்திய கோஷ்டத்தைப் போல அவர்மீது எங்கும் வசைமொழி யுண்டாய் ஒலிக்குமாதலின் அவர் எக்காலும் அதனைக் கருதலாகாது. அன்றே - அசையுமாம். ()

## யாத்திரை செல்லு மியல்பு.

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தண்டுல மிளகின் றாள்புளி யுப்பு
தாளிதப் பொருள்கள்பாத் திரங்கள்
தாம்புநீர் தேற்று மூன்றுகோ லாடை
சக்கைமுக் கியுடன்கை விளக்கு
கண்டக முகுரம் பூசைவஸ் துக்கள்
கழல்குடை யடிமைசிற் றுண்டி
கம்பளி யூசி நூலடை காய்ப்பை
கரண்டகங் கண்டநல் லுப்பில்
துண்டமூ றியகாய் கரண்டிநெல் லெண்ணெய்
துட்டுடன் பூட்டுகைக் கத்தி

சொல்லிய வினைகள் குறைவறத் திருத்தித்
தொகுத்துவேற் றூர்செலு மனிதன்
பெண்க டுணையோ டெய்தும்வா கனனுய்ப்
பெருநிலை நீர்நிழல் விறகு
பின்னும்வேண் டுவசே ரிடஞ்சமைத் துண்டு
புறப்படல் யாத்திரைக் கழகே.

(ப-ரை.) வேற்றூர் - அன்னியவூருக்கு, செல்லும் - பிரயாண
ாகிப்போகும், மனிதன் - புருடனுவன், தண்டுலம் - அரிசியும்,
ிளகின்தூள் - மிளகுத்தூள் அல்லது மிளகாய்த்தூளும், புளி -
ளியும், உப்பு - இலவணமும், தாளிதப்பொருள்கள் - தாளித வஸ்
க்களும், பாத்திரங்கள் - பாத்திரங்களும், தாம்பு - கயிறும், நீர்
தற்றும் - நீரின் ஆழத்தைத் தெரிவிக்கும், ஊன்றுகோல் - ஊன்று
காலும், ஆடை - வஸ்திரங்களும், சக்கைமுக்கியுடன் - தீத்தட்டி
யன்னும் நெருப்புண்டாக்கும் கருவியுடனே, கைவிளக்கு - கைத்
பமும், கண்டகம் - அரிவாளும், முகுரம் - கண்ணுடியும், பூசை
ஸ்துக்கள் - பூசனைக்குரிய பொருள்களும், கழல் - நெருப்பும்,
டை - குடையும், அடிமை - வேலையாளும், சிற்றுண்டி - சிற்றுண
ாகிய பலகாரங்களும், கம்பளி - கம்பளமும், ஊசி - ஊசியும், நூல்-
ாலும், அடைகாய்ப் பை-வெற்றிலைப் பாக்குப் பையும், கரண்டகம்-
ண்ணும்புச் செப்பும், கண்டம் - எழுத்தாணியும், நல் உப்பில் - நல்ல
ப்பிலே, ஊறிய - ஊறப்பட்ட, காயத்துண்டம் - மாங்காய் எலுமிச்
ங்காய் முதலியவற்றின் துண்டுகளும் (அஃதாவது: ஊறுகாய்த்
ுண்டுகளும்), கரண்டி - கரண்டியும், நல் எண்ணெய் - நல்ல எண்
ணையும், துட்டுடன் - காசுகளுடனே, பூட்டு-பூட்டும், சொல்லிய -
தவியாகச் சொல்லப்பட்ட, கைக்கத்தி - கைக்கத்தியும், (ஆகிய)
ினைகள் - ஆகிய இவற்றை, குறைவு அற - குறை வில்லாமல்,
ருத்தி - திருத்தஞ்செய்து, தொகுத்து - சேகரித்துக்கொண்டு,
பண்டுகள் துணையோடு - பெண்டுகள் துணையுடனே, எய்தும் -
றித்த விடத்திற்குப் போய்ச் சேர்வதற் கேதுவாயிருக்கும், வாகன

ஞய் - வாசனங்களை யுடையவனாய், (நல்ல நேரத்திலே பயணமா இடையில்), பெரும் - பெரிய, நீர் நிலை - நீர் நிலையும், நிழல் - நி லும், விறகு - சமயலுக் குதவியாம் விறகும், பின்னும் - மற்று வேண்டுவ-விரும்பக்கூடிய சௌகரியங்களும், சேர்-சேர்ந்த, இட தலங்களில், (இறங்கி), சமைத்து உண்டு - சமையல் செய்து உ வருந்தி, புறப்படல்-அவ்வவ் விடங்களினின்றும் புறப்பட்டுக் குறி விடம் நோக்கிச் செல்லுதல், யாத்திரைக்கு - அவன் செய்யும் பிர ணத்திற்கு, அழகு - அழகாகும், (அஃதாவது: சிறப்பாகும்).

(வி-ரை.) இச்செய்யுளிற் கூறிய பொருள்களுடன் பிரயாண சென்றால், அந்த யாத்திரை கஷ்டமில்லாமல் நிறைவேறும். சக் முக்கி-நெருப்புண்டாக்கும் கருவி; இது பண்டைக்காலத்தில் ம தர்களால் உபயோகிக்கப்பட்டு வந்தது; இதிற் கொஞ்சம் பஞ் வைத்து மற்றொரு கருவியால் தட்டினால், அப்பஞ்சில் நெருப் பற்றிக்கொள்ளும்; இதனைச் 'சிகிமுகி' என்றுஞ் சொல்லுவதுண் 'சிகிமுகி' என்பதற்கு நெருப்பை முகத்திலுடையது என்ப பொருள். இந்தச் சக்கை முக்கியென்பது பஞ்சடைக்கப்பட்ருக்கு குடுக்கை யொன்று, விரைவில் நெருப்பைக் கக்கும் கல்லொன்ற தட்டுங் கம்பியொன்று ஆக மூன்றுஞ் சேர்ந்த கருவி. இம்மூன்று சேர்ந்த கருவியையே சக்கை முக்கியென்றும், சிகிமுகி யென்று பண்டைக்காலத்தவர் கூறுவர். இவற்றை வேறு பிரித்துக் கூ வேண்டுமானால், பஞ்சடைக்கப்பட்டிருக்கும் குடுக்கையைச் சக் யென்றும், நெருப்பைக் கக்குங் கருவியைச் சிகிமுகி யென்று கூறலாம். சக்கைமுக்கி என்பதற்குப் பஞ்சுத் தக்கையை உள்வே அடக்கிக்கொண்டிருப்பது என்பது பொருள். (கூகூ

விவேக சிந்தாமணி மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.

---

உ

குகன் துணை

# விவேகசிந்தாமணியின்
# செய்யுள் முதற்குறிப்பகராதி.

விவேகசிந்தாமணியின்
செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றுப்பெற்றது.

---

## ஸ்ரீ சிதம்பர ரகஸ்யம்

விலை அணா 1

இந்நூலில், பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகிய சிதம்பர க்ஷேத்தி த்திலுள்ள ஸ்ரீ நடராஜர் ஆலய அமைப்பின் தத்துவார்த்தங்கள் தெளிவாய் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன.

## ஸ்ரீ சுப்ரஹ்மண்யர் சகஸ்ர நாமாவளி

விலை அணா 2

இதில், ஸ்ரீ சுப்ரஹ்மண்யக் கடவுளின் அர்ச்சனைக்குரிய ஆயி ம் நாமங்கள் சமஸ்கிருத உச்சரிப்புக் கிணங்க தமிழில் திருத்தி அச்சிடப்பட்டுள்ளன.

## கஜேந்திர மோக்ஷம்

விலை அணா 2

முதலை வாயில் அகப்பட்ட யானையானது அதனால் படும் துன் த்தைச் சகிக்க முடியாமல், 'மூலமே' என்று ஸ்ரீ திருமாலைக் கூவி முறையிட, அதைச் செவியுற்ற திருமால் ஜீவர்கள் பேரிலுள்ள பரம காருண்யத்தால் ஆண்டெய்தி, தமது சக்கரத்தை வீசி அம் முதலை யைச் சேதித்துத் தம்மை அபயமாக அடைந்த யானையை ரக்ஷித் தருளிய திவ்விய சரித்திரமானது இந்நூலில் எளிய செய்யுள் நடை யில் கூறப்பட்டுள்ளது. நூல் முதலில், மேற்படி கஜேந்திர மோக்ஷச் சரித் திரச் சுருக்கம் வசன நடையிலும் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது.

## சிவசிவ வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா

விலை அணா 8

இந் நூல்கள் ஒவ்வொன்றிலும் அடங்கிய வெண்பாக்களில் இறுதி இரண்டடியும் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் அரு ளிய திருக்குறள் அதிகாரம் ஒன்றின் குறள் வெண்பாவாக அமைக் கப் பெற்று, முதல் இரண்டியிலும் மேற்படி குறள் வெண்பாவின் நீதி யும், அதற்குதாரணமான பண்டைய சரித்திரமும் விளக்கிக் காட்டப் பட்டுள்ளன. மேற்படி ஒவ்வொரு நூலிலும், திருக்குறளில் அமைந் துள்ள 133 அதிகாரங்களுக் கேற்ப, 133 வெண்பாக்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| | [illegible] | ப. |
| தேவார திருவாசகத்தி[illegible] | | 0 |
| சிவநாமாவளித் திரட்டு ... | [illegible] | [illegible] |
| சிவானந்த மாலை ... | [illegible] | [illegible] |
| ஸ்ரீ தத்துவபோதம் ... | 1 | [illegible] |
| காஞ்ஜீவா தக்கட்டளை | 1 | [illegible] |
| [illegible]டி (செய்யுள்) ... | 1 | 0 |
| கட்டளைப்பிரபந்தம் (14 கட்டளைகள்) ... | [illegible] | [illegible] |
| சைவ சித்தாந்த வரலாறு | [illegible] | [illegible] |
| சித்தாந்தப் பிரகாசிகை ... | [illegible] | [illegible] |
| பஞ்சீகரண வேதாந்த சித்தாந்தம் ... | 2 | 0 |
| சித்தாந்த தத்துவ லக்ஷணம் | 0 | 9 |
| பஞ்சாக்ஷரப் பதிபசுபாசம் | 1 | 6 |
| ஞானத்தின் பிரிவுகள் ... | 2 | 0 |
| ஓங்காரத்தின் மகத்துவம் | 1 | 0 |
| அஷ்டாக்ஷர மகத்துவம் | 1 | 0 |
| ஏகாந்த சேவை ... | 1 | 0 |
| கலியுக தர்மம் | 1 | 6 |
| ஆரியர் சந்தியாவந்தனம் | 1 | 0 |
| பாரத நீதி ... | 2 | 0 |
| திருமங்கல்யதாரணவிதி | 0 | 6 |
| பிள்ளைத் தாலாட்டு ... | 0 | 6 |
| ஜாதிபேத விளக்கம் ... | [illegible] | 0 |
| விஷப்பிரதி விஷத்திரட்டு | 2 | 0 |
| தன்வந்திரி நாடிசிந்தாமணி | 2 | 0 |
| இராஜயோக வித்யா விஞவிடை ... | 1 | 0 |
| சிவநாமாத்விதக் கீர்த்தனை | 8 | 0 |
| சீதாசாரத் தாலாட்டு ... | 1 | 0 |
| யாப்பிலக்கண விஞவிடை | 4 | 0 |
| அணியிலக்கண வசனம் | 4 | 0 |
| வச்சணந்திமாலை உரை ... | 2 | 0 |

| | அ. | ப. |
|---|---|---|
| ஸ்ரீ விநாயக ரகவல் ... | 1 | 6 |
| சிவபோக சாரம் ... | 2 | 6 |
| [illegible]ரநந்த போதம் ... | 4 | 0 |
| [illegible] தீபம் ... | 1 | 0 |
| [illegible] தீபம் ... | 4 | 0 |
| [illegible]தும், செம்பொற் [illegible] ஏழுபதும் ... | 4 | 0 |
| [illegible] ... | 4 | 0 |
| [illegible]தை | 6 | 0 |
| [illegible] | 8 | 0 |
| [illegible] | [illegible] | 0 |
| நைடத மூலம் ... | 12 | 0 |
| ஔவைகுறள் மூலம் ... | 2 | 0 |
| [illegible] | 3 | 0 |
| [illegible] | 3 | 0 |
| [illegible] | 3 | 0 |
| மீ[illegible] | 3 | 0 |
| [illegible] | [illegible] | 0 |
| சிவசிவவெ[illegible] | [illegible] | [illegible] |
| சீகாளத்திக்[illegible] | [illegible] | [illegible] |
| ஸ்ரீ வைஷ்ண[illegible] | [illegible] | [illegible] |
| ஸ்ரீ விநாயகசிவ[illegible] | [illegible] | [illegible] |
| பக்தி (இன்ன[illegible] | [illegible] | [illegible] |
| ஒருதுறைக் கோ[illegible] | [illegible] | [illegible] |
| குடாரம்: (குற[illegible] | [illegible] | [illegible] |
| அம்மணியம், ஐயா[illegible] | [illegible] | [illegible] |
| விவேக சிந்தாமணி உரை: | | |
| 1-ம் பாகம் ... | 8 | 0 |
| 2-ம் பாகம் ... | 10 | 0 |
| பஞ்சதந்திர வசனம் ... | 10 | 0 |
| ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை விருத்தியுரை ... | 12 | 0 |

உ

குகன் துணை

# விவேக சிந்தாமணி

## மூலமும்,

ஜீவகசிந்தாமணி வசனம், அரிச்சந்திரபுராண வசனம்,
அருணாசலபுராண வசனம், ஸ்ரீ பகவத்கீதை வசனம் ஆகிய
நூல்களின் ஆசிரியரும், விவேகசிந்தாமணி முதற்பாகம்
உரையாசிரியருமாகிய

மதுரை ஜில்லா செம்பூர்–வித்வான்
ஸ்ரீமத். வீ. ஆறுமுகஞ்சேர்வை அவர்களால்
இயற்றப்பெற்ற

## உரையும்.



[இரண்டாம் பாகம்]

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1924

விலை அணா 10

# முகவுரை

ழறிவிற் சிறந்த க[illegible]!

இவ் விவேகசிந்தாமணி யென்னும் நூலிற்கு இவ் ரையை யெழுத[illegible] காரணம், இந்நூற் சிற , இதன் பயன் முதலியவைகளெல்லாம் இதன் முதற் கத்தின் முகவுரையில் விளக்கி யெழுதப்பெற்றிருக்க ன், அதனைக் கண்ணுறின் நன்கு விளங்கும். அதிற் றியபடியே இவ் விரண்டாம் பாகத்தில் இப்போது சிறப் ற்ற நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துச் சேர்த்து அவற் ற்கு விளக்கமான வுரை யெழுதி முடித்துளேன். இதி ள்ள சில பாடல்கள் மிகவும் உயர்ந்த கருத்துக்களுள்ள வகளா யிருந்தமையின், அவற்றிற்கு உரை சற்று விரித் தெழுதப்பட்டிருக்கின்றது; அதனால், இது முதற்பாகத்தி ம் இரண்டு பாரங்கள் அதிகமுள்ளதாகிவிட்டது. ஆயி ம், அங்ஙனம் வளர்த்தெழுதப்பட்டிருக்கும் உரையி ள்ள விஷயங்கள் மிகவும் உயர்ந்தவைக ளாதலால் இந் லை வாசிக்கும் நண்பர்கள் அவற்றைப் பொறுமையுடன்

கவனித்து ஆராய்ச்சி செய்யுமாறு பிரார்த்திக்கின்
இதிலுள்ள காப்புச் செய்யுள் மட்டும் என்னு விய
பெற்றது. மற்றைச் செய்யுட்க ளெல்லாம் பழைய
களிலிருந் தெடுக்கப்பட்டவை. இதன் முதற்பாகத்தி
இதிலும் சேர்க்கப்பட்டிருக்கு செய்யுட்களன்றி
னும் பல அருமையான பாடல்க ளிருக்கின்றன.
யெல்லாம் உரையுடன் அடுத் முன்றும் பாகத்தில்
வரும். இவ்விரண்டாம் பாகத்தின் உரையில் என் பு
கெட்டாமல் ஏதேனும் பிழை சேர்ந்திருப்பின் அறிவு
யோர் அதனை எனக் கறிவித்தால், நான் வந்தனத்து
ஏற்றுத் திருத்திக் கொள்வேன்.

இங்ஙனம்:

☞ வீ. ஆறுமுகன்

---

உ

குகன் துணை

# விவேகசிந்தாமணி இரண்டாம் பாகத்தின்
# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றுப்பெற்றது.

உ

கடவுள் துணை

# விவேக சிந்தாமணி

இரண்டாம் பாகம்

## மூலமும் உரையும்

காப்பு

[நேரிசை வெண்பா]

புண்ணியமாம் பாவம்போம் புத்திமிகும் வித்தையுண்டாம்
எண்ணியநற் செய்கைமுடி வெய்துமே—நண்ணுந்
திருமருப்பொன் றாலவுணன் றீரங் கெடுத்தான்
குருமலர்ப்பா தந்தொழுவார்க் கு.

(பதவுரை) திரு நண்ணும் - அழகு பொருந்துகின்ற, மருப்பு ஒன்றால் - (தன்னுடைய) ஒற்றைக் கொம்பினாலே, அவுணன் - கஜமுகாசுரனுடைய, தீரம் - வலிமையை, கெடுத்தான் - கெடுத்து அவனைக் கொன்ற விநாயகக் கடவுளுடைய, குரு - நிறம் பொருந்திய, மலர் - தாமரை மலர்போன்ற, பாதம் - அடிகளை, தொழுவார்க்கு - வணங்கும் அடியார்க்கு, புண்ணியம் ஆகும் - (உலகத்தில்) புண்ணியங்களெல்லாங் கைகூடும்; பாவம் போகும்-பாவங்களனைத்தும் நீங்கும்; புத்தி மிகும் - அறிவு அதிகரிக்கும்; வித்தை உண்டாம்-கல்வி விருத்தியாகும்; எண்ணிய-செய்யக்கருதிய, நற்செய்கை-நல்ல செயல், முடிவு எய்தும்-பூர்த்தி பெறும்.

இக் காப்புச் செய்யுள் இவ் வுரையாசிரியரால் இயற்றப்பெற்றது.

(விசேடவுரை) விநாயகக் கடவுள் தம்முடைய ஒற்றைக் கொம்பினை யொடித்துக் கயாமுகசுரன்மீது பிரயோகித்து அவனைக் கொன்றா ரென்பது கந்தபுராண கதை; இதனை,

"நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைக ளேவிற்
சென்றிவன் றன்னைக் கொல்லா சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னென் றெண்ணவரை யுன்னி யெந்தை
தன்றிருக்கோட்டி லொன்று தடக்கையா லொடித்துக்கொண்டான்."

"தடக்கையி லேந்து கோட்டை தந்தியா மவுணன் மீது
விடுத்தலு மனையன் மார்பை மெய்தெனக் கீண்டு போகி
யுடற்படி மிசையே வீழ்த்தி யெல்லையி லோடித் தெண்ணீர்க்
கடற்படிந் தமலன் மைந்தன் கரத்தில்வந் திருந்த தன்றே."

என்ற கந்தபுராணச் செய்யுட்களா னுணர்க. புண்ணிய மாகும், பாவம் போகும், வித்தை யுண்டாகும் என்பவற்றுள் ஆகும், போகும் என்பன இடை யுயிர்மெய் கெட்டு ஆம், போம் என நின்றன. 'நண்ணும் திரு' என்பதை, 'திரு நண்ணும்' என மாற்றுக. தொழுவார்க்குப் புண்ணிய முதலியன உண்டாமெனவே, தொழாதார்க்கு அவை யுண்டாகா வென வுணர்க. (க)

---

## நூல்

### உலகத்திற் பொருளே சிறந்த தென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

நற்பொரு ளறத்தை யின்ப நலத்தைஞா னத்தை மிக்க
பற்பல ருறவைப் பொல்லாப் பகைதவிர்த் திடுந்தி றத்தைச்
சொற்பெரும் புகழை யென்றுந் துகளிலாப் பெருமை தன்னைப்
பொற்புறுங் கதியை வாய்ந்த பொருளலாற் பெறுவ தின்றே

(ப - ரை) நல்-நல்ல, பொருள்-(ஆபரணம்முதலிய) உடைமை
யையும், அறத்தை-தருமத்தையும், இன்பம்-சுகத்தையும், நலத்தை-
அழகையும், ஞானத்தை-விவேகத்தையும், மிக்க-மிகுதியாகிய, பற்
பலர்-அநேகருடைய, உறவை... பொல்லா-கெட்டதாகிய,
பகை - விரோதத்தை, த... ...ம்; திறத்தை - வலிமை
யையும், சொல் - உயர்... ...சொல்லுகின்ற, பெரும் - பெரிய,
இசை - கீர்த்தியையும், ... ...எக்காலத்தும், தாள் இல்லா -
குற்றமில்லாத, பெரு... ...பார்வையும், பொற்பு உறும்-அழகு
பொருந்திய, கதி... ...லீகளையும், வாய்ந்த-உயர்வு பொருந்திய,
பொருள் அல்லா... ...லாமல், பெறுவது - (உலகத்தில்
...வது, இ... ...லை.

... உலகத்தில் பொருளற்றவர் எவ்வித பயனையும் அடை
முடியாது. இதனை, "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்
வரை, யெல்லாருஞ் செய்வர் சிறப்பு," "அறனீனு மின்பமு மீனுந்
திறனறிந்து, தீதின்றி வந்த பொருள்," "அருளில்லார்க் கவ்வுலக
மில்லை பொருளில்லார்க், கிவ்வுலக மில்லா தியாங்கு," என்னுந்
திருக்குறட் செய்யுட்களா னுணர்க. 'தவிர்த்திடும்' என்பதில் 'இடு'
துணிப் பொருள் விகுதி; இதனைத் துணைவினை யென்றுங் கூறுவர்.
"பல சில வெனுமிவை......" என்னும் (ந. உயி. பு. ௨௦) சூத்திர
விதியால், 'பற்பல' என்பது, நிலைமொழியீற் றகரங் கெட லகரம்
றகரமாய்ப் 'பற்பல' என வந்தது. (௨)

உலுத்தன் ஒன்றுக்கு முதவா னெனல்
[பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

கல்லா லயமாந் தேவருமாங்
கழுதை கசடர் பொதிசுமக்குங்
கடாவோ வுழுது பயிரிடற்காங்
கட்டம் பன்றிக் கிரையாகும்

புல்லே றீசர் வாகனமாம்
பொதியுஞ் சுமக்கும் பிணமதுவும்
பூசி முடித்து மறையோர்க்குப்
பொருளை யீந்து புகழெய்தும்
மல்லார் குட்டிச் சுவர்தானு
மறைவா மாடு செய்த்திடற்காம்
மதியாத் துடைப்பந் தி...தோறு
மாட கூடங் களைவிளக்கும்
அல்லா ருலுத்த னெதற்குதவு
மவனுக் கிணையிங் கெதுவுமில்லை
யவனைக் குறித்துக் கூறுமிடத்
தவனுக் கவனே சரிதானே.

(ப-ரை) கல் - கல்லும், ஆலயமாம் - (திருப்பணி செய்வோ
தன்னை எடுத்துக் கட்டுவதனால்) சிறந்த கோவிலாகும்; தேவரு
ஆம்-(மனிதர் வணங்குதற் பொருட்டுத் தன்னைத் தேவர்களின்
உருவமாக வகுத்துப் பிரதிஷ்டை செய்தால்) கடவுளரு மாகும்
கழுதை-(மிருகங்களிற் றாழ்ந்த) கழுதையும், கசடர்-(வண்ணார் மு
லிய) இழிசனர்களுடைய, பொதி சுமக்கும் - மூட்டையைச் சுமந்து
செல்லும்; கடாவோ - எருமைக்கடாவோ, உழுது - (பயிர்த் தொழி
லுடையார்) உழவுத்தொழில் செய்து, பயிர் இடற்கு-பயிரிட்டு ஜீவி
ப்பதற்கு, ஆம்-உதவியாகும்; கட்டம்-(கண்ணுற் பார்க்கவுந் தகாத
மலமும், பன்றிக்கு-வராகத்திற்கு, இரை ஆகும்-உணவாகும்; புல்
அற்பமாகிய, ஏறு-எருதும், ஈசர் - பரமசிவக் கடவுளுக்கு, வாகன
ஆம்-ஊர்தியாகும்; (அஃதின்றிப்) பொதியும்-மூட்டையையும், சும
கும் - தாங்கிச் செல்லும்; பிணமதுவும் - (உயிரற்ற) பிணமும், பூசி
(தன்மேல் சந்தனக் குழம்பு முதலியவற்றைச் சுற்றத்தார் பூச
முடித்து-(மலர்முதலியன) முடிக்க, மறையோர்க்கு-வேதியர்க

ந, பொருளை-திரவியத்தை, ஈந்து-(தன்பொருட்டுத்) தருமமாகக் காடுக்க, (இச் செய்கைகளுக் குரியதாய்) புகழ் எய்தும்-கீர்த்தியை டையும்; மல் ஆர்-வலிமை பொருந்திய, நட்டிச் சுவர்தானும்-சிறு ரும், மறைவு ஆம்-(மலஜல முதலியன கழிப்போர்க்கு) மறை -மாகும்; (அன்றியும்) மாடமாரு ம, செய்த்திடற்கு ஆம் - (தினவு ) உராய்தற்கும் உதவி ... (உயர்வாக) மதிக்கப்படாத, டைப்பம்-விளக்குமா ... றும் - நாடோறும், மாடம்- மபரிகைகளை யுடைய, ... - வீடுகளை, விளக்கும் - (மாசு கிப்) பிரகாசிக்கச் செய்யும்; ... ஆர்-(மனத்தில்) இருள் பொருந் , உலுத்தன் - உலோப குணமுடையவன், எதற்கு-எக் காரியத்தி ... - உபயோக மாவான்? (ஒன்றுக்கு முதவான்); அவனு :- ... இழிவடைந்த அவ் வுலோபனுக்கு, இங்கு-இவ் வுலகத் , எதுவும் எந்தத் தாழ்ந்த பொருளும், இணை இல்லை-நிக ரில்லை; ... குறித்து - அப் பாவியைக் குறிப்பிட்டு, கூறுமிடத்து - ணை சொல்லும்போது, அவனுக்கு அவனே சரி - அவனுக்கவனே ராவான்.

(வி-ரை) மலமும் பன்றிக் குணவாகும் உலுத்தன் ஒன்றுக்கு தவா னெனவே, அவன் மலத்தினுந் தாழ்ந்தவ னென்பதாயிற்று த்தகைய உலோபி உலகத்தி விருப்பதாற் பய னொன்றுமில்லை; தனை, "ஓயாமற் பொய்சொல்வர், நல்லோரை நிந்திப்ப ருற்றுப் பற்ற, தாயாரை வைவர் சதியா யிரஞ்செய்வர் சாத்திரங்க, ளாயார் றர்க்குப காரஞ்செய் யார்தம்மை யண்டினர்க்கொன், றீயா ரிருந் தன்ன போயென்ன காண்கச்சி யேகம்பனே'' என்னும் பட்டினத் கள் செய்யுளா னுணர்க. தேவருமாம், பொதியுஞ் சுமக்கும், ய்த்திடற்குமாம் என்பவற்றி லுள்ள உம்மைகள் இறந்ததுதழுவிய சவும்மைகள்; மற்றைய வும்மைக ளெல்லாம் இழிவு சிறப்புப் பாருளன. "உவப்பினு முயர்வினு....." (ந. பொ. உஅ) என்னுஞ்

சூத்திர விதிபற்றி உயர்வினல், 'ஈசன்' என்னும் ஒருமைப்பால் 'ஈ
எனப் பன்மைப் பாலாயிற்று. பூச, முடிக்க, ஈய என்னும் செய
னெச்சங்கள், "சொற் றிரியினும் பொருடிரியா வினைக்குறை," 
வி-உ௭) என்னுஞ் சூத்திர விதியால் செய்தெ னெஞ்சங்களா
திரிந்துவந்தன.
(

## புத்திரரைப் படிப்பியாது வளர்த்தல் தீங்கேன்பது

[கலி விருத்தம்]

மாலினு லிருவரு மருவி மாசிலாப்
பாலனைப் பயந்தபின் படிப்பி யாதுயர்
தாலமேற் செல்வமா வளர்த்தல் தங்கட்கோர்
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமால்.

(ப-ரை) மாலினால்-விருப்பத்தினுல், இருவரும் - தாய்தந்தை
யாகிய இருவரும், மருவி-கூடி, மாசு இல்லா-குற்றமற்ற, பாலனை
புத்திரனை, பயந்தபின்-பெற்றபின், படிப்பியாது-(உரிய பருவத்
அவனுக்கு) வித்தியாப்பியாசஞ் செய்வியாமல், உயர் - மேலா
தாலமேல்-புவியின்மீது, (உயர்ந்த உணவுகளை உண்பித்து ஆ
யாபரணங்களை யணிந்து) செல்வமாக-சீராக, வளர்த்தல் - (அவனை
வளர்ப்பது, (எதை நிகர்க்குமெனில்) தங்கட்கு-(தாய்தந்தையராகிய
தங்களுக்கு, (இடையூறு செய்யும்பொருட்டு) ஓர் காலனை-ஓர் எமனை
வளர்க்கின்ற - வளர்த்துவரும், காட்சி போலும்-செய்கையின் தோ
றத்தை நிகர்க்கும்.

(வி-ரை) புத்திரனைப் படிப்பியாமல் செல்வத்துடன் வளர்த்
வந்தால் அச் செல்வச்செருக்கால் அவன் புத்தி கெட்டுத் துஷ்டனு
அடாத காரியங்களைச் செய்து தாய் தந்தையர் தளர்ச்சி யடைந்
விருத்தாப்பிய காலத்தில் அவர்களையுக் துன்புறுத்துவா னுதலின்
அவனை அவ்வாறு விவேகங் கெட வளர்த்தல் உயிர்கொல்லும் எமனை

ார்ப்பதுபோலாம். எத்தனையோ பேதையர் அறிவீனத்தால் தற்
ருமை கொண்டு பிள்ளைகளுக்குக் கல்வி கற்பியாமலும், புத்தி கற்
கொடுக்காமலும், 'அவர்கள் அதிகமாகப் படித்தால் இளைத்துப்
ாவார்கள்'என்று அவர்களை வீட்டில் வைத்து இளமையில்இஷ்டம்
ால் விளையாடவிட்டுக் கண்டகண்ட உணவுகளையெல்லா மூட்டித்
ிரடையச் செய்து, பின்னர் அவர்களுக்கு யௌவன பருவம்
து தாங்கள் தளர்ந்தவுடன் அவர்கள் வேசிக்கள்ளராய்ப் பொருளைத்
ர்வினியோகஞ் செய்தலோடு தங்களுக்கும் உணவு கொடாமல்
னந்தோறும் தங்களை நையப்புடைக்க எண்ணிலாத் துயரடைகின்
ர். ஆகலின், புத்திரரை இளம் பருவத்திலேயே சீர்ப்படுத்துதல்
தந்தையர் கடனும். ஆல் - அசை. (௭)

புதல்வர்க்குப் புத்தி கற்பியாத தாய் தந்தையர்
அவர்களுக்குச் சத்துருக்க ளென்பது

[இதுவுமது]

தீதுநன் றறிகிலாச் சேய ரென்செய்வார்
கோதற வவரைநன் னெறியிற் கூட்டிடா
தேதங்க ளவர்முன்செய் திழிவைக் கற்பிக்குந்
தாதைதாய் புதல்வர்க்குச் சத்து ருக்களே.

(ப-ரை) தீது - தீங்கினையும், நன்று - நன்மையையும், அறி
லா - (இன்னது தீது, இன்னது நன்று என்று) பகுத்தறியாமல்
னம் போனபடி கெட்ட வழியில் நடக்கின்ற, சேயர்-புத்திரர், என்
ய்வார் - (அவர்கள் குற்ற நீங்குதற்கு) என்ன உபாயத்தைச் செய்
ர்கள்?,(அவர்கள் மன முழுதுங் கெட்டிருப்பதால் அதனை நல்வழி
 திருப்புதல் அவர்களா லியலாது; அவர்களை நிந்திப்பதிற் பய
ல்லை; அவர்கள் இவ்வாறு கெட்டதற்குக் காரணம் அவர்களுடைய
ய் தந்தையர் அவர்களுக்கு நல்லொழுக்கங்களைக் கற்றுக்கொடாமல்
 செயல்களைக் கற்றுக்கொடுத்ததேயாம்; ஆதலால்) கோது அற -

குற்றம் நீங்க, அவரை - அப் புதல்வரை, நல் நெறியில் - நல்ல வ
யில், கூட்டிடாது-நடக்கும்படிச் சேர்க்காமல், அவர் முன்-அவர்க
க்கு முன்னே, ஏதங்கள் செய்து - பல குற்றமான செய்கைகளை
தாங்களே நடத்திக் காட்டி, இழிவை - தாழ்மையான செய்கை
கற்பிக்கும் - அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கும், தாதை-தகப்பனு
தாய் - அன்னையும், புதல்வர்க்கு - அப் புத்திரர்களுக்கு, சத்துருக்க
விரோதிகளாவர்; (ஆதலால், புத்திரர் நன்கு செய்தால் இவர்களை
நிந்திக்கவேண்டும்).

(வி - ரை) புத்திரர் நல்வழியில் நடக்கத்தக்கவர்களா யிருந்
லும் சில குடும்பங்களில் தாய்தந்தையருடைய துர்ச் செய்கை
பார்த்து அவர்களும் கெட்டுப்போவார்கள்; எப்படியெனில், ஒருவ
தன் புத்திரன் பார்த்திருக்க மதுபானம் பண்ணினால், அப் புத
னும் அவ்வாறே செய்யத் தொடங்குவான்; ஆதலால், தாய்தந்தை
இழி தொழிலை யுடையவர்களா யிருந்தாலும் புத்திரருக்கு முன்
அதனைச் செய்யாதிருத்தல் நலமாம்; அப்படி யிருப்பின் புத்தி
கெடார். இதனை யறியாத பேதையர் தாமே கெட்ட செய்கை
நடத்திக் காட்டிப் புத்திரரைக் கெடுத்துப் பின் வருந்துவர். (

## புத்திரனு லடையும் பயன்

[இதுவுமது]

மைந்தனைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி யன்பொடு போற்றி வளர்ப்பதுந்
தந்தை மாண்டுழித் தன்முறைக் கேற்பன
அந்த மாங்கட னாற்றுதற் கேயன்றோ.

(ப - ரை) மைந்தனை - புத்திரனை, பெறுகின்றதும் (தந்தை
யானவன்) பெறுவதும், மாசு இல்லா - குற்றமற்ற, புந்தியொடு
புத்தியுடனும், அன்பொடு - அன்புடனும், போற்றி - (அவனைப்

ணி, வளர்ப்பதும் - வளர்த்து வருவதும், (எதற்காகவெனில்) தை - அத் தகப்பன், மாண்டுழி - இறந்தபோது, தன் முறைக்கு- னுடைய குலாசாரத்துக்கு, ஏற்பன - பொருந்துவனவாகிய, ந்தம் ஆம் - அழகான, கடன் - ஈமக்கடன் பிதிர்க்கடன் முதலிய றை, ஆற்றுதற்கே - செய்தற்கேயாம்; (ஆதலால், புத்திரன் தைக்குரிய கடன்களை அவசியம் செய்யவேண்டும்).

(வி - ரை) தந்தை யிறந்தபின் புத்திரன் அவனுக்குச் செய்ய ண்டிய சிராத்த முதலிய கர்மங்களைத் தவறாது செய்து வருவா பின் அத் தந்தை மேலுலகத்தில் நன்மை யடைவான்; அதன்பொரு ட அத்தந்தைபுத்திரப்பேற்றைவிரும்பி அருந்தவ முயன்று புதல்வ ப் பெறுகின்றான். ஆதலின், புத்திரன் தந்தைக்குரிய கடனைத் செய்தல் அவசியமாம்; அவ்வாறு செய்யாத புத்திரன் பிறந் னில்லை; இங்குக் கூறியபடி புத்திரரால் தந்தையர்க்கு நன் ண்டாமென்பதை, "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழி பிறங் ப், பண்புடை மக்கட் பெறின்," என்னும் வள்ளுவர் வாக்கா ணர்க.

"முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் லத் தானே" (ந பொ. கூஉ) என்னுஞ் சூத்திர விதியால், பெறு ற்றொழில் மூன்று காலத்திற்கு முரியதாதலின் நிகழ்கால மேற்று ந்தது. ஒடு என்பதை புத்தி, அன்பு என்னும் இரண்டிடத்துங் ட்டுக; உழி-இடம்; இஃது இங்குச் சமயத்தை யுணர்த்திற்று. ன்றோ - அசை. (சு)

## இயற்கைக்கு விரோதமாக நடப்போர் சுகமடையா ரென்பது

[நேரிசை வெண்பா]

நிட்டூர மாக நிதிதேடு மன்னவனும்
இட்டதனை மெச்சா விரப்போனும்—முட்டவே

கூசிநிலை நில்லாக் குலக்கொடியுங் கூசிய
வேசியுங் கெட்டு விடும்.

(ப - ரை) நிட்டூரம் ஆக - (தன்னிடத்தே மிகவும்) கொடு
யுண்டாக, (அதாவது: தான் மிகவுங் கொடுமையுடையவனாய்க்
களை வருத்தி) நிதி தேடும் - பகுதிப்பொருளைச் சேகரிக்கின்ற,
னவனும் - அரசனும், கெட்டுவிடும்-கெட்டொழிவான்; இட்டத
(தனக்குக்) கொடுத்ததை, மெச்சா-(போதுமென்று கொண்டா
திருப்தி யடையாத, இரப்போனும் - யாசகனும், கெட்டுவிடும் - (
மடையாமற்) கெடுவான்; மூட்ட - (பர புருஷரிடத்தில்) நெரு
கூசி - கூச்சத்தை யடைந்து, நிலை-(கணவன் கட்டளைக் கடங்கி
த்தலாகிய) கற்புநிலையிலே, நில்லா - நிற்காத, குலக்கொடியும் -
மகளும், கெட்டுவிடும்-கெடுவாள்; கூசிய - (தன்னை விரும்பி வ
ரிடத்து நெருங்கிப் பேசுதற்கு) நாணிய, வேசியும் - பரத்தைய
கெட்டுவிடும் - கெட்டுப்போவாள்.

(வி - ரை) மன்னன் செங்கோன்முறை தவறிக் குடிகளுக்கு
தீங்கு செய்வானாயின், அவன் நிச்சயமாகக் கெடுவான்; "கூழு
குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச், சூழாது செய்யு மரசு," எ
பது திருக்குறள். கிடைத்தவரையில் திருப்தி யடையாத யாசக
பலராலும் வெறுக்கப்படுவானாதலின் பின்னர் அவன் ஒன்று
கிடையாது வருந்துவான். பரபுருஷரிடத்து அருவருப்புக் கொள்
தவளாய் நாணத்தைக் கைவிட்டுப் புருஷன் கட்டளைப்படி நடவாத
ளும் தீங்கடைவள்; இத்தகைய அடக்கமற்ற பெண்களை ஒருவ
கட்டிக்கொள்வது மடியில் நெருப்பை வைத்திருப்பது போலா
இதனை, "துடியிற் பெண்டிர் மடியி னெருப்பு," என்பதனா லுணர்
வேசி, பிற ரினிமை யடையும்படி பேசி அவரை மயக்கிப் பொருள்
கவர்ந்து ஜீவிப்பவளாதலின் அவள் வெட்கத்தை யடைவது அ
ளுடைய பிழைப்புக்குக் கேடாம்.

இட்டது - வினையாலணையும் பெயர். கொடி - உவமையாகு
யர். "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லா
ஞ் செய்யுமென் முற்றே" (ந-வி-உக) என்னுஞ் சூத்திர விதி
, 'கெட்டுவிடும்' என்கிற தொடர் பலர்பாற் படர்க்கையோடு
ந்து முடியாதாதலின் நான்கிடத்துந் தனித் தனியே கூட்டப்
டது. 'கெட்டுவிடும்' என்பதில் 'விடு' துணிவுப்பொருளை யுணர்த்
 விகுதி; இஃது உம் என்னும் படர்க்கை வினைமுற்று விகுதி
டு சேர்ந்து, 'விடும்' என்றாயது. (எ)

உரியோரும் சத்துருக்களாகு மியல்பு

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

...படு பிதாவு மென்றுங் கற்பினிற் றவறித் தீங்கிற்
...படு மன்னை தானு முயர்ந்திடு மழகு தானே
...ர்ந்திடும் பாரி வித்தை யறிந்துகல் லாத பிள்ளை
...ங்கட லுலகுள் ளோர்க்குச் சார்ந்தசத் துருக்க ளன்றே.

(ப-ரை) தடம் - விசாலமாகிய, கடல் - சமுத்திரத்தாற் சூழப்
..., உலகு - உலகத்தில், உள்ளோர்க்கு - இருக்கின்ற மனிதர்க்கு,
ன் படு-(கையி லிருக்கும் பொருளையு மழித்துக்) கடனுக் குள்ளா
ற, பிதாவும் - தந்தையும், என்றும் - எப்பொழுதும், கற்பினில்-
விரதா தர்மத்தில், தவறி-தவறுதலடைந்து, தீங்கிற்கு - (வியபி
ம் முதலிய) கெட்ட செய்கைகளுக்கு, உடன்படு-இணங்கி நடக்
ற, அன்னை தானும் - மாதாவும்; உயர்ந்திடும் - மேலாகும், அழகு-
கானது, அடர்ந்திடும் - சேர்ந்து நிறைந்திருக்கின்ற, பாரி-மனை
ரும்; வித்தை - சாஸ்திரக் கல்விகளை, அறிந்து-ஆராய்ந்தறிந்து,
லாத - படிக்காத, பிள்ளை - புத்திரனும்; (உரியவர்களா யிருந்தா
) சார்ந்த-தீங்கு பொருந்திய, சத்துருக்கள்-பகைவ ராவார்கள்.

(வி-ரை) பிதா கடன்படுவானுகில் பிந்திய காலத்தில் அக் கடன் புத்திரனுக்கு மிக்க துன்பத்தைச் செய்யுமாதலால் அப் பிதா அப் புத்திரனுக்குச் சத்துருவே யாவான்; தாய் கற்புநிலை தவறியவளா யிருந்தால் அச் செய்கை புத்திரனுக்கு மிக்க மானக்கேட்டை யுண்டாக்கி அவன் அவமானத்தைச் சகிக்காமல் தன்னுயிரை மாய்த்துக் கொள்வதற்கு ஏதுவா மாதலின் அவளும் சத்துரு வாவாள்; மிக்க அழகு பொருந்திய மனையாள் சற்குண முடையவளா யிருந்தாலும் அவளுடைய அழகு பலராலும் விரும்பக் கூடியதா யிருத்தலின் அவனுக்குத் தீயரால் ஒருசமயம் துன்ப நேருமாதலின், அதனால் திருப்தி யுண்டாவதற் கிடமில்லாமற்போம்; ஆதலால், அவளும் சத்துருவை நிகர்த்தவ ளாவாள்; ஆயினும், இக் கருத்தைக்கொண்டு அழகுடைய ஸ்திரீகளை மணஞ்செய்தல் தீங்கென்று கருதலாகாது; இ° அழகுடைய ஸ்திரீகளைப் பாதுகாக்கும் சக்தியற்றவர்களுக்கும், அவர்களை இஷ்டம்போல் வெளியேறித் திரியும்படி விடும் நூதன நாகரிகசாரர்களுக்கும் கூறப்பட்டதாதலின், இத்தகையினர்க்கே அவள் சத்துருபோலாவா ளென்றும், அவளைப் பாதுகாக்கும் சக்தி யுடையவர்களுக்குத் திருப்தியைச் செய்பவளாவா ளென்றுங் கொள்க. அழகுடைய ஸ்திரீகளைப் பொன்னைப்போலப் போற்றுவார் பெரும்பான்மையும் அவர்களால் மனக்களிப் படைவதையும், அவர்களை இஷ்டப்படி நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு ஆகிய குணங்களை விட்டு வெளியேறித் திரியும்படி விடுவோர் அவர்களுக்கு நேரும் பல மானக்கேட்டால் பெரும்பான்மையும் சகிக்கவொண்ணுத் துயரடைவதையும் நாம் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். ஜனங்கள் நெருக்கமாகக் கூடும் விசேஷ காலங்களில் இவ்விஷயத்தின் உண்மையைப் புத்திமான்கள் நன்கு தெரிந்து கொள்ளலாம். கல்வியறிவில்லாத பிள்ளைகள் தீய வழிகளிற் புகுந்து எக்காலத்தும் தந்தைக்கு மிக்க பழிப்பை யுண்டாக்குவார்களாதலின் அவர்களும் சத்துருக்களே யாவர். 'அன்னை த

ம்' என்பதில், தான்-அசை. 'அழகுதானே' என்பதிலும், தான்-
சை. 'அடர்ந்திடும்' என்பதில், 'இடும்' என்பது துணைவினை.
லகுள்ளோர்-ஏழாம் வேற்றுமைத்தொகை. அன்றே-ஈற்றசை. ()

ழிவான தானத்தி னியல்பும், கெட்ட மனையா ளியல்பும்,
தாழ்ந்த சிநேகத்தி னியல்பும்

[நேரிசை வெண்பா]

ஏசி யிடலி னிடாமையே நன்றெதிரிற்
பேசு மனையாளிற் பேய்நன்று—நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாவதே நன்று.

(ப - ரை) ஏசி - (உலகத்தில் யாசகரை ஒருவர்) பலவிதமாக
இகழ்ந்து பேசி, இடலின்-(பின்னர்) பொருளை அவர்க்குக் கொடுப்ப
தைக் காட்டினும், இடாமையே - கொடாமலிருப்பதே, நன்று -
நன்மையாம்; எதிரில் - (கணவனுக்கு) நேரில், பேசும் - எதிர்த்துப்
பேசும், மனையாளின் - மனைவியைக் காட்டினும், பேய் நன்று -
(பலவித தீங்குகளைச் செய்யும்) பேயே நல்லதாகும்; நேசம் இல்லா-
அன்பில்லாத, வங்கணத்தின் - உறவைக்காட்டினும், வலிய-வலிமை
யுள்ளஇய, பகை நன்று - விரோதமே நல்லதாகும்; வாழ்வு இல்லா -
(உலகத்திற் செல்வம் முதலியவற்றைப் பெற்றுச் சுகமாக) வாழ்த
லில்லாத, சங்கடத்தின்-துன்பத்தைக் காட்டினும், சாவதே - இறந்து
போவதே, நன்று - நல்லதாம்.

(வி - ரை) முகமலர்ந்து கொடுக்குந் தானமே சிறந்ததாதலின்
அப்படியே கொடுக்கவேண்டும்; அவ்வாறு கொடாமல் யாசகரை நிந்
தித்துக் கொடுத்தலாற் பய னில்லை; "அகனமர்ந் தீதலி னன்றே
முகனமர்ந், தின்சொல னாகப் பெறின்," என்பது திருக்குறள். கண

வன் வார்த்தைக்கு மாறு பேசும் மனையாள் பேயினுந் தாழ்ந்தவளாத லால் அவளை மணந்துகொள்வதினும் பேயை மணந்துகொள்வது நலமாம். உள்ளன்பில்லாத நேயத்தால் ஒரு பயனு மில்லையாதலின் அதனினும் பகையே நன்றாம்; "முகநக நட்பது நட்பன்று நெஞ் சத், தகநக நட்பது நட்பு," என்னுந் திருக்குறள் இதனை வலியுறுத் தும். சுகவாழ்வில்லார் உலகத்தி லிருப்பதாற் பயனில்லை யாதலின் அவர் இறப்பதே நன்றாம்.

இடலின், மனையாளின், வங்கணத்தின், சங்கடத்தின் என்ப வற்றிலுள்ள ஐந்தாம் வேற்றுமை இன்னுருபுகள் எல்லைப்பொரு ளன. (கூ)

## மானிடப்பிறவி யின்பம் அற்ப மென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்]

அடுகரி தொடர வீழ வைந்தலை நாகங் காண
விடிகிணற் றறுகின் வேரைப் பற்றிநான் றிடவவ் வேரைக்
கடுகவோ ரெலியும் வந்து கறித்திட வதினின் றேனுக்
கிடைதுளித் தேனக் கின்பம் போலுமிப் பிறவி யின்பம்.

(ப - ரை) இப் பிறவி - இம் மானிடப் பிறவியாகிய மனித னுடைய, இன்பம்-அற்ப சுகமானது, (எதை நிகர்க்குமெனில்) அடு- கொலை செய்கின்ற, கரி-ஒரு யானையானது, தொடர-(ஒரு காட்டில் ஒரு மனிதனைக் கொல்லக் கருதிப்) பின்பற்றித் துரத்த, (அதைக் கண்டு அம் மனிதன் பயந்தோடி) இடி கிணற்று - இடிந்து வீழ் கின்ற (ஒரு பழமையான) கிணற்றிலே, (தொங்கிக்கொண் டிருந்த) அறுகின் வேரை - அறுகம்புல்லின் வேரை, பற்றி - பிடித்துக்கொ ண்டு, வீழ - பாய்ந்திறங்க, (அத் தருணத்தில் அக் கிணற்றி னடியிற் கிடந்த) ஐந்தலை நாகம்-ஐந்தலை யரவமானது, காண-அவனைக் கண்டு சீற, (அதனால் அம் மனிதன் அக் கிணற்றிற்குள்ளே விழாமல் அறு

ின் வேரைப் பற்றினபடியே) நான்றிட - தொங்கிக்கொண்டிருக்க, யானையும் வந்து மேலே நிற்க அப்போது) அவ் வேரை - அவன் பற்றித் தொங்கும் அவ் வறுகின் வேரை, ஓர் எலியும் - ஒரு எலியும், ந்து - அங்குச் சேர்ந்து, கடுக-வேகமாக, கறித்திட-கடிக்க, அதில் - க் கிணற்றில், நின்றோனுக்கு - (அறுகின் வேரைப்பற்றி அந்தர ாக) நின்ற அம் மனிதனுக்கு, (மேலுள்ள மரத்திற் சார்ந்த தேன் ட்டி லிருந்து தோள்மீது ஒரு துளி தேன் வீழ) இடை - இவ் ாபத்துக்களிடையே, துளி தேன் - அத் துளியாகிய தேனை, நக்கு இன்பம் போலும் - அவன் நக்குவதனா லேற்படும் அற்ப இன்பத்தை ிகர்க்கும்.

(வி - ரை) "ஒரு மனிதன் ஒரு காட்டினிடையே செல்லும் போது அவனை ஒரு யானை கண்டு துரத்த, அதற்கஞ்சி அவனோடி ஒரு இடிகிணற்றிற் குதிக்க உத்தேசிக்கையில், அக் கிணற்றினடியில் த்தலைநாகங் கிடக்கக் கண்டு அதில் வீழ்ந்தாலும் அபாயம் வரு மென் றெண்ணி மேலிருந்து அதிற் றொங்கிக்கொண்டிருந்த அறு ின் வேரைப் பற்றிக்கொண்டு அக்கிணற்றினடுவே தொங்க, யானை ும் வந்து கோபத்தோடு மேலே நின்றது; அத்தருணத்தில் அவனால் ற்றப்பட்டிருந்த அறுகின் வேரை ஒரு எலி வந்து கடித் தறுத்தது; அப்போது அம் மனிதன், 'இப்போதோ நாம் பற்றியிருக்கும் அறு ும் அறுபடப்போகின்றது; கீழே குதிக்கலாமென்றாலோ நாகங் ிடக்கின்றது; மேலேறலா மென்றாலோ யானை நிற்கின்றது; ஆத ால், இன்னும் சிறிது நேரத்திற்குள் எவ்வகையினாலாவது நாம் யிர் துறப்பது நிச்சயம்,' என்று உறுதிகொண்டான்; அத் தருணத் ில் அவன் தலைக்குமேல் வளர்ந்திருந்த மரக்கிளையில் சார்ந்த தேன் ட்டிலிருந்து ஒரு துளி தேன் அவனுடைய தோண்மீது விழுந் து; அவ்வாறு விழுந்த மாத்திரத்தில் அவன் இவ்விதம் பல ஆபத் க்களுக் கிடையிலிருந்தும், தான் சாவதற்குள் அத் தேனை நக்கி

அதன் இனிமையை அனுபவிக்கலா மென்று விரும்பி அத் தேன் றுளியை நாவினல் நக்கினன்,'' என்பது உலகத்தின்பம் நிலை யாமையைப்பற்றிக் கூறும் பழைய கதைகளுள் ஒன்று. மானிட ஜென்மத்திற் கேற்படும் உலகவின்பம், பிணி, மூப்பு, சாக்காடென் னும் பல ஆபத்துக்களுக் கிடையில் சிறிது காலம் ஏற்பட் டழிய கூடிய அற்பவின்ப மாதலின் அது மேற் கூறியபடி தேன் றுளியை நக்கி யவ னடைந்த இன்பத்தைப்போல் மிகவும் தாழ்ந்த வின்பமாம் ஆதலின், மானிடராகப் பிறந்த ஒவ்வொருவரும் நிலையற்றதாகி இவ் வுலக வின்பத்தைப் பெரிதாக நினையாமல் எப்பொழுதும் நிலை ப்பதான பேரின்பத்தைத் தேடவேண்டும்.

அடு கரி-வினைத்தொகை. இடி கிணறு-வினைத்தொகை. துளி தேன் - பண்புத்தொகை. பிறவி: இதில் வி-தொழிற்பெயர் விகுதி பிறவி யென்னும் இத் தொழிற்பெயர் ஆகுபெயராய் அப் பிறப்பை யுடைய மனிதனை யுணர்த்திற்று. 'எலியும்' என்பதி லுள்ள உம்மை இறந்ததுதழுவிய எச்சவும்மை. (கO

## பிரயோசன மில்லாதவை

[நேரிசை வெண்பா]

மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபமும்
நாடில்லான் செங்கோ னடாத்துவதுங் — கூடுங்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டும்
விருந்தில்லான் வீடும் விழல்.

(ப - ரை) மாடு இல்லான் - (உலகத்தில் பொரு ளில்லாத னுடைய, வாழ்வும்-இல்லற வாழ்க்கையும்; மதி இல்லான்-(எவரிட தும் நேயம் பாராட்டும்) அறிவில்லாதவனுடைய, வாணிபமும்-விய பாரமும்; நாடு இல்லான் - நல்ல நாடு கைவசத்தி லில்லாத அரசன் செங்கோல் நடாத்துவதும் - அரசாட்சி செய்வதும்; கூடும் - (பக்

புடன்) அடையத்தக்க, குரு இல்லா - ஆசிரிய னில்லாமற் கற்றுக் கொண்ட, வித்தை - கல்வியும்; குணம் இல்லா - நற்குண மில்லாத, பெண்டும் - பெண்ணின் கூட்டுறவும்; விருந்து இல்லான் - விருந்தினர் வரப்பெறாதவனுடைய, வீடு - இல்லமும்; விழல் - (உலகத்தில்) விழலைப்போலப் பிரயோசன மற்றவைகளாம்.

(வி - ரை) பொருளே உலகத்தில் எல்லாச் சுகத்தையும் தருவதாதலின் அஃதில்லார் வாழ்க்கை பிரயோசன மற்றதாம். வியாபாரம் செய்பவனுக்கு எவரிடத்தும் முகமலர்ந்து பேசி, அவரை வசப்படுத்தத்தக்க அறிவுவேண்டும்; அவ்வித அறிவு அவனிடத்திலிலையாயின் எவரும் அவனிடம் சேரார்; அதனால் அவனுடைய வியாபாரமும் நடைபெறாது; இக்காலத்திற் சில அறிவீனர் வியாபார ஸ்தானத்தி லிருந்தவுடன் தங்களைச் சக்கரவர்த்திகளென்று கருதிக் கொண்டு வருபவரோடு முகமலர்ந்து பேசாமல் எரிமுகங் காட்டி முதலிழந்து வறிஞராய்த் திரிவதை நாம் பிரத்தியக்ஷமாகப் பார்க்கின்றோம்; அத்தகையினர்க்கு இச் செய்யுள் நன்றாக அறிவுறுத்தத்தக்கது. நாடில்லாத அரசன் செங்கோல் நடத்துவது புருஷ னில்லாத மங்கைக் கேற்பட்ட அழகைப்போல் பயனற்றதாம். குருவில்லாமலேற்படும் வித்தை அறிவுடையோரால் கொண்டாடப்படமாட்டாது; சான்றோன்றிகளாய்த் திரியும் சில போலிக் கவிஞர் பெரியோரால் இகழப்படுவது நிச்சயம். குணமில்லாப் பெண்ணோடு சேர்ந்து இல்லறம் நடத்துவதும் பயனற்றதாம். தினந்தோறும் விருந்ினரை உபசரிக்கும் இல்லமே சிறந்ததாம்; அஃதில்லாதவன் வீடு இருந்தும் பயனற்றதாம்; "அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து, நல்விருந் தோம்புவா னில்," என்னும் திருக்குறளால் விருந்தி னுயர்வு உணரப்படும்.

டைத்துவது - நடாத்துவது என இடை நீண்டது. பெண்டு - ஆகுபெயராய்ப் பெண்ணின் உறவை யுணர்த்திற்று; பின்னர் அஃறிணை முடிபாக முடிக்கவேண்டி யிருப்பதால் இங்ஙனம் பொருள்

கொள்ளப்பட்டது. விருந்து - புதுமை; இது ஆகுபெயராய்ப் பு
யவர் என்று பொருள்படும் விருத்தினரை யுணர்த்திற்று. விழல்
ஒருவகைப் புல்; இஃது ஒன்றுக்கு முதவாதது. உம்மைகளெல்லா
எண்ணும்மைகள். (கக

## வெளியிடக் கூடாதவைகள்

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்]

மந்திரந் தன்னைப் பிறரவ மதித்தல்
மகளிரைச் சேர்தல்வஞ் சனைதன்
நந்தலி லாயுள் பிறந்தநா ளில்லி
னண்ணிய குற்றநீ ணிதியம்
முந்திய கற்பின் மனைவிதன் குணங்கண்
மொழிந்தவிவ் வொன்பது மாவி
சிந்துற வரினும் பிறரொடு மொழித
றீதெனை வுரைப்பரே தெளிந்தோர்.

(ப - ரை) மந்திரம் - (ஒருவன், தனக்கு ஆசிரிய னுபதேசித்த
இரகசியப் பொருளாகிய), மந்திரமும்; தன்னை —, பிறர்-அன்னியர்,
அவமதித்தல் - நன்குமதியாமல் நிந்தித்தலும் (அதாவது நிந்திக்கும்
மானக்கேடான செய்கையும்); மகளிரை - உரிய பெண்களை, சேர்
தல் - கூடுதலாகிய இரகசியச் செய்கையும்; வஞ்சனை-(தான் கொடி
யவனுகிய எதிரிக்குச் செய்ய நினைத்திருக்கும்) சூதான காரியமும்,
தன் - தன்னுடைய, நந்தல் இல் - குறைதலில்லாத, ஆயுள் - ஆயுள்
முடிவும்; பிறந்த நாள் - பிறந்த நக்ஷத்திரமும்; இல்லில் - தன் வீட்
டில், நண்ணிய - பொருந்திய, குற்றம் - குறைகளும்; நீள்-நீண்ட,
நிதியம் - பொருளினளவும்; முந்திய - முதன்மையாகிய, கற்பின் -
கற்பினையுடைய, மனைவிதன் - பாரியினுடைய, குணங்கள் - நற்
குணங்களும்; (ஆகிய) இவ்வொன்பதும் - இந்த ஒன்பது விசேஷங்
களையும், மொழிந்த உரிமையானதென்று பெரியோர் கூறிய, ஆவி-

தன்னுடைய உயிர், சிந்துற - சிதறி நீங்கும்படி, வரினும் - (துன்பம்) வந்தாலும், பிறரொடு - அன்னியரிடத்தில், மொழிதல்-சொல்லுதல், தீது என - தீங்காகுமென்று, தெளிந்தோர்-சாஸ்திர வுணர்ச்சிகளில் தெளிந்தவராகிய அறிவுடையோர், உரைப்பர் - சொல்லுவார்கள்; ஆதலின், இவற்றை வெளியிடுவதால் தீங்குண்டாம்.)

(வி - ரை) ஒருவன், மந்திரத்தை வெளிப்படுத்தின் அதனு லேற்படும் சித்தி யில்லாமற்போம்; தனக்கு வரும் மானக்கேட்டை வெளியிட்டால் பின்னும் அதிகமான அவமதிப்பு நேரும்; மகளிரைச் சேர்தலை வெளியிடின் மிக்க இழிவுண்டாம்; எதிரிக்குத் தான் செய்யக் கருதியிருக்கும் வஞ்சனையை வெளியிடின் அவ்வெதிரிக்கும் அது தெரிந்து தான் உத்தேசித்த காரியம் நிறைவேறுமற்போம்; தன் ஆயுள் முடிவைக் கூறின் தன் எதிரிகள் அஞ்சாமல் தன் குடும்பத்திற்குக் கேடு செய்ய எது வுண்டாகும்; பிறந்த நக்ஷத்திரத்தை வெளியிட்டால் எதிரிகள் தனக்குச் சூனியம் முதலியன செய்வதற்கேதுவாம்; வீட்டிற் பொருந்திய குற்றத்தை வெளியிடின் அவமதிப்புண்டாம்; பொருளினளவை வெளியிடின் விரோதிகள் தன் பலாபலந் தெரிந்து பகை முடிக்க எது வுண்டாம்; கற்புடைய மனைவி குணத்தை வெளியிட்டால் பொறாமையுடைய அற்பர் அக் குணத்தைக் கெடுக்க முயல்வர்.

'சிந்துற வரினும்' என்பதில் 'துன்பம்' என்னும் சொல் இடையில் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. 'ஆவி சிந்துற வரினும்' என்பதின் உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. (கஉ)

## இன்ன இன்னவரை இன்ன இன்ன சமயத்தில் துதிக்கவேண்டுமெனல்

[நேரிசை வெண்பா]

நேசனைக் காணுவிடத்து நெஞ்சாரவே துதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச

மனையாளைப் பஞ்சணையில் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்.

(ப-ரை) நேசனை-(ஒருவன் தன்னுடைய) நட்பாளனை, காணு இடத்து - காணுதவிடத்தில் (அதாவது, அவனில்லாதபோது), நெஞ் சார - மனம் பொருந்த, துதித்தல்-புகழவேண்டும்; ஆசானை-ஆசிரி யனை, எவ்விடத்தும்-எந்த விடத்திலும் (அதாவது நேரிலும் மறைவி லும்), அப்படியே துதித்தல் - அவ்விதமே புகழவேண்டும்; வாசம் - (மலர்மாலை முதலியவற்றை யணிந்திருப்பதால்) வாசனை பொருந் திய, மனையாளை - மனைவியை, பஞ்சணையில் துதித்தல்-சயனத்தில் (கூடி யிருக்குங் காலத்தில்) புகழவேண்டும்; மைந்தர்தமை - புத்திர ரை, நெஞ்சில் துதித்தல் - (எப்பொழுதும்) மனதிற்குள்ளேயே புகழ்ந்துகொள்ளவேண்டும்; வினை ஆளை - தொழிலாளியை, வேலை முடிவில் துதித்தல் - அவன் செய்யுந் தொழில் முடியுங் காலத்தில் புகழவேண்டும்.

(வி - ரை) நேசனை எதிரே துதித்தால் அது முகஸ்துதியாக முடியுமாதலின் காணுவிடத்துப் புகழ்தலே சிறப்புடைத்தாம்; ஆசான் எப்போதும் தற்பெருமை முதலியன கொள்ளாமல் பெருந் தன்மையுடையனுய்ப் புகழ்ச்சிக்குத் தக்கவாறு தன்மீது அன்பைச் செலுத்தி நல்விஷயங்களை உபதேசிக்கக் கூடியவனுதலின், அவனை எவ்விடத்தும் புகழ்வதால் நன்மையே யுண்டாம். மனையாளைப் பஞ் சணையிலன்றி வேறயவிடத்துத் துதித்தால் அவள் தற்பெருமை கொண்டு நாயகனிடத்து அஞ்சுதலின்றிக் குடும்ப காரியங்களைச் சரி வர நடத்தமாட்டாளாதலின் அவளைப் பஞ்சணையில் சரசமாயிருக்குங் காலத்தில் மட்டும் துதித்தலே சிறப்புடைத்தாம். மைந்தரை மனத் திற்குளன்றி வெளியிற் புகழ வாரம்பித்தால் அவர்கள் தந்தையிடத் தச்சமின்றிப் பெருமை கொண்டு மனம் போனபடி நடக்கத் துணி வார்களாதலின் அவர்கள் எவ்வித திறமை வாய்ந்தவர்களா யிருந்தா

னும் அவர்களை மனத்திற்குள்ளேயே புகழ்ந்துகொள்ள வேண்டும். வேலையாளை அவன் செய்யும் வேலை முடிவதற்குட் புகழ்ந்தால் அவன் தற்பெருமை கொண்டு அவ் வேலையை ஒழுங்காகச் செய்து முடிக்கமாட்டா னாதலின் அவ் வேலை முடிந்த பின்பே அவ் வேலைத் திறமையைப் பற்றி அவனைப் புகழவேண்டும்.

துதித்தல் - ஒருவகைத் தல்லீற்று வியங்கோள்; இது 'துதிக்க' என்று பொருள்படும்; இதுபற்றி 'வேண்டும்' என்னும் வியங்கோள் வாக்கியம் விரித்துப் பொரு ளுரைக்கப்பட்டது. ''மனத்துக்கண் மாசில னாத லனைத்தற, னாகுல நீர பிற,'' என்னுந் திருக்குறட் செய்யுளில், ''மாசிலனாதல்'' என்பதற்குப் பரிமேலழகர் ''மாசிலனாருக'' என்று பொருள் கூறியிருத்தலால் இது துணியப்படும். மற்றைய நான்கிடத்தும் 'துதித்தல்' என்பது கூட்டப்பட்டது. இன்னும் 'துதித்தல்' என்பதை முடிக்குஞ் சொல் எஞ்சி நின்ற இசையெச்சமெனக் கொள்ளுதலு மொன்று. (கரு)

## பிறரிடத்து வெளிப்படுத்தத் தக்கவை

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

தகுதிகொள் கடனக் கடன்றனைத் தீர்த்த
லுன்பொருள் கோடல்பின் பகர்தல்
மகளிரைக் கொடுத்தல் தன்னுடை யொழுக்க
மாயினிற் புரிந்ததன் னூவம்
புகலரு மயலோர் நற்குண மென்னப்
புகன்றவிவ் வொன்பது மெவர்க்கு
மிகலற மறையா துரைத்திட லொழுக்கத்
தியல்பென மொழிவர்நன் குணர்ந்தோர்.

(ப - ரை) தகுதி - (உலகத்தில் ஒருவன் தன்னிடத் துண்டாகிய) உத்தம குணங்கள்; கொள் கடன் - தான் கொள்ளும் கடன்;

அக்கடன்தனைத் தீர்த்தல் - அக் கடனைத் தீர்க்கும் விவரம்; தான் பொருள் கோடல்-(வியாபாரத்தின்பொருட்டுத் தான் பிறரிடத்துப்) பொருள்களை வாங்கிக்கொள்ளுதல்; பின் - பின்னால், பகர்தல் - அப் பொருளை விலை பகர்ந்து விற்றல்; மகளிரை - பெண்களை, கொடுத்தல் - மணஞ்செய்து கொடுப்பது; தன்னுடை - தன்னுடைய, ஒழுக்கம் - ஆசாரங்கள்; மரபினில் - வரிசைக் கிரமமாக, புரிந்த - செய்த, தன் பாவம் - தன்னுடைய பாவங்கள்; புகலரும் - சொல்லுதற்கரிய, அயலோர் - அன்னியருடைய, நற்குணம் - நல்ல குணங்கள்; என்னப் புகன்ற - என்று சொல்லிய, இவ்வொன்பதும் - இந்த ஒன்பது செய்கைகளையும், இகல் அற - விரோத மில்லாமல், எவர்க்கும் - எவரிடத்தும், மறையாது-ஒளிக்காமல், உரைத்திடல் - சொல்லுதல், ஒழுக்கத்து இயல்பு என - நற்குணத்தின் இயற்கையென்று, நன்கு உணர்ந்தோர் - (உலகத்தி லேற்படும் நன்மை தீமைகளை) நன்றாக ஆராய்ந்தறிந்த பெரியோர், மொழிவர்-கூறுவார்கள்; (ஆதலின், உலகத்திற் புகழை விரும்பும் ஒவ்வொருவரும் இவ்வொன்பது காரியங்களையும் மறைக்காமல் வெளியிடவேண்டும்).

(வி - ரை) உலகத்தில் ஒருவன் தன்னிடத்துண்டாகிய நற்குணங்களை வெளிப்படுத்துவதனால் தனக்குப் பலரிடத்தும் நல்ல மதிப்புண்டாகும். தான் கடன்கொள்ளும் போது அதனைப் பலரிடத்துஞ் சொல்லிக்கொண்டால் பின்னர் ஒரு பிசகும் வராது. கடனைத் தீர்க்குங் காலத்தும் பலரறியத் தீர்க்கவேண்டும்; அவ்வாறு தீர்த்தால் கடன் கொடுத்தவன் பின்னே அழிவழக்கிட எதுவுண்டாகாது: வியாபாரத்திற்குப் பொருளை வாங்கும்போது பலரறிய வாங்கினால் பின் கணக்குத் தீர்ப்பதில் பிசகொன்று முண்டாகாது; அதை விற்குங் காலத்திலும் பலரறிய விற்றால் பொருட்காரனுக்கு விலை கொடுக்கும்போது தர்க்கமொன்றும் வாராது. பெண்ணைக் கொடுக்குங் காலத்தில் பலரறியக் கொடுத்தல் 'இன்னவனுக்கு இன்னவள்'

மனைவி' என்னும் உறுதி ஏற்படும்; "பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து கடிபுக்க மெல்லியல், காதன் மனையாளும்..." என்னும் நாலடிச் செய்யுளும் இதனை நன்கு விளக்கும். தன்னுடைய ஆசாரத்தை வெளிப்படுத்தினால் உலகத்தவர் தன்னை அதற்குத் தக உபசரிப்பர். தன்னுடைய பாவத்தை ஒளிக்காமல் வெளிப்படுத்தினால் "மெய் கூறுவோன்" என்ற புகழ் தனக் கேற்படுவதன்றிப் பெரியோரால் அப் பாவத்திற்குப் பரிகாரமு மேற்படும். அயலார் நற்குணத்தை வெளிப்படுத்தினால் அவர்க்கு நன்மையுண்டாவதோடு தனக்கும் 'உள்ளது கூறுவோன்' என்ற நற்பெயருண்டாகும்.

கொள்கடன்-வினைத்தொகை. கொள்தல் - என்பது "லளவேற்றுமையிற் றடவு மல்வழி, யவற்றோ டுறழ்வும் ... ..." என்னும் (ந. மெ. பு. உச) சூத்திர விதியால் நிலைமொழியீற்றுகரம் டகரமாகவும், "னலமுன் றனவும் ணளமுன் டணவு, மாகுந் தநக்க ளாயுங் காலே," என்னும் (ந. மெ. பு. ௩௪) சூத்திர விதியால் வருமொழி முதலாகிய தகரம் டகரமாகவும் திரிந்து விகாரத்தால் இடையொற்றுக் கெட்டு நிலைமொழி முதனீண்டு, 'கோடல்' என்றாயது. (௧௪)

## தண்டனையால் பயன்றரு மிடங்கள்

[நேரிசை வெண்பா]

துர்ச்சனரும் பொன்னுந் துடியுந் துரகதமும்
அச்சமற முன்னிற்கு மாயிழையும்—நச்சரவும்
கண்டித்த வெள்ளுங் கரும்பு மிளநீருந்
தண்டித்தார்க் கன்றோ சயம்.

(ப-ரை) துர்ச்சனரும்-துன்மார்க்கரையும்; பொன்னும்-பொன்னையும்; துடியும் - பறையையும்; துரகதமும் - குதிரையையும்; அச்சம் அற - மனத்தில் பயம் நீங்க, முன்னிற்கும் - (புருஷனுக்கு)

முன்னே நின்று தைரியத்தோடு எதிர்த்துப் பேசும், ஆயிழையும் மனைவியையும்; நச்சு - நஞ்சையுடைய, அரவும்-அரவத்தையும்; கல டித்த-(செடிகளைப் பிடுங்கி யுலர்த்தி) அடித்துகுத்த, எள்ளும்-எள்ளை யும்; கரும்பும் - கரும்பையும்; இளநீரும் - இளநீரையும்; தண்டித்தா க்கு-(அடித்தோ நசுக்கியோ வெட்டியோ) வருத்தினோர்க்கே, சயம் வெற்றி (அதாவது பயன்) உண்டாம்.

(வி - ரை) துன்மார்க்கர், அடித்து வருத்துவோர்க்கே இதஞ் செய்வர். பொன், உருக்கி அடித்து நீட்டினாற்றான் ஆபரணமா அமையும். பறை, கொம்பினால் அடித்தாற்றான் ஒலியைத் தரும் குதிரை, அடித்து வருத்தி ஓட்டுவோர்க்கே வசப்பட்டு நடக்கும் அடங்காப் பெண், தண்டிக்குங் கணவனுக்கே அடங்கி நடப்பாள் அரவம், தன்னைக் கொன்றவர்க்கே தன்னிடத்துள்ள இரத்தின தைக் கொடுக்கும். எள், தன்னைச் செக்கிலிட்டு நசுங்க ஆட்டுவோர் கே எண்ணெயைத் தரும். கரும்பு, தன்னை ஆலையிலிட்டுச் சிதை தாட்டுவோர்க்கே இரசத்தைத் தரும். இளநீர், தன்னை வெட்டிக் கண் திறப்பவர்க்கே மதுரமான நீரைக் கொடுக்கும்.

துர்ச்சனர், பொன் முதலியவற்றில் இரண்டனுருபுகள் தொக கன. அவற்றை ஏழாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு, 'வரு த்துவோர்க்கு, துர்ச்சனரிடத்தும், பொன்னிடத்தும், துடியிட தும், குதிரையினிடத்தும், ஆயிழையிடத்தும், அரவினிடத்தும், எள்ளிடத்தும், கரும்பிடத்தும், இளநீரிடத்தும் வெற்றி யுண்டாம் எனப் பொருளுரைத்தலு மொன்று. ஆயிழை-அன்மொழித்தொகை, நஞ்சு என்பது நச்சு என வலித்தல் விகாரம் பெற்றது. அன்றே - அசை.

(கரு)

இன்னவர் தாய்மா ரெனல்

[நேரிசை வெண்பா]

தன்னை யளித்தா டமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிறேவி—தன்மனையைப்

பெற்றா ளிவரையே பேசி லெவருக்கும்
நற்றாய ரென்றே நவில்.

(ப - ரை) (மனமே!) பேசில்-(நீ ஒரு மனிதனுக்குரிய தாய்மாரைப்பற்றி ஆராய்ந்து) சொல்லுமிடத்து, தன்னை அளித்தாள் - தன்னைப் பெற்றவளும்; தமையன் மனை - மூத்தோன் மனைவியும்; குருவின்-ஆசிரியனுடைய, பன்னி-பாரியும்; அரசன் பயில்-(தன்னையாளும்) மன்னன் பழகி நேசங் கொள்ளுகின்ற, தேவி - மனைவியும்; தன் மனையை-தன்னுடைய மனைவியை, பெற்றாள்-ஈன்ற மாமியும்; (ஆகிய) இவரையே - இவர்களையே, நல் தாயர் என்று - நல்ல தாய்மார்களென்று, எவருக்கும்-எத்தகையினர்க்கும், நவில்-கூறுவாயாக.

(வி - ரை) 'நவில்' என்னும் ஏவலுக்குத் தகுதியாக, 'மனமே!' என்னும் விளி வருவித் துரைக்கப்பட்டது. பெற்ற தாயோடு மற்றையரையுஞ் சேர்த்து, 'நற்றாய ரென்றே நவில்' என்றதனால், தன்னைப் பெற்றவளோடு தமையன் மனைவி முதயோரையும் தாய்மார்களென்றே கொள்ளவேண்டு மென்பதாயிற்று.

அளித்தாள், மனை, பன்னி, தேவி, பெற்றாள் என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. இவரையே, என்றே, என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் தேற்றப் பொருளன. (௧௬)

## கல்வியறிவற்ற உலோப ரியல்பு

[நேரிசை வெண்பா]

கட்டி யடிப்போர்க்குங் கன்மீதி லேற்றுவர்க்கும்
எட்டி யடிப்போர்க்கு மீவரே—திட்டமுடன்
பாடுவோர்க் கீயாரே பல்லுதிரத் தாடையினிற்
போடுவோர்க் கீவார் பொருள்.

(ப - ரை) (பாடல்களின் அருமை யறியாத உலோபர்கள்) பொருள்-(தம்மிடத்துள்ள) பொருளை, திட்டமுடன்-உறுதியோடு, பாடுவோர்க்கு - (தன்னைப் புகழ்ந்து) பாடும் புலவருக்கு, ஈயார் - (மனமுவந்து) கொடார்; (பின்னை எவருக் கீவா ரெனில்) கட்டி- தம்மைக் கட்டிவைத்து, அடிப்போர்க்கும்-அடித்து வருத்திப் பொருள் கவரும் கொடுங்கோன் மன்னருக்கும்; கல்-கல்லை, மீதில் - தம் நெற்றியின்மேல், ஏற்றுவர்க்கும் - ஏற்றி அண்ணாந்து நிற்கச் செய்து துன்புறுத்துங் கொடியர்க்கும்; எட்டி-தாவிப் பாய்ந்து, அடிப்போர்க்கும் - அடித்து இரவில் வழிப்பறி செய்கின்ற திருடருக்கும், ஈவர்-தடையின்றிக் கொடுப்பார்கள்; (அன்றியும்) பல் உதிர-அவர்களுடைய பற்கள் உதிரும்படி, தாடையினில் - கன்னத்தில், போடுவோர்க்கு - கையால் போடுவோர்க்கும் (அதாவது கையா லறையும் துர்ச்சனர்க்கும்), ஈவார் கொடுப்பார்கள்.

(வி-ரை) கல்வியறிவில்லாத மூடர் தம்மை வருத்துவோர்க்கே தம் பொருளைக் கொடுப்பார்கள்; மனம் பொருந்தி வித்வான்கட்குக் கொடுக்கமாட்டார்கள்.

கல்மீதில் - இரண்டாம் வேற்றுமைத் தொகை. உலோபர் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. (கஎ)

## பேய்த்தன்மையுடையார் இன்னவ ரென்பது

[நேரிசை வெண்பா]

தன்னைப் புகழ்வானுஞ் சாட்சிசொல்லி நிற்பானும்
பொன்னை மிகத் தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம்
நண்புத்தி கேட்பானு நாணமில் லாதானும
பெண்புத்தி கேட்பானும் பேய்.

(ப-ரை) தன்னைப் புகழ்வானும்-(உலகத்தில்) தன்னைத் தானே புகழ்ந்து தற்பெருமை கொண்டு திரிபவனும்; சாட்சி சொல்லி-(எப்

பொழுதும் நியாய ஸ்தலங்களில் ஒரு கக்ஷியாரிடம் பணம் வாங்கிக்கொண்டு நியாயத்தை விட்டு நீங்கிப்)பொய் சாட்சி சொல்லி, நிற்பானும் - (அந்தக் கெட்ட வழியிலே) நிற்பவனும்; மிக - மிகுதியாக, பொன்னைத் தேடி-திரவியத்தைச் சம்பாதித்து, (அதனை நல்ல வழியிற் செலவிடாமலும், தானும் அனுபவியாமலும்) புதைப்பானும் - பூமிக்குள் புதைத்து வைப்பவனும்; ஒன்னலர்தம் - (தன்னைச் சமயம் பார்த்துக் கெடுக்கும்) பகைவர்களுடைய, நண் - (நய வஞ்சமாகப்) பொருந்திய, (அதாவது, அவர்கள் கெடுக்கும்பொருட்டு உறவினர் போல நடித்து வஞ்சனையாகக் கூறும்) புத்தி - கெட்ட புத்திகளை, கேட்பானும்-கேட்டு நடப்பவனும், நாணம் இல்லாதவனும்-மனத்தில் வெட்க மில்லாமல் பிறர் நகைக்கும் மானக் கேடான காரியங்களை நடத்தித் திரிபவனும், பெண் புத்தி-பேதைமையுடைய பெண்கள் கூறும் புத்திகளை, கேட்பானும்-கேட்டு அவர்கள் மனம்போல் நடப்பவனும், பேய்-(தோற்றத்தில் மானிடரா யிருப்பினும் செய்கையில்) பேய்போல இழிதன்மை யுடையராவர்.

(வி-ரை) ஒருவன் எவ்வளவு சிறப்புடையனாயினும் அவன் பிறரால் புகழப்படவேண்டுமே யன்றித் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளலாகாது; அவ்வாறு புகழ்வதால் அவமதிப் புண்டாகுமே யன்றிப் புகழ்ச்சி யுண்டாகாது; "தோன்று தோற்றித் துறைபல முடிப்பினுந், தான்றற் புகழ்தல் தகுதி யன்றே," என்பதனால் இதனை யுணர்க; இதனை யறியாதார் தாம் சிறப்பற்றவராயிருப்பினும் தம்மை உயர்ந்தவராகக் காட்டிக்கொள்ளற்பொருட்டுக் கண்டவிடத்தெல்லாம் தம்மைத் தாமே புகழ்ந்து திரிந்து அறிவுடையோரால் அவமதிக்கப்படுவர். பொய்ச்சாட்சி சொல்லித் திரிபவன் பிறர் சிந்தைக் காளாவதுமன்றி மறுமையில் நரகத்தையு மடைவான். பொன்னைத் தேடிப் புதைத்தலால் ஒரு பயனு மில்லை; "பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக், கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் - கூடுவிட்

டின், காவிதான் போயினபின் பாரே யனுபவிப்பார், பாவிகா ளந்த
பணம்,'' என்பதனு லுணர்க. பகைவர் எத்தகைய நயமான வார்த்தை
களைக் கூறினும் அவை கேட்டிற்கே ஏதுவாமாதலின் அவற்றை
கேட்டு நடப்பதால் தீங்கே வரும். நாண மில்லாமல் நடப்பவன் எ
லோராலுந் தூற்றப்படுவான். எவ்வளவு உயர்வுடையனுயினும் பெண்
புத்தி கேட்டு நடப்பவனுக்குச் சிறப்பு உண்டாகாது; இதனை, ''அ
வினையு மான்ற பொருளும் பிறவினையும், பெண்ணேவல் செய்வார்
ணில்,'' ''பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுனுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து,'' என்னுந் திருக்குறட் செய்யு
களா னுணர்க. (கஅ

இன்ன இன்ன குணங்களையுடையாள் மனைவி யென்பது

[நேரிசை வெண்பா]

அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்—வன்னமுறும்
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்.

(ப-ரை) பேசில்-(நற்குணமுடைய பெண்ணைப் பற்றி ஆரா
ந்து) கூறுமிடத்து, அன்னை தயையும் - (புருஷனிடத்து) அன்னை
யைப் போன்ற அன்பையும்; அடியாள் பணியும் - அடிமைப் பெண்
ணைப் போன்ற பணிவிடையும்; மலர் - தாமரைமலரில் வீற்றிரு
கின்ற, பொன்னின் - இலக்குமியைப் போன்ற, அழகும்-வனப்பும்
புவி - பூமியைப் போன்ற, பொறையும் - பொறுமையும்; வன்ன
உறும் - அழகு பொருந்திய, வேசி - பரத்தையைப் போன்ற, துயி
லும்-சயன வின்பத்தையும், விறல்-வெற்றி பொருந்திய, மந்திரி
அமைச்சனைப் போன்ற, மதியும்-அறிவும், (ஆகிய) இவை உடை
யாள்-இவைகளை யுடையவளே, பெண்-(இல்லற நடத்துதற் குரியவ
ளென்று சொல்லத்தக்க) பெண்ணுவாள்.

(வி - ரை) ஒருவனுக்கு மனைவியா யிருப்பவள் புருஷன்மீது தாயைப்போன்ற அன்புடையவளா யிருத்தல்வேண்டும்; அவனுக்கு அடிமைப்பெண்ணைப்போலச் சலியாது தொண்டு செய்யத்தக்கவளா யிருத்தல்வேண்டும்; அழகிலும் சிறந்தவளா யிருத்தல்வேண்டும்; மானிடர் தன்னை வெட்டியும், தோண்டியும், தன்மீது மலஜலமுதலிய கழித்தும் எத்தனையோ தகாச்செய்கைகள் புரியினும் அவர்களைத் தள்ளிவிடாமல் பொறுமையோடு தாங்கும் பூமியைப்போலப் பொறுமை யுடையவளாயு மிருத்தல்வேண்டும்; சயனகாலத்தில் விலைமாதைப்போல இதமாக நடந்து இனிமை செய்யக்கூடியவளா யிருத்தல்வேண்டும்; மந்திரியைப்போலச் சமயத்தில் புத்தி கூறத்தக்கவளாயு மிருத்தல்வேண்டும்; இங்ஙன மிருப்பின் இத்தகைய பெண்ணை மணந்தவன் நடத்தும் இல்லறமானது மிகவும் திருப்தியோடு நடைபெறும்; இவளும் எல்லோராலுங் கொண்டாடப்படுவாள். பூமி பொறுமையிற் சிறந்ததென்பது, "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை, யிகழ்வார்ப் பொறுத்த றலை," என்னும் வள்ளுவர் வாக்காலுணரப்படும். துயில் நித்திரை; இது இடக்கரடக்கலாய்க் குறிப்பால் நித்திரை செய்யுங்காலத்தி லேற்படும் இன்பத்தை யுணர்த்திற்று. ()

## தரித்திரனுக்கு மனைவியாகும் பெண்ணுக்கு மிகுந்த துன்பமெனல்

[கலி விருத்தம்]

அல்லலே பெண்ணெனப் பிறத்த லாங்கதி
னல்லலே யிளமையிற் சிறத்த லாங்கதி
னல்லலே கட்டழ குடைமை யாங்கதி
னல்லலே யிரவலர்ச் சார்பி னுருதல்.

(ப-ரை) பெண்ணெனப் பிறத்தல்-(உலகத்தில் எல்லாப் பிறப்புக்களுள்ளும்) பெண்ணாகப் பிறப்பது, அல்லலே - துன்பமேயாம்;

ஆங்கு - அவ்வாறு பிறந்தவிடத்து, இளமையில் - இளம் பருவத்தில், சிறத்தல்-சிறந்திருத்தல்(அதாவது, மங்கைப்பருவத்தை யடைந்திருத்தல்), அதின்-அவ்வாறு பெண்ணுகப் பிறப்பதிலும், அல்லலே மிகுந்த துன்பமேயாம்; ஆங்கு - அங்ஙனம் பருவமடைந்திருக்குமிடத்து, கட்டழகு உடைமை-பேரழகுடைத்தாயிருத்தல், அதின்-அவ்வாறு பருவமடைந்திருப்பதைக் காட்டினும், அல்லலே - மிக்க துன்பமேயாம்; ஆங்கு-அங்ஙனம் அழகைப் பெற்றிருக்குமிடத்து, இரவலர் - (யாசித்துண்டு ஜீவித்திருக்கும்) தரித்திரர்களுடைய, சார்பின்-பக்கத்தில், ஆகுதல்-(அவர்களுக்கு மனைவியாக) அமைதல், அதின்-அவ்வாறு அழகைப்பெற்றடையுந் துன்பத்தைக் காட்டினும், அல்லலே - மிக்க துன்பமேயாம்.

(வி-ரை) சுயேச்சையாக நடத்த லில்லாமையாலும், ஆடவரிடத்தடங்கி யிருத்தலானும், பிரசவவாதனை முதலிய துன்பங்களை யடைதலானும், எல்லாப் பிறப்புக்களுள்ளும் பெண்பிறப்பு மிக்க துன்ப முடையதாம்; அங்ஙனம் பிறப்போர் பருவ மடைந்தால் அக்காலத்தில் தம் கன்னித்தன்மை யழியாமற் கற்பைக் காப்பாற்றிக் கொள்ளும் விஷயத்திலும், தனக்குரிய நாயகன் தன்னைத் தேடி மணம் புரிய வரும் வரவை எதிர்பார்க்கும் விஷயத்திலும் அவளுக்கு மிக்க கவலை யேற்படு மாதலால் துன்பம் அதிகரிக்கும்; அதனோடு அவளுக்குப் பேரழகும் அமைந்திருந்தால் துர்ச்சனர் முதலியோரால் தீங்கு நேராமல் தன்னைப் ப்ரதுகாத்துக்கொள்ளும் விஷயத்தில் இன்னும் அதிகமான துன்ப முண்டாம்; அங்ஙனம் அழகைப் பெற்றுத் துன்பத்தை யடைதலோடு, செல்வ முடையோனுக்கு அவள் மனைவியாகாமல் தரித்திரனுக்கு மனைவியானால் அவளுக்கு இஷ்ட போகங்களை அனுபவிக்க ஏதுவில்லாமற்போகு மாதலால் தன் அழகு முதலியன வீணுக மனக்கவலை அதிகரித்து இன்னும் அளவிடற்கரிய துன்ப முண்டாம். ஆதலால், பெண்கள் முதலிற் கூறிய

மூவகையாலும் துன்பத்தை யடைந்தாலும் தனவந்தனுக்கு மனைவி யாகவேண்டும்; அங்ஙனமாயின் அவர்கள் அம் மூவகையாலும் ஏற் பட்ட துன்பம் நீங்கிச் சுகம் பெறுவார்கள். இச் செய்யுட் கருத்தால் பெண்ணைக் கொடுப்போர் தகுதியுடையவனுக்கே கொடுக்கவேண்டு மென்று துணியப்படும்.

'அல்லலே' என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் தேற்றப்பொருளன. அதின்' என்பவற்றிலுள்ள ஐந்தாம் வேற்றுமை இன்னுருபுகள் பண் பளவுப் பொருளன. (உ0)

## நற்குணமுடைய மனைவி, சற்புத்திரர் இவர்களின் உயர்வும், கல்வி, அறிவு இவற்றின் சிறப்பும்

[நேரிசை வெண்பா]

மனைக்கு விளக்க மடவாள் மடவாள்
தனக்குத் தகைசால் புதல்வர்—மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கங்
கோதிற் புகல்சா லுணர்வு.

(ப·ரை) ஓதின் - (அறிவுடையோர் ஆராய்ந்து) சொல்லுமிடத் து, மனைக்கு - (ஒருவனுடைய) வீட்டிற்கு, விளக்கம் - பிரகாசம், மடவாள் - (நற்குண நற்செய்கைகளையுடைய பெண்ணாகிய) மனைவி யேயாவள்; மடவாள் தனக்கு - (அம் மனைவியாகிய) பெண்ணுக்கு, விளக்கம் - (அவளைப் பிரகாசிக்கச்செய்யும்) தீபம், தகை சால் - நற் குணம் நிறைந்த, புதல்வர்-புத்திரர்களேயாவர்; மனக்கு இனிய-மனத் திற் கினிமையாகிய, காதல் - விருப்பத்தை யுடைய, புதல்வர்க்கு - அப் புத்திரர்களுக்கு, விளக்கம்-(அவர்களை விளக்கிக் காட்டுந்) தீபம், கல்வியே - சாஸ்திரப் பயிற்சியேயாம்; கல்விக்கு - அப் படிப்புக்கு, விளக்கம் - (அதனைப் பிரகாசிக்கச் செய்யுந்) தீபம், கோதில் - குற்ற மற்ற, புகழ் சால் - கீர்த்தி மிகுந்த, உணர்வு - (கல்வி கற்றதற்குத்தக நல்லொழுக்கங்களை யனுசரிக்கும்) அறிவேயாம் (என்க).

(வி-ரை) நற்குண நற்செய்கைகளையுடைய மனைவியால் ஒருவனுடைய இல்லச்சிறப்பு எங்கும் விளங்குமாதலின் அவள் அவ் வீட்டிற்கு விளக்கமாவள். நல்ல புத்திரர்களால் அவர்களுடைய தாய் சிறப்புற்று எங்கும் புகழுடன் விளங்குதற் கேதுவுண்டா மாதலின் அப் புத்திரர்கள் தாய்க்கு விளக்க மாவர். புத்திரர்களைக் கல்வியே எங்கும் பிரகாசிக்கச் செய்வதாதலின் அஃது அவர்களுக்கு விளக்கமாம். கல்வியைக் கற்றாலும் நல்லறிவிருந்தால் மாத்திரம் அக் கல்வி பிரகாசிக்குமாதலின் அக் கல்விக்கு அறிவே விளக்கமாம்.

விளக்கம் நான்கிடங்களினும் கூட்டப்பட்டது. 'விளக்கம்' என்பதில் ஈற்றிலுள்ள அம் சாரியை. 'மனத்துக்கு' என்பது 'மனக்கு' என அத்துச்சாரியை குறைந்து வந்தது. 'கல்விக்கங்கு' என்பதில் 'அங்கு' என்பது அசை. "அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளென்ப" (ந-இ-கஅ) என்னுஞ் சூத்திரப்படி யமைந்த ஆங்கு என்னும் அசையிடைச்சொல் இங்ஙனம் 'அங்கு' என முதல் குறுகி வந்தது. இவ்விடத்து 'அங்கு' என்பதற்கு வேறு பொரு ளின்மையால் இங்ஙனம் அஃது அசையெனக் கொள்ளப்பட்டது. 'ஓதின்' என்பதற்குத் தக' 'என்க' என்னுஞ் சொல் வருவித் துரைக்கப்பட்டது. (உக)

## கொடியவனுக்கு அரசளித்தால் அவன் கேடு செய்வானென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

துற்சனன் றனக்கு மேலாந்
துரைத்தனங் கொடுத்தா லென்றும்
சற்பனை துரோகங் கேடு
தரணியின் மிகவே செய்வான்
மற்கடந் தனக்கு நீண்ட
வாலிலே தேளுங் கொட்ட
உற்றிடங் கொள்ளி யிந்தா
லூரெலாங் கொளுத்து மன்றே.

(ப - ரை) மற்கடம் தனக்கு - (இயற்கையிலேயே பல சேஷ்டைகளைச் செய்யும்) குரங்குக்கு, நீண்ட - நீட்சி பொருந்திய, வாலிலே - வாலில், (இன்னும் அஃது அதிகமாகத் துள்ளும்படி) தேளும் கொட்ட - தேளுங் கொட்டிவிட, (அவ் வேதனையால் அது மிகவும் துள்ளும்போது) உற்று - மனம் பொருந்தி, இடம் - அதன் கையினிடத்தே, கொள்ளி ஈந்தால் - கொள்ளிக்கட்டையையும் எடுத்துக் கொடுத்துவிட்டால், (அஃது அக் கொள்ளிக்கட்டையோடு பல விடங்களிலும் தாவி) ஊர் எல்லாம்-ஊரையெல்லாம், கொளுத்தும் - (அக் கொள்ளிக்கட்டையை நீட்டிக்) கொளுத்திச் சுட்டெரிக்கும்; (அதுபோல) துற்சனன் தனக்கு - (இயற்கையிலேயே பல கொடுஞ் செய்கைகள் பொருந்தியிருக்கின்ற) துஷ்டனுக்கு, (மேலும் செருக்குண்டாக) மேலாம் - உயர்வாகிய, துரைத்தனம் - அதிகாரத்தையும், கொடுத்தால் - கொடுத்துவிட்டால், (அவன்) என்றும் - எப்பொழுதும், தரணியில் - இப் பூவுலகத்தில், (மனிதருக்கு) சற்பனை - சதி, துரோகம் - மற்றைய கொடும் பாவங்கள், கேடு-நஷ்டம், (ஆகியவைகளை) மிக - மிகுதியாக, செய்வான் - செய்து உலகத்தைக் கெடுப்பான்.

(வி - ரை) பிறப்பிலிருந்தே துஷ்ட செய்கைகள் பொருந்தியிருக்கின்ற குரங்குக்கு வாலில் தேள் கொட்டிவிட்டால் அஃது இன்னும் விசேஷமாகத் துள்ளிப் பல சேஷ்டைகளைச் செய்யும்; அத் தருணத்தில் அதன் கையில் கொள்ளிக்கட்டையையும் கொடுத்துவிடின் ஊரையெல்லாம் கொளுத்திவிடும். அதுபோல், துஷ்டனுக்கு அதிகாரங் கொடுத்தால் உலகினுக்குக் கேடு செய்வான்.(உஉ)

## பொய் அதிகமாகத் தங்கு மிடம்

[நேரிசை வெண்பா]

பூசாரி பொய்யும் புலவோ ருரைத்தபொய்யுங்
காசாசை வேசியர்கள் கற்றபொய்யும்—கூசாமல்

தட்டா ருரைத்தபொய்யுஞ் சவளிக் கடைப்பொய்க்குக்
கட்டாவே கால்வாசி காண.

(ப - ரை) பூசாரி பொய்யும் - கோவிலில் பூஜை செய்யும் பூசாரிகள் சொல்லும் பொய்யும்; புலவோர் - போலிப் புலவர்கள், உரைத்த - கூறிய, பொய்யும் - புரட்டும்; காசு ஆசை - பண விருப்புடைய, வேசியர்கள்-பரத்தையர், கற்ற-படித்த, பொய்யும்-புரட்டும்; கூசாமல் - (சிறிதும் மனங்) கூசாமல், தட்டார் - கம்மாளர், உரைத்த - சொல்லிய, பொய்யும் - புரட்டும்; சவளிக்கடைப் பொய்க்கு - புடைவைக்கடைக்காரர்கள் கூறும் புரட்டுக்கு, கால்வாசி - கால் பங்கும், கட்டா - (இணையாய்ப்) பொருந்தமாட்டா.

(வி - ரை) கோவிற் பூசாரிகள் அர்ச்சனை முதலியன செய்வதாக ஒப்புக்கொண்டு பக்தர்களிடம் பணம் வாங்கி அவ்விதம் செய்யாமல் எல்லாவற்றையும் சரிவர நடத்திவிட்டதாகப் பொய் சொல்வது இயற்கை. கல்வி நிரம்புதலில்லாமல் புலவர்களைப்போல நடித்துத் திரியும் போலிக் கவிஞர், தங்கள் நடிப்புத் தொழிற்கேற்பப் பலரிடத்தும் பொய் வார்த்தைகளையே கூறித் திரிவர். வேசிகள், தம்மை விரும்பி வந்தோரை மயக்குதற்பொருட்டு அளவற்ற பொய்களைக் கூறுவர். தட்டார், தங்களிடம் ஏழைகள் நகைசெய்யக் கொடுத்த பொன் முதலியவற்றை அபகரித்துக்கொண்டு அவர்களை ஏமாற்றவேண்டி இடைவிடாது பொய்ம்மொழிகளையே கூறுவது வழக்கம். புடைவைக்கடைக்காரர்கள் அழுத்தமற்ற துணியை அழுத்தமுடையதென்றும், சாயம் போகுந் துணியைப் போகாததென்றும், குறைந்த விலையுள்ளதை உயர்ந்த விலையுள்ளதென்றும் பலவிதமான பொய்களைக் கூறி மனிதரை ஏமாற்றுவது வழக்கம். மற்றவர் பொய்களெல்லாம் புடைவைக்கடைக்காரர்கள் கூறும் பொய்யில் காற்பங்குக்கும் இணையாகாவெனவே இவர்கள் பொய் அளவற்றதென்றதாயிற்று.

கடை - ஆகுபெயராய்க் கடையிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. கான் - அசை. (உ௬)

## அறிவுடையோர் செய்யும் ஆண்மைக் குணங்கள்

[கட்டளைக் கலித்துறை]

மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியோ டாசாரங் கல்வி நயந்தவர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய்கோளுக்குக்கோளறிவி
லாதர்க் கிரட்டிப் பறிவுடை யோர்செய்யு மாண்மைகளே.

(ப-ரை) மாதர்க்கு - பெண்களுக்கு, இதம் - இனிமையான செய்கைகளைச் செய்தலும்; கவிவாணர்க்கு - வித்வான்களுக்கு, சால - மிகுதியாக, வணக்கம் - வணக்கத்தைச் செய்தலும்; குருநாதர்க்கு - ஆசிரியர்களுக்கு, நீதியோடு-ஒழுங்கோடு, ஆசாரம் - வழிபாடு செய்தலும்; கல்வி - வித்தையை, நயந்தவர்க்கு - விரும்பிக் கற்கும் மாணுக்கருக்கு, கோது அற்ற-குற்றமற்ற, வாசகம் - வார்த்தைகளைக் கூறிக் கல்வி கற்றுக்கொடுத்தலும்; பொய்க்கு - துன்மார்க்கர் கூறும் பொய் வார்த்தைகளுக்கு, (எதிராக) பொய்-பொய்யைக் கூறுதலும்; கோளுக்கு - பழிமொழிக்கு, கோள் - பழிமொழியே கூறுதலும்; அறிவிலாதார்க்கு - புத்தியில்லாதவர்களுக்கெதிரில், இரட்டிப்பு - (அவர்களைப்போன்ற அறிவில்லாத்தன்மை) இரண்டு பங்கு அதிகமாக நடத்தலும், (ஆகிய இவைகள்) அறிவுடையோர் - விவேகிகள், செய்யும் - இவ் வுலகத்தில் நடத்தும், ஆண்மைகள்-ஆண்மைச் செய்கைகளாம்.

(வி-ரை) பெண்களுக் கிதஞ் செய்யின் அவர்கள் மனமகிழ்ச்சியோடு இல்லற நடத்திக் கணவருக் கின்பத்தைச் செய்வார்கள்; அவர்களைக் கடினமாக நடத்தினல் அவர்கள் வெறுப்படைந்து மாறு

பாடாக நடந்து கணவனுக்குக் கவலையையே உண்டாக்கிக்கொண்டிருப்பார்கள். வித்துவான்களிடத்தில் வணக்கத்தைக் காட்டினால் அவர்கள் துதித்துப் பாடுவார்கள்; அதனால் நன்மை யுண்டாகும். ஆசிரியர்க்கு வழிபாடு செய்யின் அவர்கள் மகிழ்ந்து வித்தைகளை விளக்கமாகக் கற்றுக்கொடுப்பார்கள். கல்வியை விரும்பும் மாணவர்களுக்குக் குற்றமற்ற வார்த்தைகளைக் கூறிக் கல்விக் கற்றுக்கொடுத்தால் அவர்கள் ஆசிரியரிடத்து விசுவாசத்துடன் நடந்துகொள்வார்கள். பொய் கூறுவோனிடத்தில் பொய்யே கூறவேண்டும்; அங்ஙனமின்றி மெய் கூறினால் அவனுக்கு அது திருப்தியாயிராது. கோட் சொல்லுவோனிடத்தில் கோளே கூறவேண்டும்; அங்ஙனம் கூறினால்மாத்திரம் அவனால் நன்மை யுண்டாகும். இவ்விதம் நடப்பது அறிவுடையோர் செய்கையாகும்.

இதம், வணக்கம் முதலியவற்றில் செய்தல் முதலிய சொற்கள் இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. 'அறிவிலாதார்' என்பது 'அறிவிலாதர்' எனத் தகரங் குறுகி வந்தது. எ-ஈற்றசை. பொய்-நடக்காததை நடந்ததாக ஒரு காரணமு மின்றிக் கூறுவது. கோள் - விரோதங் காரணமாக ஒருவன்மீது பழிமொழி கூறுவது. இவையே இவ் விரண்டிற்கும் வேறுபாடாம். (உ௪)

## கல்வி கற்கத் தகாத திதிகள்
[நேரிசை வெண்பா]

அட்டமியி லோதினா லாசானுக் காகாது
சிட்டருக்குப் பன்னான்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையிற்
பித்தரும் பேசார் பிழை.

(ப - ரை) அட்டமியில் - எட்டாவது திதியாகிய அஷ்டமியிலே, ஓதினால் - (வேதசாஸ்திர பாடங்களை ஆசிரியன் மாணாக்

னுக்குச்) சொல்லத் தொடங்கினல், (அத் திதியின் பலனுனது) ஆசானுக்கு - அப் பாடத்தைச் சொல்லும் குருவுக்கு, ஆகாது-கெட்டதாய் முடியும்; பன்னுன்கு - பதினன்காந் திதியாகிய சதுர்த்தசியில், ஓதினல்-அப் பாடங்களைச் சொன்னல், (அத் திதியின் பலனல்) சிட்டருக்கு-தொண்டராகிய மாணுக்கருக்கு, தீது ஆகும்-கேடுண்டாகும்; கெட்ட - தீமை யுடையதாகிய, உவா - பூரணை அல்லது அமாவாசியில், ஓதினல் - பாடஞ் சொன்னல், (அத் திதியின் பலனல்) வித்தைக்கு - கல்விக்கு, நாசம் ஆம் - கேடுண்டாகும்; வெய்ய - வெவ்வியதாகிய, பிரதமையில் - முதற்றிதியாகிய பிரதமையிலே, ஓதினல் - பாடஞ் சொன்னல், (அத் திதியின் பலனல்) பிழை - குற்ற முண்டாம்; (ஆதலால், இத் திதிகளில்) பித்தரும் - பயித்தியம் பிடித்தவரும், பேசார் - (மாணுக்கருக்குப்) பாடஞ் சொல்லமாட்டார்.

(வி-ரை) அட்டமியும், சதுர்த்தசியும், பூரணை அமாவாசிகளும் பிரதமையும் வித்தியாரம்பஞ் செய்வதற்கு ஆகாத் திதிகளாம். ஆதலின், இத் திதிகளை யொழித்து வேறு நற்றினங்களில் வித்தியாப்பியாசஞ் செய்தல் நலமாம்.

ஓதினல் என்பது மற்றைய மூன்றிடங்களிலும் கூட்டப்பட்டது. 'ஆகாதது' என்பது 'ஆகாது' எனத் தொகுத்தலாயிற்று. 'வெய்ய' என்பதில் வெம்மையின்மை விகுதி போய் மகரமெய் யகரமெய்யாகத் திரிந்தது. 'பிழை' என்பதன் பின், 'உண்டாம்' என்னுஞ் சொல் வருவித் துரைக்கப்பட்டது. (உரு)

## இன்னவர் இன்னவர் பிதாக்களெனல்

[நேரிசை வெண்பா]

பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக் கொடுத்தோன்
சிறப்பி னுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தி லன்னம் படைத்தோன் பயந்தீர்த்தோன்
எஞ்சாப் பிதாக்களென வெண்.

(ப - ரை) (மனமே!) பிறப்பித்தோன் - (மிக்க தவத்தை செய்து ஒரு மனிதனைத் தனக்குப் புத்திரனாகப்) பிறக்கும்படி செய் வனையும்; வித்தைதனை - கல்வியை, பேணி - விரும்பி, கொடு தோன் - (அவனுக்குக்) கற்றுக்கொடுத்த ஆசிரியனையும்; சிறப்பின் சிறப்போடு, உபதேசம் செய்தோன் - மந்திரோபதேசஞ் செய்த ஞா சிரியனையும்; அறப் பெரிய - மிகவும் பெரியதாகிய, பஞ்சத்தில் கருப்புக்காலத்தில், அன்னம் படைத்தோன் - அன்னமிட்டுக் கா பாற்றியவனையும்; பயம் தீர்த்தோன் - வந்த பயத்தை நீக்கித் தைரி முண்டாக்கியவனையும்; (அம் மனிதனுக்கு) எஞ்சா - குறையா பிதாக்கள் என - தந்தைகள் என்று, எண் - நீ கருதக்கடவை.

(வி - ரை) 'எண்' என்னும் ஏவலுக்குத் தக, 'மனமே' என் னும் விளி வருவித் துரைக்கப்பட்டது. வித்தை கற்றுக்கொடு தோன், மந்திரோபதேசஞ் செய்தோன், பஞ்சத்தி லன்னங் கொடு தோன், பயந் தீர்த்தோன் ஆகியவர்களும் பிதாவைப்போலவே அன் புடையவர்களாதலின் அவர்களும் பிதாக்களே யாவர். ஒவ்வொரு ரும் தம்தம் மனத்தை நோக்கிச் சொல்லி இத்தகையரைப் பிதாக் ளாகக் கொள்ளவேண்டுமென்பதுபற்றியே இக் கவி செய்தோர் இ செய்யுளை மனத்தை நோக்கிக் கூறுவதாக இயற்றினர். (உசு

### நூலைக் கற்பினும் அந்நூன் முறைப்படி நடத்த லருமை யென்பது

[நேரிசை வெண்பா]

எழுதரிது முன்ன மெழுதியபின் னத்தைப்
பழுதறவா சிப்பரிது பண்பா—முழுதுமதைக்
கற்பரிது நற்பயனைக் காண்பரிது கண்டக்கால்
நிற்பரிது தானந் நிலை.

(ப - ரை) முன்னம் - முன்னே, எழுதுதல் - (ஒரு நூலை யாவர்க்கும் பயன்படுமாறு ஒருவர்) எழுதிவைத்தல், அரிது - அருமையாம்; எழுதிய பின் - (அங்ஙனம் எழுதிய பின்னர், அத்தை - அந்நூலை, பழுது அற - குற்றம் நீங்க, வாசிப்பு - (ஒருவர்) படித்தல், அரிது - அருமையாம்; (அங்ஙனம் வாசிப்பினும்) பண்பா - விருப்பமாக, அதை - அதனை, (இடையில் விட்டுவிடாமல்) முழுதும் - எல்லாம் (சரிவர), கற்பு - (மனப்பாடஞ் செய்து முறைப்படி) கற்றுக்கொள்ளுதல், அரிது - அருமையாம்; (அங்ஙனங் கற்றாலும்) நல்-நல்ல, பயனை-பொருளை, காண்பு - காணுதல், அரிது - அருமையாம்; கண்டக்கால் - (அங்ஙனம் பொருளைச்) காணினும், அந்நிலை - அந் நூற்கருத்தின் உறுதியான நிலையிலே, நிற்பு - நின்று அதன் வழியில் நடத்தல், அரிது - மிகவும் அருமையாம்.

(வி-ரை) ஒருவர் ஒருநூலை வாசித்துணர்ந்தாலும் அதிற் கூறப்படும் சன்மார்க்கத்தில் நிற்றல் அருமையாமென்பது இதன் கருத்து. இதனால், நற்குணங்களைக் கடைப்பிடித் தொழுகாதோர் எத்துணை நூற்களைக் கற்பினும் பயனில்லை யென்பது பெறப்படுகின்றது. "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக," என்னுந் திருக்குறளானு மிஃதுணரப்படும். இக்கருத்துணராத அறிவிலிகள் சிலர், நூற்களைக் கற்றிருப்பினும் நடுநிலைமை, பொறை முதலிய நற்குணங்களைக் கைவிட்டுத் தமக்குப் பொருளீவோர் எத்தகையராயினும் அவரைமட்டும் புகழ்ந்து, நல்லன கூறும் பெரியோரை யிகழ்ந்து திரிவர்.

எழுதுதல் என்னுந் தொழிற்பெயர் தல் விகுதி கெட்டு முதனிலைத் தொழிற்பெயராய் 'எழுது' என நின்றது. முன்னம்-இதில் அம் சாரியை. அதை என்பது 'அத்தை' என வல்லொற்று விரிந்து விகாரப்பட்டது. வாசிப்பு, கற்பு, காண்பு, நிற்பு என்பன தொழிற்

பெயர்கள். இவற்றின் ஈற்றிலுள்ள பு - தொழிற்பெயர் விகுதி
தான் - அசை. (உஎ)

## கைக்கோலின் பிரயோசனங்கள்

[நேரிசை வெண்பா]

முனியதட்டு முட்டேக்கு முன்னீ ரளக்கும்
கனியுதிர்க்குங் கவ்வுநாய் காக்கும்—தனிவழிக்குப்
பத்திரம தாக்கும் பயந்தீர்க்கும் பாம்படிக்கும்
கைத்தலத்திற் றண்டிருந்தக் கால்.

(ப-ரை) கைத்தலத்தில் - (ஒருவனுடைய) கரத்தினிடத்தில், தண்டு இருந்தக்கால் - கோல் (ஒன்று எப்போதும்) இருக்குமே யானல் (அது) முனி-(எதிர்ப்பட்ட) முனியை, அதட்டும்-அதட்டி யோட்டுதற் குதவியாயிருக்கும்; முள்-வழியிற் கிடக்கும் முட்களை தூக்கும்-தூக்கி அப்புறத்தெறியும்; முன் - தனக்கெதிரில் குறுக் கிடும், நீர் - ஜலத்தை, அளக்கும் - (இவ்வளவு ஆழமுடைத்தா யிருக் கின்றதென) அளந்து காட்டிச் சந்தேகத்தை நீக்கும்; கனி உதிர்க் கும் - எட்டாத மரங்களிலுள்ள இனிய கனிகளைப் புசிக்கும்படி உதிர்த்துக் கொடுக்கும்; கவ்வும் - கடிக்கின்ற, நாய் - நாயை, காக் கும் - (கடிக்கவொட்டாமல் அடித்துத் துரத்திக்) காவல் புரியும்; தனி வழிக்கு - தனியே செல்லும் வழிப் பயணத்திற்கு, பத்திரமது ஆக்கும் - (உதவியாயிருந்து) நன்மையை உண்டாக்கும்; பயம்-(தனி யே செல்லும்போ துண்டாகும்) அச்சத்தை, தீர்க்கும் - நீக்கும்; பாம்பு அடிக்கும்-தனக்கபாயஞ் செய்ய வரும்) பாம்புகளை யடித்துக் கொன்று நாசமாக்கும்.

(வி - ரை) ஒருவன் கையில் ஒரு கோலிருக்குமெனில், எதிர்ப் படும் முனியைத் துரத்தியும், முட்களைத் தூக்கி யெறிந்தும், நீரின் ஆழத்தை அளந்து காட்டியும், இனிய பழங்களை உதிர்த்துக் கொடுத்

றும், கடிக்க வரும் நாயை அகற்றியும், வழித் துணையாகியும், அச்சத்தை நீக்கியும், விஷப் பாம்புகளை யடித்துக் கொன்றும் மிக்க உதவி புரியுமாதலின், தங்களுக்கு வரும் ஆபத்துக்களினின்றும் நீங்கிக்கொள்ள விருப்பமுடைய ஒவ்வொருவரும் கையில் ஒரு கோல் வைத்துக் கொள்ளுதல் அவசியமாம். மனிதராற் செய்யப்படும் ஒவ்வொரு செய்கைக்கும் கோல் உதவியாதல்பற்றி இங்கு அதனுதவிகொண்டு செய்யப்படும் மனிதன் செய்கைகளெல்லாம் அக்கோலின் செய்கைகளாகக் கூறப்பட்டன.

பத்திரமது - இதில் அது சாரியை. (உ௮)

## குடையின் பிரயோசனங்கள்

[நேரிசை வெண்பா]

பகலோன் றெறுங்கிரணம் பாய்பறவை யெச்சம்
மிகமே லுறாதகற்றும் விண்ணின்—முகிலதனுல்
பெய்யுமழை யைத்தடுக்கும் பேரழகு மாமொருவன்
கையிற் குடையிருந்தக் கால்.

(ப - ரை) ஒருவன் - ஒரு மனிதனுடைய, கையில் - கரத்தில், குடை இருந்தக்கால்-ஒரு குடை யிருக்குமேயானுல் (அது) தெறும்-வெதுப்பித் தேகத்தி னழகை) அழிக்கின்ற, பகலோன்-சூரியனது, கிரணம்-வெப்பத்தையும், பாய்-(ஆகாயத்திற்) பறக்கின்ற, பறவை - பட்சிகளின், எச்சம்-(மலமூத்திர முதலிய) எச்சங்களையும், மேல் - தேகத்தின்மீது, மிக - மிகுதியாக, உறாது - பொருந்தி விழாதபடி, அகற்றும் - (தான் தாங்கி) நீக்கும்; விண்ணின்-ஆகாயத்தில் நிறைந்திருக்கின்ற, முகில் அதனுல் - மேகத்தினுல், பெய்யும் - சொரியப்படும், மழையை - மாரியையும், தடுக்கும் - தேகத்தில் விழாதபடி தடைசெய்து காக்கும்; பேர் - பெரிய, அழகும் ஆம் - அழகு முண்டாகும்.

(வி-ரை) ஒருவன் கையிற் குடையிருந்தால் அது மேற்கூறி இடர்களை நீக்குதலோடு அழகையுஞ் செய்யுமாதலால் அதனை ஒ வொருவரும் அவசியங் கைக்கொள்ளவேண்டும். (உ

## பாதரட்சையின் பிரயோசனங்கள்

[நேரிசை வெண்பா]

கல்லு முறுத்தாது காலின்முட் டையாது
எல்லைமார்த் தாண்டன்சூ டேறாது—தொல்லைவரு
மாலை யிருளில் வழிநடக்கக் கூசாது
காலிற் செருப்பிருந்தக் கால்.

(ப-ரை) காலில்-ஒருவனுடைய பாதங்களில், செருப்பு இரு தக்கால்-பாதரட்சை யிருக்குமேயானால், கல்லும் - (வழியிற் கிட கும்) பாறகல்லும், உறுத்தாது-உறுத்தி வருத்தமாட்டாது; காலின் அடியில், முள்-முள்ளானது, தையாது - பாய்ந்து வருத்தமாட்டாது எல்லை - பகற்பொழுதில், மார்த்தாண்டன்-சூரியனது, சூடு-வெப் மானது, ஏறாது-பாதங்களின் வழியாகத் தேகத்தி லேறமாட்டாது தொல்லை வரும் - துன்பங்கள் வரக்கூடிய, மாலை - மாலைக்காலத் லும், இருளில் - இரவிலும், வழி நடக்க - வழியில் நடந்து செல் கூசாது-பாதங் கூசமாட்டாது.

(வி-ரை) செருப்பானது பல விதத்திலும் நன்மையைத் தா கூடியதா யிருத்தலால் வழிச்செல்வோர் அதனை அவசியம் தரித்து கொள்ளவேண்டும்.

கல்லும் என்பதில் உம்மை எதிரது தழுவியது. "ளவே றமையிற் றடவு மல்வழி, யவற்றோ டுறழ்வும் வலிவரினும்,... என்ற (ந. மெ. பு. உச.) சூத்திர விதிப்படி முள் என்பதனீற் ளகரம் வலிவர டகரமாகத் திரிந்தது. மாலை யிருளில் என்பதி

ஏழாம்வேற்றுமை யுருபும் உம்மையும் தொக்கன. வழி நடக்க என்பதில் இல்லுருபு தொக்கது. (௩௦)

## வறுமையின் கொடுமை

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

தரித்திர மிக்க வனப்பினை யொடுக்கிச்
சரீரத்தை யுலர்தர வாட்டும்;
தரித்திர மளவாச் சோம்பலை யெழுப்புஞ்
சாற்றரு முலோபத்தை மிகுக்கும்
தரித்திரந் தலைவன் றலைவியர்க் கிடையே
தடுப்பருங் கலாம்பல விளைக்கும்
தரித்திர மவமா னம்பொய்பே ராசை
தருமிதிற் கொடியதொன் றிலையே.

(ப-ரை) தரித்திரம் - வறுமையானது, (ஒருவனுடைய) மிக்க-மிகுந்த, வனப்பினை - அழகையெல்லாம், ஒடுக்கி - கெடுத்து, சரீரத்தை - தேகத்தை, உலர்தர-காயும்படி, வாட்டும்-வாடச்செய்யும்; தரித்திரம்—, அளவா - அளவிடக்கூடாத, சோம்பலை - சுறுசுறுப்பின்மையை, எழுப்பும்-உண்டாக்கும்; சாற்றரும் - சொல்லுதற்கரிய, உலோபத்தை - ஈயாமையை, மிகுக்கும் - மிகும்படிச் செய்யும்; தரித்திரம்—, தலைவன் தலைவியர்க்கு - நாயகன் நாயகி ஆகிய இருவர்க்கும், இடையே - இடையில், தடுப்பு அரும் - நீக்குதற்கரிய, பல கலாம் - பலவிதமான பிணக்குக்களை, விளைக்கும் - உண்டாக்குவிக்கும்; தரித்திரம்—, அவமானம் - மானக்கேட்டையும் பொய் - பொய்கூறுதலையும், பேராசை - பேராசைக் குணத்தையும், தரும் - உண்டாக்கும்; (ஆதலால்) இதின் - இதைக்காட்டினும், கொடியது ஒன்று-கொடியதாகிய ஒன்று, இல்லை - (இவ் வுலகத்தில்) இல்லை.

(வி-ரை) ஒருவனுக்கு வறுமை அதிகப்படின் நல்ல உணவு முதலியன கிடைக்கப் பெறுமையினாலே அவன் தேகம் மெலிய

அதனால் அழகு கெடும்; தொழில் முதலியன செய்தற் கேது வில்லாமற் போவதனாலே சோம்பல் மிகும்; கொடுத்தற்கொன்று மில்லாமற் போவதனாலே உலோபத்தன்மை அதிகரிக்கும்; இன்னும் அவனுடைய மனைவி ஆடை யாபரணம் முதலியவற்றை விரும்பியவண்ண மணிந்து சந்தோஷித்தற் கிடமில்லாமற் போவதனாலே அவள் வெறுத்துப் பேச எந்நேரமும் வீட்டில் மனஸ்தாபம் நிகழ்ந்துகொண்டே யிருக்கும்; அன்றியும், அத் தரித்திரமுடையவன் பலரிடத்தும் தன் குறையைச் சொல்வதாலும், ஜீவனத்தின் பொருட்டுச் செய்யத் தகாத காரியங்களைச் செய்வதாலும் மானக்கேடு முண்டாகும்; பின்னும் அவன் பிறரிடத்துப் பொருள் பெறவேண்டிப் பல பொய்களையுங் கூறுவன்; எதையும் அனுபவிக்கப் பெறுமையினாலே எதனிடத்தும் அவன் பேராசை கொள்வான். இவற்றிற் கெல்லாங் காரணம் அவ் வறுமையின் கொடுமையேயாம். முடிவாகக் கூறமிடத்துப் பொருளற்ற தரித்திரனுக்கு இவ் வுலகத்தில் ஒரு சுகமு மில்லையாம்; "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில் லார்க், கிவ்வுலக மில்லா தியாங்கு" என்னும் திருக்குறட் செய்யுளால் இவ் வுண்மை யுணரப்படும்.

சாற்று-ஈறுகெட்ட தொழிற்பெயர். தடுப்பு - தொழிற்பெயர். இதின் என்பதிலுள்ள ஐந்தாம் வேற்றுமை இன்னுருபு பண்பளவுப் பொருளது. (௩க)

இதுவுமது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

தரித்திரங் களிப்பாங் கடனுக்கோர் வடவை
சாற்றுமெண் ணங்கள்வா ழிடமாம்
தரித்திரம் பற்ப றுக்கமுந் தோன்றத்
தக்கபே ராகர மென்ப

தரித்திர நன்மை சாலொழுங் கென்னுந்
தழைவனந் தனக்கழ லெனலாந்
தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிதத்
தகையதை யொழித்தனன் றாமே.

(பா-ரை) தரித்திரம்-வறுமையானது, (ஒருவனுடைய) களிப்பாம் - சந்தோஷமென்கிற, கடலுக்கு - சமுத்திரத்திற்கு, (அதனை மிகாமல் அடக்கத்தக்க) ஓர் - ஒப்பற்ற, வடவை ஆம் - வடவாமுகாக்கினியாகும்; சாற்றும் - சொல்லப்பட்ட, எண்ணங்கள்-பலவிதமான துராலோசனைகள், வாழ் இடமாம் - பொருந்தி வசிக்கின்ற ஸ்தானமாம்; (அன்றியும்) தரித்திரம்—, பல பல-அநேகமான, துக்கமும்-துன்பங்களும், தோன்றத்தக்க-உண்டாகத்தக்க, பேர் - பெரிய, ஆகரம் என்ப-இடமென்று கூறுவர் பெரியோர்; தரித்திரம்—, நன்மைசால் - நன்மை மிகுந்த, ஒழுங்கு என்னும் - ஒழுக்கமென்கின்ற, தழை - செழித்த, வனம் தனக்கு - வனத்திற்கு, (அதனை எரித்தழிக்கத்தக்க) அழல் என்னலாம் - காட்டுத்தீ யென்றுஞ் சொல்லலாம்; இன்னும் தரித்திரம்—, கொடிய-தீயனவாகிய, எவற்றினும்-எவைகளினும், கொடிது-மிகத் தீயதாம்; (ஆதலின்) அத்தகையதை-அத்தன்மையையுடைய அத் தரித்திரத்தை, ஒழித்தல்-விடாமுயற்சிகளைச் செய்து நீக்கிவிடுதல், நன்றும் - நன்மையாம்.

(வி - ரை) ஊழிக்காலத்தில் பிரளய வெள்ளத்தையும் வறளச்செய்கின்ற வடவைத்தீப்போலத் தரித்திரமானது மிகுந்த சந்தோஷத்தை நாசஞ் செய்யக்கூடியதாதலால் அது, 'களிப்பாங் கடலுக்கோர் வடவை' என்று கூறப்பட்டது. இன்னும் தரித்திரம் வந்தவுடனே பொருளில்லாக் கஷ்டத்தால் மனிதரை எண்ணாத எண்ணங்களை யெல்லா மெண்ணச் செய்யுமாதலால் அது பல எண்ணங்கள் வாழுதற் கிருப்பிடமுமாம். அன்றியும், பல துன்பங்களை யெல்லாம் விளைவிப்பதால் அவற்றிற்கு முறைவிடமாம்; இன்னும் அத் தரித்

திரமானது தான் பற்றியவரிடத்துள்ள ஒழுக்கங்களை யெல்லாம் கெடுக்குமாதலின், 'ஒழுங்கென்னும், தழைவளந் தனக்கு அழ லென்னலாம்' என்றுங் கூறப்பட்டது. உலகத்தில் துன்பங்களி லெல்லாம் பெரிய துன்பம் தரித்திரமே யாதலால், அது, 'எவற்றி னுங் கொடிது' என்றும் கூறப்பட்டது.

"பல சில வெனுமிவை தம்முன் றாம்வரின், இயல்பு மிகலு மகர மேக, லகரம் றகர மாகலும் பிறவரின், அகரம் விகற்ப மாகலு முளபிற," என்ற (ந-உயி-பு. உ0) சூத்திர விதியால் 'பல பல' என்னுஞ் சொற்றொடர் 'பற்பல,' என்றாய், விகாரத்தால் ஈற்றகரங் கெட்டு, "குறில்செறி யாலள..." (ந-மெ-பு-உசு) சூத்திர விதிப்படி துகரம் வந்து றகரமாகத் திரிய அவ்வீற்று லகரமும் கெட்டு, 'பற்ப றுன்பம்' என்றாயது. 'வனந்தனக்கு,' என்பதில், தன், அ - சாரியை கள். மேற் காட்டிய சூத்திர விதிப்படியே 'ஒழித்தல்' என்பத னீற்றி லுள்ள லகரம், நகரம் வந்து னகரமாகத் திரியக் கெட்டது. (கஉ)

## வறுமையுடையோன் மன்னர் முதலியோரால் மதிக்கப்படா னென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

கோதறு கல்வி சாலூர்க் குடியிருந் தறியா னேனும்
ஓதருஞ் செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னவன்
காதலின் வேத முன்னுங் கலைகள்கற் றுணர்ந்தா னேனுந்
தீதமை மிடிய னுயிற் சிறந்திடான் வேத்த வைக்கே.

(ப-ரை) ஓதரும்-அளவிட் டுரைத்தற்கரிய, செல்வ மிக்கோன்-இசுவரியத்தால் மிகுந்தவன், கோது அறு - குற்றமற்ற, கல்வி சால் சாஸ்திரப் பயிற்சி நிறைந்த, ஊர் - ஊரில், குடியிருந்து இல்வாழ்க் கையாகவிருந்து, அறியானேனும் - அறியானாயினும், (படிப்பென் பது இன்னதென் றறியானாயினும்) வேத்தவைக்கு - இராஜ சபை யில், ஒருவனே - அச் செல்வமுடையோ னொருவன் மாத்திரமே,

சிறந்தோன் ஆவான் - சிறப்புடையனாவான்; (ஒருவன்) காதலின் - (தனக்கேற்பட்ட) விருப்பத்தாலே, வேதம் மூன்றும் - வேதங்கள் முதலாகும், கலைகள் - அறுபத்துநான்கு கலைஞானங்களையும், கற்று உணர்ந்தானேனும் - படித்தறிந்தானாயினும், தீது அமை - தீங்கு பொருந்திய, மிடியன் ஆயின் - வறுமை யுடையவனானால், (அவன்) வேத்தவைக்கு - இராஜ சபையில், சிறந்திடான் - சிறப்படையமாட்டான்.

(வி - ரை) உலகத்தில் ஒரு மனிதன் கல்வியறிவில்லாதவனாயிருந்தாலும் செல்வமிக்கோனாயிருந்தால் அவன் அரசர் முதலிய எல்லோராலும் சிறந்த வித்வான்போலவே கொண்டாடப்படுவான். செல்வச் சிறப்பில்லாதவன் எவ்வளவு சாஸ்திரங்களைக் கற்றிருந்தபோதிலும் அவன் எவ்விடத்தும் மதிக்கப்படமாட்டான். அவன் கல்வியும் உயர்வாகக் கொள்ளப்படமாட்டாது. கற்றுணர்ந்த சில வித்வான்களுங்கூடப் பொருளையே பெரிதாகக் கருதிப் பொருளுடையோர் எத்தகைய துர்ச்செய்கையை யுடையவராயிருந்தாலும், கல்வியறிவில்லாதவராயிருந்தாலும் அவர்களிடமிருந்து ஏதேனும் கைப்பற்றலாமென்ற கருத்தால் அவர்களையே புகழ்ந்தும், அவர்களை இகழும் அறிவுடையோரைத் தாமிகழ்ந்தும், கற்றோர் செல்வமற்றோராயிருப்பின் அவரை மதியாமலு மிருப்பதை அனுபவத்திற் காணலாம். இவ்வித செய்கைகள் கூடாவென்பதையும், கல்வியுடையோர் வறுமையுடையோராயினும் அவரையே மதிக்கவேண்டுமென்பதையும் உணர்த்துதற்பொருட்டே இச் செய்யுள் ஏற்பட்டதாம். "விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும், விரணிறைய மோதிரங்கள் வேண்டும்-அரையதனிற், பஞ்சேனும் பட்டேனும் வேண்டு மவர்க்கு இதை, நஞ்சேனும் வேம்பேனு நன்று," என்ற செய்யுளால் ஔவையும் இக்கருத்தை விளக்கிக் காட்டியிருத்தல் காண்க. இக் கருத்தை நோக்கி நியாயமாக மதிக்கத்தக்கவரை மதித்தலே மனிதர்க்குச் சிறப்புடைத்தாம்.

'ஓதுதல் அரும்' என்பது தல் விகுதி கெட்டு, 'ஓதரும்' என்றாயது. செல்வ மிக்கோன்-மூன்றும் வேற்றுமைத் தொகை; இதில் ஆலுருபும் அத்துச்சாரியையுந் தொக்கன. ஊர்க்குடி - ஏழாம் வேற்றுமைத்தொகை. 'வேந்தவைக்கு' என்பது 'வேத்தவைக்கு' என வலித்தல் விகாரம் பெற்றது. இது 'அவையில்' என்பது, அவைக்கு' என வந்தது உருபுமயக்கம். இஃதிரண்டிடத்திற்கும் கூட்டப் பட்டது. 'காதலால்' என வரவேண்டிய மூன்றும் வேற்றுமை, 'காதலின்' என வந்ததும் உருபுமயக்கம்; "யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்," என்பது விதி, 'வேதங்கள்' என்னும் பன்மைச்சொல் சாதி யொருமைபற்றி 'வேதம்' என வந்தது. வேதங்கள் நான்காவன:—இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்பனவாம். கலைகள் அறுபத்து நான்காவன:—அக்ஷரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், சோதிடசாஸ்திரம், தருமசாஸ்திரம், யோகசாஸ்திரம், மந்திரசாஸ்திரம், சகுனசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், வைத்தியசாஸ்திரம், உருவசாஸ்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அஸ்திரபரீக்ஷை கனகபரீக்ஷை, இரதபரீக்ஷை, கஜபரீக்ஷை, அசுவபரீக்ஷை, இரத்தினபரீக்ஷை, பூமிபரீக்ஷை, சங்கிராமவிலக்கணம், மல்யுத்தம், ஆகருஷணம், உச்சாடனம், வித்துவேடணம், மதனசாஸ்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துவவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினிஸ்தம்பனம், ஜலஸ்தம்பனம். வாயுஸ்தம்பனம், திட்டிஸ்தம்பனம், வாக்குஸ்தம்பனம், சுக்கிலஸ்தம்பனம், கன்னஸ்தம்பனம், கட்கஸ்தம்பனம், அவத்தைப் பிரயோகம் என்பனவாம். (௩௩)

## இடம்பமுள்ளோனே மன்னர் முதலியோரால் மதிக்கப்படுவோ னென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

பொருணனி யுளனென் றியாரும்
புகழுமோர் வார்த்தை வேண்டும்
இருகையுங் கடகம் வேண்டு
மிலங்குகுண் டலங்கள் வேண்டும்
வருவிர லாழி வேண்டு
மார்பிடை மதாணி வேண்டும்
உருவமுத் தாரம் வேண்டு
முயர்ந்தபட் டாடை வேண்டும்.

## இதுவுமது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

சிவிகைமுன் னூர்தி வேண்டுஞ்
செழும்பொருட் செலவு வேண்டும்
குவிகையே வலரும் வேண்டுங்
கோலமார்ந் திருக்க வேண்டும்
கவிகைதாங் குநரும் வேண்டுங்
கையுறை சிறப்ப வேண்டும்
அவிகையில் விளக்கம் வேண்டு
மரசவை குறுகு வார்க்கே.

(ப - ரை) அரசு - ஒரு மன்னனுடைய, அவை - சபையில், குறுகுவார்க்கு - சேரும் வித்வான்களுக்கு, பொருள் - திரவியம்,

கனி - மிகுதியாக, உளன் - உள்ளவன், என்று - என்று சொல்லி புகழும் - துதிக்கின்ற, ஓர் - ஒரு, வார்த்தை வேண்டும்-சொல் உண்டாயிருத்தல்வேண்டும்; இரு கையும் - இரண்டு கைகளிலும், கடகம் வேண்டும் - (விலையுயர்ந்த தங்கக்) காப்புகள் அணியப்பட்டிருத்தல்வேண்டும்; (காதுகளில்) இலங்கு - பிரகாசிக்கின்ற, குண்டலங்கள் வேண்டும் - பொன்னாலாகிய குண்டலங்களென்னும் காதணிகளணியப்பட் டிருத்தல்வேண்டும்; வரும் - (கைகளிலே வளர்ந்து) வருகின்ற, விரல் - விரல்களிலே, ஆழி - மோதிரங்கள், வேண்டும் - அணியப்பட்டிருத்தல்வேண்டும்; மார்பிடை-மார்பினிடத்தே, மதாணி - இரத்தினப்பதக்கம், வேண்டும் - அணியப்பட்டிருத்தல் வேண்டும்; உருவம் அழகு பொருந்திய, முத்தாரம்-முத்துமாலையும், வேண்டும் - அணியப்பட்டிருத்தல் வேண்டும்; (அரையில்) உயர்ந்த-மேன்மையாகிய, பட்டு ஆடை-பட்டு வஸ்திரம், வேண்டும்-உடுக்கப்பட்டிருத்தல் வேண்டும்; சிவிகைமுன் - பல்லக்கு முதலாக, ஊர்தி - பல வாகனங்களும், வேண்டும் - இருத்தல்வேண்டும்; செழும் - செழித்த, பொருள் செலவு - திரவியச் செலவும், வேண்டும் - ஏற்பட்டிருத்தல் வேண்டும்; குவி - (வணங்கும்பொருட்டுக்) கூப்பிய, கை - கரங்களை யுடைய, ஏவலரும் - அடிமை யாட்களும், வேண்டும் - உடனிருத்தல் வேண்டும்; கோலம் - (பலவித ஆடையாபரணங்களாலேற்பட்ட) அழகும், ஆர்ந்திருக்க வேண்டும் - பொருந்தி யிருத்தல் வேண்டும்; கவிகை - குடையை, தாங்குநரும் - பிடிப்போரும், வேண்டும் - இருத்தல்வேண்டும்; கையுறை-(அரசனுக்கீயும்) காணிக்கைப் பொருள்களும், சிறப்ப - சிறப்பாக, வேண்டும் - கையி லிருக்க வேண்டும்; அவிகையில் - அமர்தலில்லாத, விளக்கம் வேண்டும் - தீவர்த்தி விளக்குகளும் பக்கத்திற் சூழ்ந்திருக்க வேண்டும்; (இவ்வளவு சிறப்புக்களு மேற்பட்டிருப்பின் அவர் அவ்வரசனால் நன்கு மதிக்கப்படுவார்; இல்லையேல் அவர் எத்தகைய கல்வி யுடையாராயினும் மதிக்கப்படார்.)

(வி - ரை) இவ் விரண்டு செய்யுட்களும் குளகம்; பல பாக்கள் கூடிப் பொருள் முடியும் செய்யுட் டொடருக்குக் குளகமென்று பெயர். இச் செய்யுட்களும் முன்செய்யுளைப் போலவே, 'இடம்ப முடையவனே அரச சபையில் மதிக்கப்படுவான்' என்னுங் கருத்தை விளக்கிக் காட்டுவனவாம். இச் செய்யுட்களின் கருத்தாலும் இடம்பங் குறித்து ஒருவரை மதித்தல் கூடாது, உண்மையான கல்வி, நற்குணம், நற்செய்கை முதலியவைகளைக் குறித்தே ஒருவரை மதித்தல்வேண்டும் என்பதே பெறப்படும். 'அரசவை' எனப் பொதுப்படக் கூறி யிருப்பினும் இக் கருத்து இடம்பத்தை விரும்புவோரைக் குறிக்குமே யன்றி மெய் யுணரும் உத்தமர்களாகிய மன்னர்களையும் பிரபுக்களையும் குறிக்காதெனக் கொள்க. 'குறுகுவோர்க்கு' என்பதும் பொதுப்படக் கூறியிருப்பினும், இச் செய்யுட்கள் வித்வான்களையே குறித்தனவாதலின், 'சேரும் வித்வான்களுக்கு,' எனப் பொருளுரைக்கப்பட்டது.

'இருகையுங் கடகம், வருவிரலாழி' என்பன எழாம் வேற்றுமைத் தொகைகள். 'குண்டலங்கள்' என்பதற் கேற்பக் 'காதுகளில்' என்பதும், 'பட்டாடை' என்பதற்கேற்ப 'அரையில்' என்பதும் வருவிக்கப்பட்டன. (௩௪-௩௫)

அறஞ்செய்தற் குதவியில்லா வுடம்பு
பயனற்ற தென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

எய்தற் கரிய யாக்கைதனக்
கெய்திற் றென்று லதுகொண்டு
செய்தற் கரிய வறங்கள்பல
செய்து துயர்கூர் பிறவியினின்

றுய்தற் குரிமை பெறவொண்ணு
தழல்வோ னுடம்பு பொற்கலத்திற்
பெய்தற் குரிய பால்களரிற்
பெய்த தொக்கு மென்பரால்.

(ப - ரை) எய்தற்கு அரிய - அடைதற்கருமையான, யாக்கை- மனித தேகம், தனக்கு - தனக் குரிமையாக, எய்திற்று என்றால் - வந்தடைந்ததேயானால், அது கொண்டு-அவ் வுடம்பைத் துணையாகக் கொண்டு, செய்தற்கு அரிய-செய்வதற்கருமையான, பல அறங்கள்- பலவிதமான தருமங்களை, செய்து - இயற்றி, துயர் கூர் - துன்ப மிகுந்த, பிறவியினின்று - பிறப்பென்னுந் துன்பத்தினின்றும், (நீங்கி) உய்தற்கு-(முத்தி வீட்டையடைந்து என்றுமழியாச்சுகவாழ் வுடன்) பிழைத்தற்கு, உரிமை-உரிய குணத்தை, பெற ஒண்ணாது- அடைய முடியாமல், உழல்வோன்-(வீணே உலகத்திற் றிரிந்து பிற விக்கேதுவான காரியங்களைச் செய்துகொண்டு) வருந்துவோ னுடைய, உடம்பு-அத் தேகமானது, (அவனிடத்தே சேர்ந்திருத்தல் எதற்கொப்பா மெனில்) பொன் கலத்தில் - பொன் பாத்திரத்தில், பெய்தற்கு உரிய - ஊற்றிவைக்கத்தகுந்த, பால் - பாலை, களரில் - வெடிப்பு நிலத்தில், பெய்தது - சொரிந்ததை, ஒக்கும் என்பர்-நிகர்க் கும் என்று சொல்வர் பெரியோர்.

(வி-ரை) ஒரு மனிதன், மானிட தேகத்தை யடைந்தால் அத னுதவிகொண்டு அறங்களைச் செய்து பிறவி நீங்குதற்கான மார்க் கத்தைத் தேடவேண்டும்; அக் குணமில்லான் அத் தேகத்தைச் சார்ந் திருத்தல், பொற்கலத்திற் சொரிதற்குரிய பாலை வெடிப்பு நிலத்தில் ஊற்றுவதற்கு நிகராம். வெடிப்பு நிலத்தில் ஊற்றிய பால் எவ்வாறு ஒன்றுக்கு முதவாமல் நிமிஷ நேரத்தில் மறையுமோ அவ்வாறே தருமகுண மில்லாதவனிடத்திற் சேரும் தேகம் பயனற்றதாய் விரைவில் மறையும். முத்தி யடைதற்கு எல்லாத் தேகங்களினும்

மானிடதேகமே சிறந்து நிற்பதாலே இங்கு மனித தேகம் விசேஷமுடையதாகக் கூறப்பட்டது. 'பூதலத்தின் மானிடராய்ப் பிறப்ப தரிது' என்பதனாலு முணர்க.

யாக்கை-கட்டு; பல வுறுப்புகளைக் கொண்டு கட்டப்பட் டிருத்தலின் உடம்பு, 'யாக்கை' என்னும் பெயர் கொண்டது; யாத்தலாகிய தொழில் உடம்பிற் காயினமையின் இது தொழிலாகுபெயர்; அது கொண்டு - இரண்டாம் வேற்றுமைத்தொகை. 'பிறவியினின் றுய் தற்கு' என்பதில் 'நீங்கி' என்னும் ஒரு சொல் வருவிக்கப்பட்டது. 'என்பர்' என்னும் பயனிலைக்கேற்பப் 'பெரியோர்' என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. ஆல்-அசை. (நகு)

## சிவனடியார்க் குதவாத் திரவியங்கள் பயனற்றன வென்பது

[நேரிசை வெண்பா]

நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காம்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காம்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண்.

(ப-ரை) நம்பன் - சிவனுடைய, அடியவர்க்கு - அடியாராகிய சாதுக்களுக்கு, நல்கா - ஈயாத, திரவியங்கள் - பொருள்கள், பம்புக்காம் - (பிறர் வந்து அதட்டிப் பேசும்) ஆரவாரத்திற்கு (அதாவது இடம்பத்திற்கு) ஆகும்; பேய்க்கு ஆம்-பைசாசங்களுக்குதவும்; பரத்தையர்க்கு ஆம்-(தந்திரமாகப் பொருள் கவரும்) தாசிகளுக் குதவும்; வம்புக்கு ஆம் - (கொடியோர் வந்து செய்யும்) தீச் செய்கைக்காகும்; கொள்ளைக்கு ஆம் - தீயவர் வந்து அடித்துப் பறிப்பதற்காகும்; கள்ளுக்கு ஆம்-மதுபானஞ் செய்தற் குதவும்; கோவுக்கு ஆம் - (வலிதிற் பொருள் கவரும்) கொடுங்கோல் மன்னருக்குதவும்; சாவுக்கு ஆம் -

செத்தவர்க்குச் செய்யும் ஈமக் கிரியைகளுக்குதவும்; கள்ளர்க்கு ஆம்-(பிறரறியாமல் வந்து பொருள் கவரும்) திருடர்க் குதவும்; தீக்காகும்-(வீட்டில் பற்றியெறிந்து எல்லாவற்றையும் நாசப்படுத்தும்) நெருப் பிற் குதவும்.

(வி-ரை) ஒருவன், சிவனடியார்க் குதவுதல் முதலிய நல்வழி களிற் றன் பொருளைச் செலவிடாமல் கருமியாய் அவற்றைப் பத்தி ரப்படுத்தி வைப்பானேயானல் அப்பொருள்கள் அவனிடத்தே நின்று அவனுக்கொரு பிரயோசனத்தையுஞ் செய்யமாட்டா. பின்னை யெவ் வாறுமெனில், பிறர் வந்து அதட்டிப் பேசி இடம்பஞ் செய்வதனல் அவர்களால் தனக்கேதேனும் அனுகூல முண்டாமெண நினைத்து அவன் ஏமாந்து அவர்களுக்குக் கொடுப்பதனுல் செலவாகிவிடும்; அவனுடைய வீட்டில் பேய் புகுந்திருப்பதாக மந்திரவாதிகள் சொல்லி ஏமாற்றுவதால் அந்தப் பேயைப் போகக் கருதிச் செய்யும் மதியீனச் செய்கைகளாலுந் தொலைந்துபோம்; அவன் விலைமாதரின் மோக வலையிற் சிக்கி அவர்களுக் கன்புடன் கொடுப்பதாலும் நாச மாம்; கொடியோர் பல இடையூறுகளைச் செய்வதற்குப் பயந்து அவர் களுக் கீவதாலுந் தொலையும்; கொள்ளைக்காரர் வந்து அடித்துப் பறித்துக்கொண்டு போவதாலும் நாசமாம்; அவன் மதுபானம் முத லியவற்றைச் செய்வதாலும் தொலையும்; கொடுங்கோன் மன்னர் அடித்து வருத்துதற்குப் பயந்து அவர்களுக்குத் தண்டங் கொடுப்பதா லுந் தொலையும்; அடிக்கடி அவன் வீட்டில் நேரும் சாவுகாரியங்க ளுக்குச் செலவிடுவதாலுந் தொலையும்; திருடர் பன்முறை கவர்ந்து செல்வதாலும் செல்வாகிவிடும்; அடிக்கடி நேரும் தீக்கோளினுலும் ஒன்று மில்லாமற்போம். சிவனடியார்க் குதவாதவனுக்கு அவசியம் இத் துன்பங்களெல்லாம் வந்து சேர அவனுடைய பொருள்கள் நாச மாய்விடுமாதலின், உலகத்திற் பொருள் படைத்தோர் அறங்களைத் தவறாது செய்யவேண்டு மென்பது இச் செய்யுளின் கருத்து; இச் செய்யுள் மூதாட்டியாராகிய ஔவையாராற் செய்யப்பட்டது.

காண்-இது ஒருவகை அசை யிடைச்சொல். (௩௭)

## தள்ளக்கூடாதவை இன்னவை யெனல்

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

செந்தமி ழடைகாய் நீறு சிவிகைபொன் னார மாடை
சுந்தர மான தோகை துலங்குமிவ் வகைக ளேழும்
வந்தபோ திருகை யேந்தி வாங்கலக் குமியுஞ் சேர்வள்
அந்தநா ளாகா வென்றா லவனைவிட் டகலு வாளே.

(ப - ரை) செந்தமிழ் - செம்மையாகிய தமிழ் நூலும், அடைகாய் - வெற்றிலைப் பாக்கு, நீறு - விபூதியும், சிவிகை - பல்லக்கும், பொன் ஆரம் - பொன்னாலாகிய மாலையும், ஆடை-வஸ்திரமும், சுந்தரமான - அழகான, தோகை - கன்னிகையும், (ஆகிய) துலங்கும் - விளங்குகின்ற, இவ்வகைகள் எழும் - இந்த எழுவகைப் பொருள்களும், வந்தபோது - (பிறர் கொடுக்கத் தன்னிடத்திலே வலிய) வந்து சேர்ந்த காலத்தில், (ஒருவன்) இரு கை எந்தி - இரண்டு கைகளினாலுந் தாங்கி (மரியாதையுடன்), வாங்க - பெற்றுக்கொள்ள, (அவனிடத்தில் அவை சேர்வதோடு) இலக்குமியும் - திருமகளும், சேர்வள்-அடைந்து வாசஞ் செய்வாள்; அந்த நாள்-(இந்தப் பொருள்கள் வந்தடையும்) அந்தத் தினத்தில், (அவன்) ஆகா என்றால் - இவையெனக் காகாவென்று அவற்றைப் பெறத் தடைசெய்தால், இலக்குமியும்-(தானே வந்து சேரக்கூடிய) திருமகளும், அவனை விட்டு அகலுவாள் - அவனை விட்டு நீங்கிச் செல்வாள்.

(வி - ரை) செந்தமிழ்நூல் முதலியவை தாமே வந்து சேரும் போது அவற்றை விருப்பத்துடனே இரண்டு கைகளையு மேந்திப் பெற்றுக்கொள்ளாதவனிடத்தில் இலக்குமி வாசஞ் செய்யமாட்டாள் என்பது இச் செய்யுளின் கருத்து.

தமிழ் என்னுங் கருவியின் பெயர் அதனா லாகிய நூலுக்காயினமையின் இது கருவியாகுபெயர். தன்னினும் மிகுதியான ஆறு

அஃறிணைப் பொருள்களோடு சேர்ந்து வந்தமையின் தோகையென்னும் உயர்திணை, மற்றவற்றின் மிகுதிபற்றி அஃறிணை முடிபை யேற்றது; "திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே," (ந-பொ-சூ-உஎ) என்பது விதி. அடைகாய் என்பதில் அடை-வெற்றிலை, காய் - பாக்குக்காய்; இவ்விரு சொற்களுஞ் சேர்ந்து ஒரு சொன்னீர்மையனவாய் 'அடைகாய்' என வந்தன. (நஅ)

## இன்னவர் மழை பெய்யெனப் பெய்யு மென்பது

[இன்னிசை வெண்பா]

கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் தவசி கொடிதொரீஇ
நல்லவை செய்வா னரசனிம் மூவர்
பெய்யெனப் பெய்யு மழை.

(ப-ரை) கொண்டான்-(தன்னை மணஞ்செய்து மனைவியாகக்) கொண்டவனுடைய, குறிப்பு அறிவாள் - உள்ளக் குறிப்பை யறிந்து நடப்பவளே, பெண்டாட்டி - மணந்த கணவனுக்குத் தகுதியான மனைவியாவள்; கொண்டன - தான் உரிமையாகக் கொண்ட விரதங்களை, செய் வகை-நடத்தவேண்டிய முறைமைப்படி, செய்வான்-நடத்துவோனே, தவசி - சரியான தவத்தையுடையவனுவன்; கொடிது-தீங்கினின்றும், ஒரீஇ - நீங்கி, நல்லவை - நல்ல நீதியான காரியங்களை, செய்வான்-நடத்துவோனே, அரசன்-செங்கோன் முறை வழுவாத மன்னனுவன்; (இவர்களுடைய மகிமை அளவிடற்கரியதாம் ஆதலின்) இம்மூவர் - இந்த மூன்று வகையாரும், பெய் என-பெய் என்று சொல்ல, மழை - மாரியும், பெய்யும் - (இவர்களுடைய வார்த்தையைத் தெய்வ வாக்காகக் கருதித் தடையின்றி உடனே) சொரியும்.

(வி - ரை) கொண்டவன் குறிப்பறிந்து நடக்கும் மனைவியும், விரதங்களை முறைப்படி செய்து முடிக்கும் தவசியும், செங்கோன் முறை பிசகாத அரசனும் தெய்விகமுடையவராதலின், இவர்களுடைய வார்த்தைப்படியே, மேகமும் மழையைச் சொரியும். இம்மூவருள் கொண்டவனை உயர்வாக நினைக்கும் பெண் சொன்னமாத்திரத்தில் மழை பெய்யுமென்பது, "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை," என்னுந் திருக்குறளானு முணரப்படும். இவ்வெண்பாவிலுள்ள ஈற்றடி இங்கு உதாரணங் காட்டிய குறளின் ஈற்றடியேயாம்; "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும்- முன்னோரின், வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங், கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்," என்ற வழிநூல் சார்புநூல்களின் சிறப்பு விதிபற்றி இக் குறள்வெண்பாவி னீற்றடி இச் செய்யுளின் ஈற்றடியாக எடுத்தாளப்பட்டது.

இச் செய்யுள் தனிச்சொல்லின்றிப் பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. (௩௧)

## பொருளை நல்வழியிற் செலவிடுவோர் எமவாதனையினின்று நீங்குவ ரென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

கைப்பொருள் பெற்ற ஞான்றே கடவுளா லயத்திற் கீந்து
மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்து
வைப்பென விரப்போர்க் கீந்து வருப்பவ ருளரேற் கூற்ற
மொய்ப்புயத் தண்டந் தப்பி முன்னவ னின்பத் தாழ்வார்.

(ப-ரை) கைப்பொருள்-கையி லடையக்கூடிய திரவியத்தை, பெற்ற ஞான்றே-அடைந்தபொழுதே, (அதனை) கடவுள்-தெய்வத்தி

னது, ஆலயத்திற்கு - கோவிலுக்கு (பிரயோசனப்படும்படி), ஈந்து- கொடுத்து, மெய்ப்படு - மெய்யாகிய, புராணம் - புராணங்களையும், நூல்கள்-மற்றைய சாஸ்திரங்களையும், விருப்பொடு-பிரியத்துடனே, கேட்டு-(அத் திரவியத்தைச்செலவிட்டு அத னுதவியால்) சிரவணஞ் செய்து, உவந்து - சந்தோஷித்து, வைப்பு என-(நாம் இரப்போர்க் கீவதே பிற்காலத்தி லுதவும்) நிட்சேபப் பொருளாம் என்று கருதி, இரப்போர்க்கு யாசிப்பவருக்கு, ஈந்து-அதனை உதவி, வருபவர்-வசி த்து வருங் குணமுடையவர், உளரேல்-(உலகத்தில்) இருப்பார்களா னல், (அவர்கள்) கூற்றம் - எமனுடைய, மொய்-பெருமை பொருந் திய, புயம் - புஜத்திலேயுள்ள, தண்டம் - தண்டாயுதத்தா லேற்படும் ஹிம்சையினின்றும், தப்பி-தவறி, முன்னவன்-கடவுளா லேற்படும், இன்பத்து - பேரின்ப சாகரத்துள்ளே, ஆழ்வர் - மூழ்கி ஆனந்திப் பார்கள்.

(வி - ரை) மனிதர் தாம் பெற்ற செல்வத்தைக் கோவிற்றிருப் பணி செய்வதிலும், புராண நூல்களைச் சிரவணஞ் செய்வதிலும், இரப் போர்க் கீவதிலும் செலவிடுவார்களேயானல், அவர்கள் எமதண்ட த்தா லேற்படுந் துன்பத்தினின்று நீங்கிக் கடவுள் கிருபையா லேற் படும் பேரின்பத்தை அடைவார்க ளென்பது இதன் கருத்து.

கடவுள் ஆலயம் - ஆறும் வேற்றுமைத் தொகை; "இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன் கசதப மிகும்..." என்கிற சூத்திர விதி பற்றி, கைப்பொருள் என்பதில் வலி மிக்கது. 'யரழ முன்னர்க் கசதப வல்வழி, இயல்பு மிகலு மாகும் வேற்றுமை, மிகலு மினத் தோ டுறழ்தலும் விதிமேல்,'' (மெ-பு-சூ-உக) என்ற சூத்திர விதி யால், 'மெய்ப்படு' என்பதில் யகர மெய்யின் முன் வலி மிக்கது. தண்டத்தப்பி - ஐந்தாம் வேற்றுமைத் தொகை; நீக்கப்பொருளது. ()

## பயனற்ற வுடலை விட்டு நீங்குதல் நலமெனல்

[நேரிசை வெண்பா]

பந்தவுடல் வீண்பாடு பட்டவுடல் சீசீதுர்க்
கந்தவுட லொன்றுக்கா காதவுடல்—இந்தவுடல்
வைத்துப்பார்த் தென்ன வலிய வுயிர்மாய்த்துச்
செத்துப்போ னாலுநல்ல தே.

(ப - ரை) பந்த உடல் - (மண் பெண் பொன் என்கிற பாச) பந்தங்கட் கிடமாயுள்ள உடம்பும்; வீண் பாடு பட்ட உடல் - (நிலையற்ற உலக சுகத்தை யடைவதற்காக) வீண் பிரயாசைப்பட்ட உடம்பும்; சீசீ—, துர்க்கந்த உடல் - (மல மூத்திர முதலியவை நிறைந்து அவற்றா லேற்பட்ட) கெட்ட நாற்றத்தையுடைய உடம்பும்; ஒன்றுக்கு - ஒரு நற்காரியத்திற்கேனும், ஆகாத உடல் - பிரயோசனப் படாத உடம்பும்; (ஆகிய) இந்த உடல்-இத்தன்மையான தேகத்தை, வைத்து - (உலகத்திலே உயிரோடு சேர்ந்து வாழும்படி நிலையாக) நிறுத்தி, பார்த்து - அழகு பார்ப்பதனால், என்ன - என்ன பயனுண்டாம்? (ஒரு பிரயோசனமு மில்லை ஆதலால்,) உயிர் - (இத்தகைய தேகத்திலுள்ள) உயிரை, வலிய - வலோற்காரமாக, மாய்த்து - வருத்தி நீக்கி, செத்துப்போனாலும் - (இத்தகைய வுடலை யழித்து) இறந்துபோனாலும், நல்லது - நன்மையேயாம்.

(வி-ரை) மனித தேகத்தை யெடுத்தோர் அதனை நல்வழியில் உபயோகப்படுத்தி அதனுதவி கொண்டு முத்தி மார்க்கத்தைத் தேட வேண்டும்; அவ்வாறின்றி அவ் வுடலைப் பந்தத்திற் கேதுவான வீண் பாடுபடுவதிலும், ஆகாரங்களை நிரப்பித் துர்க்கந்த மதிகரிப்பதிலும், நிர்ப்பிரயோசனமா யிருப்பதினும் உபயோகப்படுத்துவதால் ஒரு நன்மையு மில்லையாம். அதை வைத்திருப்பதைக் காட்டினும் ஒழித்துவிடுவதே நன்மையாம்.

சீ சீ - இகழ்ச்சிக் குறிப்பு. 'பார்க்க' என்னும் செயவெனெச்சம் 'பார்த்து' என்னும் செய்தெனெச்சமாகத் திரிந்து வந்தது. 'ஒன்றுக்கு' என்பதில் இழிவு சிறப்பும்மை தொக்கது. 'என்ன' என்பதன் பின், அதற்கேற்ப, 'பயனுண்டாம்' என்னுஞ் சொற்றொடர் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. ஈற்றேகாரம் தேற்றப்பொருளில் வந்தது. (சக)

காலமறிந்து முன்னரே அறஞ் செய்யவேண்டுமெனல்

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

பசிமிகுந்த பின்னெல்லை விதைப்பதுபோல்
வீட்டிடைத்தீப் பற்றிக் கொண்டு
நசியும்போ ததையவிக்க வாறுவெட்டல்
போலும்போர் நடக்குங் காலை
விசிகநூல் கற்பமுயல் வதுபோலுங்
கபமிஞ்சி விக்கிச் சிக்கி
இசிவுகொண்டு சாங்காலத் தெப்படிநீ
யறம்புரிவா யிதயப் பேயே.

(ப - ரை) இதயப் பேயே - மனமாகிய பைசாசமே!, பசி - பசி நோயானது, மிகுந்தபின் - (ஒருவனுக்கு) அதிகரித்தபின், (அப் பசியைத் தணித்துக்கொள்ளும் உணவு சமைத்தற்குரிய அரிசியை விரும்பி) நெல்லை - நெல் முளையை, விதைப்பதுபோல்-வயலிற் கொண்டு போய் அவன் விதைப்பதுபோலவும்; வீட்டிடை - வீட்டினிடத்தே, தீப்பற்றிக்கொண்டு - நெருப்புப் பிடித்துக்கொண்டு, நசியும்போது - (அவ் வீடு) நாசமாகும்போது, அதை - அந்த நெருப்பை, அவிக்க - அமர்த்துதற்கு, (ஜலத்தை விரும்பி ஒருவன்) ஆறு-நதியை, வெட்டல்போலும் - தோண்டுதல்போலவும்; போர் - யுத்தமானது, நடக்குங்காலை - நடந்துகொண்டிருக்குஞ் சமயத்தில், விசிக நூல்-அஸ்திர சாஸ்திரத்தை, கற்க - படிக்க, முயல்வதுபோலும் - ஒருவன் முயற்சி

செய்வதைப்போலவும்; (நீ இப்பொழுதே அறஞ்செய்ய நாடாமல் நிலையற்ற உலக வின்பங்களை யனுபவித்துவிட்டு வயதான பின்பு செய்துகொள்ளலாமென்று நினைக்கின்றனை; (இந்த எண்ணம் தப்பானதாகும்); கபம்-கோழையானது, மிஞ்சி-அதிகரித்து, விக்கி-(சாப்பிடும் உணவு முதலியவை) தொண்டையி லடைத்துக்கொள்ள, சிக்கி - (மூச்சானது வெளிப்படாமல்) இடையில் தங்கிக்கொள்ள, (அதனுல்) இசிவு கொண்டு - (நரம்புகள்) இழுத்தலைக்கொண்டு, சாங் காலத்து - உடல் வீழ்ந்து நாசமாகும் அக்காலத்திலே, நீ—, அறம்-தருமத்தை, எப்படிப் புரிவாய்-எவ்வாறு செய்து நிறைவேற்றுவாய்? (ஒருபோதும் முடியாது; ஆதலால், இப்பொழுதே, விரைந்து தருமத்தைச் செய்து உனக்குப் பிற்காலத்திலே உதவும் புண்ணியத்தைத் தேடிக்கொள்வாயாக).

(வி - ரை) இச் செய்யுள், மனத்தை நோக்கி விரைந்து அறஞ் செய்யுமாறு தூண்டுதலாகிய கருத்தமைத்துச் செய்யப்பெற்றது. இதனுல் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மனத்தை நோக்கித் தகுந்த காலத்திலேயே தருமம் புரியுமாறு தூண்டவேண்டுமென்பது விளங் கும். மனித தேகம் நிலையற்றதாதலின், அஃதிருக்கும்போதே விரைந்து தருமஞ் செய்ய முயலவேண்டும்; அவ்வாறின்றி மரணஞ்சமீபித்த விருத்தாப்பிய காலத்தில் அதனைச் செய்துகொள்ளலாமென்று நினைத்தல், பசி அதிகரித்தபின் உணவுக்கு நெல்லை விதைப்பதையும், தீப் பற்றி யெரியும்போது அதனை யவித்தற்குத் தண்ணீரெடுக்கும் பொருட்டு ஆறு வெட்டுவதையும், சண்டை நெருங்கிய காலத்தில் அஸ்திரவித்தை கற்க முயல்வதையும் நிகர்க்கும். இங்ஙனம் அறத்தைப் பின்னே செய்வோமென்று நினையாமல் முன்னரே செய்ய வேண்டுமென்பதை, "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னது, கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின், முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால் நற்கா யுதிர்தலு முண்டு," என்னும்

நாலடிச் செய்யுளு முணர்த்தும். இவ்வுரையிடையில் பொருட்பொரு த்த நோக்கிச் சில சொற்றொடர்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட் டுள்ளன. (சஉ)

## வாழ்வு நிலையற்ற தாதலால் விரைவில் அறத்தைத் தேடவேண்டு மென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

இன்றருணோ தயங்கண்டோ முயர்ககன
　　முகட்டின்மிசை யிந்தப் பானு
சென்றடைய நாங்காண்ப தையமதைக்
　　காண்கினுமேற் றிசையி ருக்குங்
குன்றடையு மளவுநா மூயிர்வாழ்வ
　　தரிததன்முன் குறுகுங் கூற்றம்
என்றச்சத் துடன்மனமே மறவாம
　　லறவழியி லேகு வாயே.

(ப - ரை) மனமே-நெஞ்சமே! (உலக வாழ்வு சதமன்று, பின் செய்வோமென் றெண்ணாது விரைந்து அறத்தைத் தேடவேண்டும்; ஆதலால்,) இன்று - இன்றைக்கு, அருணோதயம்-சூரியோதயத்தை, கண்டோம் - பார்த்தோம்; இந்தப் பானு - இந்தச் சூரியன், உயர் - உயர்ந்த, ககனம்-ஆகாயத்தின், முகட்டின் மிசை-உச்சியில், சென்று அடைய - போய்ச்சேர, நாம்—, காண்பது - பார்ப்பது, ஐயம்-சந்தேகம்; அதை - அந்தச் சூரியனை, காண்கினும் - (அப்படியே ஆகாய முகட்டில் வரப்) பார்த்தாலும், மேல் திசை-மேற்குத் திக்கில், இருக்கும் - இருக்கின்ற, குன்று - அஸ்தமனகிரியில், அடையும் அளவும் - (அந்தச் சூரியன்) போய்ச் சேரும்வரையிலும், உயிர் வாழ்வது - நாம் உயிருடனே நிலைபெற்று வாழ்வது, அரிது - அருமையாகும்; அதன் முன்-(அவ்வாறு அந்தச் சூரியன் அஸ்தமனகிரியை) அடைவதற்கு

மூர்த்தியே, கூற்றம் - எமன், குறுகும் - (நம்மைக் கொண்டு செல்ல) வருவான், என்று - என்று நினைத்து, அச்சத்துடன்-(சாவு சமீபத்திலுள்ளது என்கிற) பயத்துடனே, மறவாமல் - மறந்துவிடாமல், அறவழியில் - தரும மார்க்கத்தில், ஏகுவாய் - செல்வாயாக.

(வி-ரை) இச்செய்யுளும், யாக்கை நிலையாதாகையால் மரணங் குறுகுவதற்குள் விரைந்து அறத்தைத் தேடவேண்டுமென்று மனத்தை நோக்கிக் கூறுவதாக இயற்றப்பட்டது. இதனால், ஒவ்வொருவரும், 'சூரியன் உதயமாகி அஸ்தமிப்பதற்குள் மரணம் வருகிறது நிச்சயமாதலால் இப்பொழுதே அறவழியிற் புகவேண்டும்' என்று தம் மனத்திற்குக் கூறி அதனைத் தருமமார்க்கத்திற் றிருப்பி வீண் காலம் போக்காது விரைந்து அறத்தைத் தேடவேண்டு மென்பது பெறப்படும். "இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது, பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி, ஒருவுமின் றீயவை யொல்லும் வகையான், மருவுமின் மாண்டா றறம்," என்னும் நாலடிச் செய்யுளும் இதனை விளக்குதல் காண்க. திசையிருக்கும் - ஏழாம் வேற்றுமைத்தொகை. (சு௩)

## இன்னவர்க்குப் பெண்ணைக் கொடுத்தல் தகாதென்பது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

முத்தியில் விருப்ப முடையவன் மிடியன்
மூர்க்கன்சேண் டேயத்தி லுள்ளோன்
புத்தியில் வயிரம் பொருந்திய சூரன்
புதல்விதன் வயதின்மும் மடங்கு
தத்திய வயது ளோரினுர் தமக்குத்
தாணியி லொருவரு முள்ள
நத்திரன் மகளைத் தரத்தகா தென்னுக்
கணிதநூல் நவின்றிடு மன்றே.

(ப - ரை) முத்தியில் - மோக்ஷத்தில், விருப்பம் உடையவன் - பிரிய முள்ளவன்; மிடியன் - தரித்திரத்தையுடையவன்; மூர்க்கன் - ஆங்காரமுள்ளவன்; சேண் தேயத்தில் உள்ளோன் - தூரதேசத்தி லுள்ளவன்; புத்தியில் - அறிவில், வயிரம் - (கொண்டதை விடாத தாகிய சலஞ்சாதித்த லென்னும்) வைராக்கியத்தை, பொருந்திய - அடைந்த, சூரன் - (அஞ்சாத் தன்மையுள்ள) வீரன்; புதல்விதன் - (மணஞ்செய்து கொடுக்கும்) புத்திரியினுடைய, வயதின்-வயதைப் பார்க்கிலும், மும்மடங்கு - மூன்று பங்கு, தத்திய - கடந்ததிகரித்த, வயது உள்ளோன் - வயதையுடையவன், (ஆகிய) இன்னோர் தமக்கு - இத்தன்மையை யுடையவர்களுக்கு, தரணியில் - இப் பூலோகத்தில், ஒருவன் - எவரும், உள்ளம் நத்தி - மனத்தில் விருப்பங் கொண்டு, நல் மகளை-நல்ல குமாரத்தியை, தரத் தகாது-(மணஞ்செய்துகொடுத் தல்) கூடாது, என்னு - என்று, கணித நூல் - ஜோதிடசாஸ்திரம், நவின்றிடும் - சொல்லும்; (ஆதலால், இவர்களுக்கு எவரும் பெண் ணைக் கொடுத்தல் கூடாதாம்.)

(வி-ரை) மோக்ஷ விருப்புடையவன் உலகவின்பத்தை வெறுக் கக் கூடியவனுதலின் அவன், பெண்ணைப் பக்ஷமாகக் கொண்டாட மாட்டான். தரித்திரனிடத்திற் சேரும் பெண் ஒரு சுகத்தையு மடையமாட்டாள். மூர்க்கன், அற்பக் குற்றத்திற்கும் கோபங்கொ ண்டு பெண்ணை வருத்துவானுதலால் அவனிடத்திற் சேரும் பெண் எப்பொழுதும் துன்பத்தையே அடைந்துகொண்டிருப்பாள். தூர தேசத்தி லுள்ளவனுக்குப் பெண்ணைக் கொடுத்தால் ஆபத்து முதலி யன நேர்ந்த காலங்களில் விரைவில் சந்தித்தற் கேதுவில்லாமற் போவதால் கவலைக் கிடமுண்டாகும். கொண்டதை விடாமல் சலஞ் சாதிக்கும் வைராக்கிய முடையவனுக்குப் பெண்ணைக் கொடுப்பின் அவன் ஒவ்வொரு சமயங்களில் நேர்ந்த அற்பக் குற்றங்களையும் விடாமல் மனத்தில் வைத்துக்கொண்டு அவளை அடிக்கடி வருத்தித்

தானிட்டதே சட்டமாகப் பிடிவாதஞ் செய்வானாதலின், அப் பெண் மிகுந்த துன்பத்திற்குள்ளாக ஏதுவாகும். வயதில் முதிர்ந்தவனுக்குப் பெண்ணைக் கொடுத்தால் அவள் தன் பருவகாலத்தில் அடைய வேண்டிய இல்லறவின்பத்தை மனத்திருப்தியோடு அடைய ஏது வில்லாமற்போம்.

புதல்விதன் வயது - ஆறும்வேற்றுமைத் தொகை; இதில் தன் சாரியை. ஒருவர் என்பது சொல்லாற், பன்மையேயாயினும் பொரு ளால் ஒருமையாம். "ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப், பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப," (ந-பெ-ந-உ) என்னுஞ் சூத்திரத் தா லுணர்க. தரத்தகாது-எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று. (சஃ)

இன்ன தன்மையுடையர்க்குப் பெண் கொடுக்கலா மென்பது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

புரைதபு குணனுஞ் சீலமும் வனப்பும்
பூரண வாயுளுந் துப்புங்
கரையில்விற் பனமும் பாலனம் புரியுங்
கருத்தருங் குறைவிலா தாக
விரவுசெல் வமுமா மெண்வகை யுடைய
வாடவர் விருப்புறு வண்ணம்
பரவிநின் றவர்க்கு மகட்கொடை யுதவல்
பருணிதர் கடமைய தாமால்.

(ப-ரை) புரை தபு - குற்றம் நீங்கிய, குணனும் - நற்குணமும்; சீலமும் - நல்லொழுக்கமும்; வனப்பும் - அழகும்; பூரணம்-நிறைந்த, ஆயுளும் - வயதும்; துப்பும்-தேகவலிமையும்; கரையில்-எல்லையற்ற, விற்பனமும் - கல்வியறிவும்; பாலனம் புரியும் - (சகல வுயிர்களையுங்

தன்னுயிர்போல நினைத்துப்) பாதுகாத்தல் செய்யத்தகுந்த, கருத்தும்-எண்ணமும்; குறைவிலாதாக - குற்றமற்றதாக, (அதாவது, நல்வழியில் வந்ததாக), விரவு - வந்து சேர்கின்ற, அரும் - கிடைத்தற்கரிய, செல்வமும்-ஐசுவரியமும், ஆம்-ஆகிய, எண் வகை-எட்டு வகைகளையும், உடைய - உரிமையாகப் பொருந்திய, ஆடவர் - புருஷர், விருப்புறு வண்ணம் - விருப்பங் கொண்டபடியே, பரவி - அவரைத் துதித்து, நின்று - அவருக் கிணக்கமான வழியில்நின்று, அவர்க்கு - அவ்வாடவர்க்கு, மகள் கொடை - கன்னிகாதானத்தை, உதவல்-கொடுத்தல் (அதாவது, பெண்ணைக் கட்டிக்கொடுத்தல்), பருணிதர் - அறிவுடையோரது, கடமையது ஆம் - முறைமையாம்.

(வி - ரை) பெண்ணை விரும்பும் ஆடவனுக்குக் குற்றமற்ற குண மிருந்தால் அவன் அப்பெண்ணுக் கிதமாக நடந்துகொள்வான்; நல்லொழுக்க மிருந்தால் அவளை ஒழுங்கில் நடத்துவான்; வனப்பும் நிறைந்த ஆயுளு முண்டாயிருப்பின் அப் பெண் திருப்தியுடன் சுமங்கலியாய் வாழ்தற் கேதுவாம்; தேகவலிமை யேற்பட்டிருப்பின் குடும்ப காரியங்களை வல்லமையுடன் அவன் நடத்தி அப்பெண்ணிற்குச் சந்தோஷத்தை யுண்டாக்குவான்; கல்வியறி விருந்தால் மிக்க கீர்த்தியை யடைந்து அவளுக்கும் புகழை யுண்டாக்குவான்; எல்லா வுயிர்களையுங் காக்குங் கருத்திருந்தால் அவளை அன்புடன் கொண்டாடுவான்; செல்வ மிருந்தால் அப்பெண் இவ்வுலக வின்பத்தை யடைதற் கேதுவாம். ஆதலின் இவற்றை யுடையவனுக்கே பெண்ணைக் கொடுத்தல் சிறந்ததாம்.

தபு - பெயரெச்சம். கருத்து-இதில் எண்ணும்மை தொக்கது. "மகரவிறுதி யஃறிணைப் பெயரின், னகரமோ டுறழா நடப்பன, வுளவே," (ந-எ-சுஎ) என்னும் சூத்திர விதிபற்றி, குணம் என்பதன் ஈற்று மகரம் னகரமாகத் திரிந்தது; இது மொழியிறுதிப்போலியெனப்படும்; இங்கே மகரத்துக்கு னகரம் போலி. கொடை-தொழிற்

பெயர்; இதில் கொடு - பகுதி, ஐ - தொழிற்பெயர் விகுதி, உகரக் கேடு சந்தி. கடமையது - இதில் அது - சாரியை. ஆல் - ஈற்றசை.

## பெண் கொடுக்குங் காலத்தில் பிதா முதலியவர்க் கேற்படும் விருப்பங்கள் இன்னவை யென்பது

[நேரிசை வெண்பா]

பெண்ணுதவுங் காலைப் பிதாவிரும்பும் வித்தையே
எண்ணில் தனம்விரும்பு மீன்றதாய்—நண்ணிடையிற்
கூரியநற் சுற்றங் குலம்விரும்புங் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண்.

(ப - ரை) பெண் - பெண்ணை, உதவுங்காலை - (ஒருவனுக்கு மணஞ்செய்து) கொடுக்க நேர்ந்த காலத்தில், பிதா-(அப் பெண்ணுக்குத்) தகப்பன், வித்தையே - (மணமகனிடத்தில் உண்டாயிருக்கும்) கல்வியையே, விரும்பும் - விரும்புவான் (அதாவது: கல்வியுடையவனுக்கே பெண்ணைக் கொடுக்க விரும்புவான்); (ஈன்ற-அப் பெண்ணைப் பெற்ற, தாய்-அன்னையானவள், (அந்த மாப்பிள்ளையி னிடத்தி லுள்ள) எண்ணில் - அளவில்லாத, தனம் - பொருளை, விரும்பும்-விரும்புவாள் (அதாவது: மிகுந்த பொருளுள்ளவனுக்கே தன் மகளைக் கொடுக்க இசைவாள்); இடையில்-அவர்களுக் கிடையிலே, நண் - பொருந்திய, கூரிய -மிகுதியான, நல் - நல்ல, சுற்றம் - உறவினர், குலம்-(அப் புருஷனுக் கேற்பட்டிருக்கும்) நல்ல மரபை, விரும்பும் - விரும்புவார்கள் (அதாவது: நற்குலமுடையவனுக்கே அப் பெண்ணைக் கொடுக்க விரும்புவார்கள்); பெண் - மணமகளோ, காந்தனது - (தன்னை மணந்துகொள்ளும்) நாயகனுடைய, பேரழகு- உயர்ந்த அழகை, விரும்பும்-விரும்புவாள்(அதாவது: அழகிய கணவனுக்கே வாழ்க்கைப்பட விரும்புவாள். ஆதலால், எல்லார்க்கும் சம்

மதமாக எல்லாக் குணங்களும் பொருந்தியிருப்பவனுக்குப் பெண்ணைக் கொடுத்தல் வேண்டும்.

(வி - ரை) ஆடவர் ஞானமுடையவரா யிருத்தலையே விரும்புவது இயற்கையாதலின் பெண்ணின் பிதா 'மருமகன் கல்வியுடையவனு யிருக்கவேண்டும்' என்று விரும்புவான். பெண்கள் பெரும்பான்மையும் உலகத்தில் சுகத்துடன் வாழ விரும்பும் இயற்கையையுடையவராதலின், தாயானவள், 'மருமகன் செல்வமுடையனு யிருத்தல் வேண்டும்' என்று விரும்புவாள். சுற்றத்தார், குலவொழுக்கத்தையே முக்கியமாகக் கருதும் இயல்பினராதலின் அவர்கள் மாப்பிள்ளையின் நற்குலத்தைக் கவனிப்பார்கள். பருவமுள்ள பெண்கள் மனத்திற் கினிமையான இன்பத்தையே பெரும்பாலும் விரும்பும் இயல்புடையவராதலின் மணமகள் தன் கணவன் அழகுடையவனு யிருத்தல் வேண்டுமென்று விரும்புவாள்; "கைந்நிறைந்த பொருளினும் கண்ணிறைந்த கணவனே மேல்," என்னும் பழமொழி இதனை விளக்கும். ஒவ்வொருவர் ஒவ்வொன்றைக் கருதினும் எல்லார்க்கும் சம்மதமாக மணமகனுக்கு எல்லாச் சிறப்பும் பொருந்தியிருத்தலே தகுதியாம். பெண் கொடுத்தல் பெருங்காரிய மாதலின் ஒவ்வொருவருடைய அபிப்பிராயத்தைப் தழுவி எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்பது இச் செய்யுட் கருத்து.

வித்தையே - இதில் ஏகாரந் தேற்றப்பொருளது. கூரிய - இது பெயரெச்சம்; இதில், கூர் - மிகுதிப்பொருளைக் காட்டும் உரிச்சொல்; இது பகுதி; அ - பெயரெச்ச விகுதி; இ - சாரியை; யகரவுடம்படுமெய் தோன்றியது சந்தி. சுற்றம் - உறவு; இது குணவாகு பெயராய் அதனை யுடையார்க் காயிற்று. செய்யுமென்முற்று பல்லோர் படர்க்கையிற் சாராதாயினும் சுற்றமென்னும் எழுவாய் அஃறிணைபோன் றிருத்தலின் அதற் கியையச் சார்ந்து விரும்பும் என வந்தது. பேர்-பெருமையென்னும் பண்புத் திரிபு. (௬௪)

## ஈசனுக் காட்படல் எல்லாவற்றினு மரிதேன்பது

[கலித்துறை]

மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிதுமற் றதிலுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
நற்கு லத்திடை வருதலு மரிதுஞா னத்தான்
முக்க ணீசனுக் காட்படல் முற்றிலு மரிதே.

(ப-ரை) (ஒருவர் எல்லாப் பிறப்புக்களிலும்) மக்கள்-மானிடருடைய, ஆக்கையில் - உடம்பில், பிறத்தலே-பிறப்பதுவே, அரிது-அருமையாம்; அதிலும் - அங்ஙனம் பிறப்பதிலும், துக்கம் - விசனம் நிறைந்த, கூன் - கூனுயிருக்குந் தன்மையையும், குருடு - கட்புலனின்றி யிருக்குந் தன்மையையும், ஊமையை - வாய்பேசாதிருக்குந் தன்மையையும், துறத்தலும் - நீங்கி நல்ல உறுப்புக்களோடு பிறத்தலும், அரிது - அருமையாம்; அதிலும்—, நற்குலத்திடை - நல்ல குலத்தில், வருதலும் - தோன்றி வருவதும், அரிது - அருமையாம்; அதிலும்—, ஞானத்தால் - அறிவினலே, முக்கண் - மூன்று கண்களையுடைய, ஈசனுக்கு - சிவபெருமானுக்கு, ஆட்படல் - அடிமையாதல், முற்றிலும் - முழுவதும், அரிதே - அருமையாம்.

(வி - ரை) மானிடதேக மெடுத்த ஒருவனுக்கு எல்லாச் சிறப்புக்களிலும், சிவபெருமானுக் காட்படுஞ் சிறப்பே மேலானதாம் என்பது இச்செய்யுட் கருத்து. ஈசனுக்கு மூன்று கண்கள்: சந்திரன், சூரியன், அக்கினி யென்பனவாம். மற்று என்னும் இடைச்சொல் அசைநிலையில் வந்தது. அரிது-பண்படியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; இதில் அருமை-பகுதி, து-ஒன்றன்படர்க்கை விகுதி, மை கெட்டதும் நடுநின்ற ரு ரி ஆனதும் சந்தி. அதிலும் என்னும் உயர்வு சிறப்பும்மை வாக்கியம் மற்றைய இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. (சஎ)

## காமங் கொடிதென்பது

[கலி விருத்தம்]

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.

(ப-ரை) காமத்தால் - அகலிகை யென்னும் பெண்ணாசையினாலே, இந்திரன் - தேவர்களுக்கதிபன், (கௌதமர் கொடுத்த சாபத்தைப் பெற்று) கலக்கம் - மனக் கலக்கத்தை, எய்தினன் - அடைந்தான்; காமத்தால் - சீதையின் ஆசையாலே, இராவணன் - இலங்கைக் கதிபன், கருத்து அழிந்தனன் - தான் கொண்ட எண்ணம் நிறைவேறாமற் கெட்டொழிந்தான்; காமத்தால் - துரோபதையின் ஆசையினாலே, கீசகன் - விராடன் மைத்துனனாகிய கீசகனென்னு மாசன், (அது நிறைவேறாமையினால்) கவலை உற்றனன்-கவலையுற்று வீமனா லிறந்தான்; (இன்னும்) காமத்தால் - பெண்ணாசையினாலே, இறந்தவர்-உயிர் விட்டவர்கள், கணக்கு இல்லார்கள்-எண்ணற்றவ ராவார்கள்; (ஆதலின், பிறர் மனை விரும்புதலாகிய கெட்ட எண்ணத்தை ஒவ்வொருவரும் ஒழித்தல்வேண்டும்).

(வி-ரை) இந்திரன் கௌதமருடைய மனைவியாகிய அகலிகையை விரும்பியபடியால் அக் கௌதமரா லிடப்பட்ட சாபத்தைப் பெற்று உடம்பெல்லாம் யோனிகளாக அந்த அவமானத்தால் வருந்தினன். இராவணன் சீதையை விரும்பியெடுத்துச் சென்றமையால் தன்னுடைய செல்வங்களையெல்லா மிழந்து, தான் கொண்ட எண்ணமும் நிறைவேறாமல் இராமரால் கொல்லப்பட்டான். கீசகன் துரோபதையை விரும்பி அவளுடைய ஏமாற்றத்தி லகப்பட்டு வீமனாற் கொல்லப்பட்டான். ஆதலால், பிறர் மனையாளை விரும்புவோர்க்குச்

சாவு சமீபிக்கு மென்பது நிச்சயம். "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற், றீமை புரிந்தொழுகுவார்" என்னுந் திருக்குறள் இதனை வலியுறுத்தும்.

எய்தினன், அழிந்தனன், உற்றனன் என்பவை இறந்தகால ஆண்பாற் படர்க்கை வினைமுற்றுக்கள். இறந்தவர் - தெரிநிலை வினையாலணையும் பெயர். கணக்கிலார் - குறிப்பு வினையாலணையும் பெயர்; இதனீற்றில் வந்த கள்-விகுதிமேல் விகுதி. (சஅ)

இதுவுமது

[கலித்துறை]

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கும்
ஏம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனால்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்.

(ப - ரை) காமம் - பிறர் மனை நயத்தலாகிய பெண்ணாசை யானது, தீமை உள்ளன யாவையும்-கெடுதியுள்ள காரியங்க ளெல்லா வற்றையும், தந்திடும் - கொடுக்கும்; சிறப்பும் - அழகையும், தோம் இல் - குற்றமற்ற, செல்வமும் - ஐசுவரியத்தையும், கெடுக்கும் - அழித்துவிடும்; நல் உணர்வினை-நல்லறிவையும், தொலைக்கும்-நாசப் படுத்தும்; ஏமம் - இன்பம் நிறைந்த, நல் நெறி-நல்ல முத்திவழியை, தடுத்து - அடைத்து, இருள் - நரகத்தில், உய்த்திடும் - சேர்த்து விடும்; இதனால்-(இப்படிச் செய்கின்ற இதனுடைய) இச் செய்கையி னாலே, கருதில் - ஆராயுமிடத்து, (மனிதர்க்கு இதுவே கொடிய பகையாகும்; ஆதலால்) காமம் அன்றி-இந்தக் காமத்தையல்லாமல், ஒரு பகை-வேறொரு பகை, உண்டுகொல் - உண்டோ? (இல்லை).

(வி - ரை) மோக முள்ளவனுக்குப் பிணி முதலியன நேர்ந்து அழகு கெடுவதோடு, பிறர் மனையாளை விரும்பிச் செல்லுமிடத்து

அடி, உதை முதலிய துன்பங்களெல்லா முண்டாகும்; அது சம்பந்தமாகப் பலவித செலவுகளும் நேருமாகையினலே செல்வமுங் கெடும்; அதனல் கெட்டோ ருறவு அதிகப்படுமாதலால் அறிவுங் கெடும்; பாவம் அதிகரிப்பதால் முத்தியை அடைவதற்கு மார்க்க மில்லாமற் போம்; நரகமே நிச்சயமாகக் கிடைக்கும். ஆதலால், மனிதருக்கு மிக்க கெடுதிகளை விளைவிக்கத்தக்கது காமமேயன்றி வேருென் றின்ரும். காமத்தால் மேற்கூறிய தீங்குகளெல்லா முண்டாகுமென்பதை "பகைபாவ மச்சம் பழியென நான்கு, மிகவாவா மில்லிறப்பான் கண்," என்னும் வள்ளுவர் சொல்லும் தெள்ளிதில் விளக்கும்.

தந்திடும் - இதில் இடு - துணைவினை. சிறப்பும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது. இல் - இன்மை யென்னும் பண்புச்சொற் றிரிபு. உணர்வு - தொழிற்பெயர். நன்னெறி - பண்புத்தொகை இருள் - குணவாகுபெயராய் அதனையுடைய நரகத்தையுணர்த்திற்று. காமம் என்னுஞ் சொல் இரண்டிடத்திற்குங் கூட்டப்பட்டது. 'உண்டுகொல்' என்பதில் கொல் என்னு மிடைச்சொல் வினப்பொருளைத் தந்தது. (௬௧)

## இதுவுமது

[நேரிசை வெண்பா]

அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காமம்
அவற்றினு மஞ்சப் படும்.

(ப - ரை) அம்பும் - பாணமும், அவிர் - பரந்த, கதிர் - கிரணங்களையுடைய, ஞாயிறும் - சூரியனும், வெம்பி - மிகுந்த வெப்பமாகி, சுடினும் - சுட்டாலும், புறம் - உடம்பின் மேற்பக்கத்திலே, சுடும் -

வெதுப்பும்; காமம் - பெண்ணுசையானது, வெம்பி - அதிக வெப்பமாகி, மனத்தை-(உள்ளே யிருக்கிற) இதயத்தை, கவற்றி-வருத்தப்படுத்தி, சுடுதலால்-சுடுவதனுலே, அவற்றினும்-அந்த அம்பு சூரியன் ஆகியவற்றைக் காட்டினும், அஞ்சப்படும்-பயப்படத்தக்கதாம்.

(வி-ரை) பாணமும், சூரியனும் எவ்வளவு வெப்பமுடையவையாயினும் மேற்புறத்திலேயே சுடும்; காமமோ உட்புகுந்து மனத்தைக் கலக்கிச் சுடும்; ஆதலால், காமமானது வெப்பமுடைய எல்லாவற்றினும் அஞ்சத்தக்கதாம். இஃது இங்ஙனம் அஞ்சக்கூடியதாயிருத்தலினுலே மனிதர் ஒவ்வொருவரும் இதனை நீக்க முயற்சி செய்யவேண்டும்.

சுடினும் - இதிலுள்ள உம்மைகள் இழிவுசிறப்புப்பொருளது. அம்பு, அழல் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். அவிர் கதிர்-வினைத்தொகை. வெம்பி - தன்வினையெச்சம். கவற்றி-பிறவினை யெச்சம். அவற்றின்-ஐந்தாம் வேற்றுமை விரி; இது பண்பளவுப் பொருளில் வந்தது; இதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. அஞ்சப்படும், செயப்பாட்டு வினை. இது, நாலடியார்ச் செய்யுள் (௬௦)

இதுவுமது

[கொச்சகக் கலிப்பா]

அஞ்சனவை வேற்கண் ணரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகின்ஞருவர் நீங்கு நிலைமைத்தோ
எஞ்சல்புரி யாதுயிரை யெந்நாளு மீர்ந்திடுமால்
நஞ்சமினி தம்மவோர் நாளு நலியாதே.

(ப - ரை) அஞ்சனம்-மையை யணிந்த, வை-கூர்மை தங்கிய, வேல் - வேல்போன்ற, கண் - நேத்திரங்களையுடைய, அரிவையர் தம் - பெண்களுடைய, பேராசை - பெரிய விருப்பமாகிய காம

மானது, ஒருவர் - ஒரு மனிதருடைய, நெஞ்சு - மனத்தில், புகின்- புகுந்துவிட்டால், (அது) நீங்கும் நிலைமைத்தோ-அவரை விட்டு நீங் கும்படியான தன்மையை யுடையதோ? (ஒருபோதும் நீங்காது; பின்னை யென்செய்யுமெனில்) உயிரை - அவர்களுடைய உயிர்க்கு, எஞ்சல் புரியாது-கெடுதலைச் செய்யாது (அதாவது,உயிரைக் கொல் லாமல் வைத்துக்கொண்டு)எந்நாளும்-எந்தக் காலத்திலும், ஈர்ந்திடும்- அவர்களுடலைப் பிளந்து துன்பப்படுத்தும்; (ஆதலின், இவ்வாறு கொல்லாமற் கொடுமையைச் செய்யும் இதனைக்காட்டினும், உட் கொண்டவுடனே பின் துன்பப்படுதற் கேதுவில்லாமல் விரைவிற் கொன்றுவிடும்) நஞ்சம்-விஷமானது, இனிது-மிகவும் இனியதாம்; (இஃது அதனைப்போலக் கொல்லாமல் வைத்துக்கொண்டு) ஒரு நாளும் - ஒருதினமும், நலியாது - வருத்தமாட்டாது; (ஆதலால், பிறர்மனை விரும்புதலாகிய காமத்தை எவரும் ஒழித்துவிடல் வேண் டும்.

(வி - ரை) உயிருட னிருந்து நெடுங்காலம் வருந்துவதைக் காட்டினும் உடனே இறந்துவிடுவது நன்மை யாதலால், இங்கே உயிரைக் கொல்லாமல் வைத்துத் துன்புறுத்தும் காமத்தைக் காட்டி னும் உட்கொண்ட மாத்திரத்திற் கொல்லும் நஞ்சு நன்மையுடைய தாகக் கூறப்பட்டது; நஞ்சினுங் கொடியதென்னவே காமமானது அளவற்ற தீங்கை யுடையதென்பதும், ஒவ்வொருவரும் விட்டகலத் தக்கதென்பதும் பெறப்படும்.

வேற்கண் - உவமத்தொகை. 'எஞ்சல்' என்னுஞ் சொல் எச்ச மாக வாரமல் தொழிற்பெயராக வந்தமையால், 'உயிரை' என்பதை உருபுமயக்கமாகக் கொண்டு 'உயிருக்கு' என்று பொரு ளுரைக்கப் பட்டது. 'ஈர்ந்திடும்' என்னும் பயனிலைக்கேற்ப 'அவர்க ளுடலை' என்னுஞ் செயப்படுபொருள் வருவித் துரைக்கப்பட்டது. 'நீங்கும் நிலைமைத்தோ' என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. (௯௪)

இதுவுமது

[நேரிசை வெண்பா]

ஊரு ளெழுந்த வுருகெழுசெந் தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருள்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும்.

(ப-ரை) ஊருள் - ஒரூரிலே, எழுந்த - (எல்லோரும் சாகும் படி சுற்றி வளைந்துகொண்டு பற்றி) ஓங்கிய, உரு செழு - உருவம் பிரகாசிக்கின்ற, செந்தீக்கு - சிவந்த நெருப்புக்கு, (ஒருவன்) நீருள் குளித்தும்-தண்ணீருக்குள் மூழ்கி யிருந்தாயினும், உய்யல் ஆகும் - தப்பிப் பிழைக்கலாம்; (காமமாகிய நெருப்புக்கோ அங்ஙனந் தப்ப முடியாது) காமம் - பெண் விருப்பானது, நீருள் குளிப்பினும்-மேற் கூறியபடி தண்ணீருக்குள் மூழ்கி யிருந்தாலும், குன்று ஏறி - மலை யின்மீதேறி, ஒளிப்பினும் - மறைந்திருந்தாலும், சுடும் - உடலை வெதுப்பி வாட்டும்.

(வி - ரை) ஒரு ஊரிலுள்ள மனிதர்க ளெல்லோரும் சாகும் படி அவ்வூரைச் சுற்றி வளைந்து பெருநெருப்புப் பற்றியெழுந்த சம யத்திலும் மனிதர் தண்ணீர்க்குள்ளே மூழ்கியிருந்தால் அந் நெருப் பின் வெப்பத்தி லகப்படாமல் தப்பிப் பிழைக்கலாம். காமாக்கினி யானது ஒருவனிடத்தில் உண்டாய்விடும் பக்ஷத்தில் அதற்கவன் தப்ப முடியாது; நீருக்குள் மூழ்கினாலும், மலையிலேறி யொளித்தா லும் அவனை அது விடாமற் றொடர்ந்து வாட்டி வருத்தும்; இதனால் நெருப்பினும் காமங் கொடிதென்ப துணரப்படும். ஆதலால், சுக வாழ்வையும், நற்கதியையும் அடைய விருப்பமுள்ளோர் பிறர் மனை யைத்தலாகிய காமத்தை யொழித்தல் வேண்டும்.

'செந்தீக்கு' என்பதிலுள்ள நான்காம் வேற்றுமைக் குவ்வுரு பகைதொடர் பொருளில் வந்தது. 'குளித்தும்' என்பதிலுள் உம்மை விகற்பப்பட்ட சிறப்புப் பொருளில் வந்தது. "அசைநி பொருணிலை யிசைநிறைக் கொருசொல், இரண்டு மூன்றுநா கெல்லைமுறை யடுக்கும்," (ந. பொ. சச) என்னுஞ் சூத்திர வி பற்றி அச்சப் பொருணிலையால், 'காமஞ் சுடும்' என்னுஞ் சொ றொடர் இரண்டிடத்து அடுக்கிவந்த தாதலின் ஒரு தொடர்க்கும டும் பொருள் கூறப்பட்டது. இச் செய்யுள் நாலடியாரி லுள்ளது. (

## கோபங் கொடி தென்பது

[கலி விருத்தம்]

வெகுளியே யுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத மாய்க்குமால்
வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்.

(ப-ரை) வெகுளியே-கோபமே, உயிர்க்கு எல்லாம் - உயிர்க கெல்லாம், தீவினை - கொடுஞ் செய்கையை, விளைக்கும் - உண்டா கும்; வெகுளியே—, குணம் - நற்குணத்தையும், தவம்-தவத்தையும் விரதம் - விரதானுஷ்டானத்தையும், மாய்க்கும் - கெடுக்கும்; வெகு ளியே—, அறிவினை - புத்தியை, சிதைக்கும் - நாசப்படுத்தும் வெம்மை சால் - வெப்ப மிகுந்த, வெகுளியின் - கோபத்தைக்காட் னும், (மனிதர்க்கு) கொடும் பகை-கொடிய விரோதம், வேறொன்று மற்றொன்று, இல்லை - இன்றாம்; (ஆதலின், ஒவ்வொருவரும் இ கோபத்தை விலக்கவேண்டியது அவசியமாம்).

(வி - ரை) கோபமானது உயிரைப் போக்குதற்கும் ஏதுவ மாகையால் அஃது உயிர்கட்கெல்லாந் தீவினை விளைக்கக் கூடிய தாம். ஒருவன் குணம், தவம், விரதம், அறிவு ஆகியவைகளை யுடை

வனு யிருந்தாலும் அவனிடத்துக் கோப முண்டாய்விடும் பக்ஷத்தில் அவை யெல்லாங் கெட்டுப்போம்; இவ்வாறு இது மிக்க விரோதத்தைச் செய்யக்கூடியதா யிருத்தலினாலே இதனை ஒவ்வொருவரும் கைவிடவேண்டும்; அங்ஙனம் கைவிட்டார்க்கே குணம், தவம் முதலியன வெல்லாங் கைகூடும். கோபத்தால் கெடுதி யடைந்தவர்கள் பல ரென்பதை இதன் கீழ் வரும், 'கோபத்தாற் கௌசிகன்,' என்னுஞ் செய்யுள் விளக்கும்.

வேறு, இல்லை என்பன குறிப்பு வினைமுற்றுக்கள்; இவை ஐம்பால் மூவிடங்கட்குப் பொதுவாய் வரும்; "வேறில்லை யுண்டைம்பால் மூவிடத்தன," (ந-வி-உ0) என்னும் சூத்திரத்தா லுய்த்துணர்க. (ருக)

இதுவுமது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கின்
முதலற முருக்குமா போலத்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாஞ் சாய்க்கும்
ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையா
லதனையுள் ளடக்கவு மடங்கா
தோங்கிய கோபத் தீயினை யொக்கு
முட்பகை யுலகில்வே றுண்டோ.

(ப-ரை.) மூங்கிலில் - மூங்கில்களினிடத்தே, பிறந்த-(அவை யொன்றோடொன் றுராய்தலினால்) உண்டாகிய, முழங்கு - சப்திக்கின்ற, தீ - நெருப்பானது, மூங்கில் - அந்த மூங்கில்களினுடைய, முதல் அற-அவற்றிற் காதியாகிய வேரும் கிளையும் அற்றுப் போகும்

படி, (அவற்றை) முருக்குமாபோல-கொன்றழிப்பதுபோல, (ஒரு மனிதனிடத்தே உண்டாகும்) தாங்கரும் - சகித்தற்கரிய, சினத்தீ - கோபாக்னியானது, தன்னுள்ளே-தனக்குள்ளே, பிறந்து-தோன்றி (தன்னை யழிப்பதுமன்றி) தன் - தன்னுடைய, உறு - மிகுதியான கிளை எல்லாம் - சுற்றத்தவரை யெல்லாம், சாய்க்கும் - மாய்த்துக் கீழே வீழ்த்தும்; ஆங்கு - (அப்படி அஃதுண்டான) அவ்விடத்தே அதன் - அக்கோபத்தினது, வெம்மை - வெப்பத்தை, அறிந்தவர் - அறிந்த பெரியோர், கமையால்-பொறுமையால், அதனை-அக் கோபத்தை, உள் அடக்கவும்-உள்ளே அடங்கும்படி அடக்குதற்கும், அடங்காது - தணியமாட்டாது; (அது மிகவும் அதிகரித்து அதற்கிடங் கொடுத்தவனையும் அவன் கிளைகளையும் மேற் கூறியபடி அழித்தே தணியும் ஆதலால்) ஓங்கிய - அங்ஙனம் ஓங்கி யெழுந்த, கோபத்தீயினை - கோபாக்கினியை, ஒக்கும் - நிகர்க்கும், உட்பகை - உள் விரோதம், உலகில் - இவ் வுலகத்தில், வேறு - வேறாக, உண்டோ - இருக்கின்றதோ? (இல்லை. ஆதலால், எவரும் அக் கோபத்திற் கிடங் கொடுத்தல் தகாது).

(வி-ரை) மலைகளில் அடர்ந்திருக்கின்ற மூங்கிற் பண்ணையினிடத்தே மூங்கில்கள் ஒன்றோடொன் றுராய்வதனாலே நெருப்புண்டாவது இயற்கை; அங்ஙனம் பிறந்த நெருப்பானது, பற்றியெரிந்து, உராய்ந்த மூங்கில்களை யழிப்பதன்றிப் பக்கத்தி லிருந்த அவற்றின் கிளை மூங்கில்களையும் அழித்துவிடும்; அதுபோல, ஒரு மனிதனிடத்தே உண்டான கோபமானது பெரியோர் தடுத்தாலு மடங்காமல் அவனை யழிப்பதன்றி, அவனுடைய சுற்றத்தையும் ஒழித்துவிடும்; இதற்கு உதாரணமாகத் துரியோதனன், தான் கொண்ட கோபத்தினாலே வீஷ்மர், துரோணர், கிருபர், விதுரன் முதலிய பெரியோர் சொல்லையுங் கேளாமல் தான் அழிந்ததோடு, தன் சுற்றத்தாரையும் அழித்தமை காண்க. இங்ஙனம் கோபமானது

மிகவும் கொடுமை செய்யக் கூடியதா யிருத்தலினாலே அதனை ஒவ்வொருவரும் விட்டகலவேண்டும்.

மூங்கில்கள் பலவாயினும் சாதியொருமைபற்றி இங்கு ஒருமையாகக் கூறப்பட்டன; இரண்டு கண்ணுஞ் சிவந்தது என்பதுபோல. நாங்கரும் - இதில் நிலைமொழி யீற்றகரந் தொக்கது. முருக்குமா என்பது ஈறு குறைந்து வந்தது; இது, ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே," (ந. உயி. பு-கூ) என்னும் சூத்திர விதிப்படி வந்த செய்யுள் விகாரமாம். (௫௪)

## இதுவுமது

[கலி விருத்தம்]

கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினான்
கோபத்தா னகுட னுங் கோல மாற்றினான்
கோபத்தா விந்திரன் குலிசம் போக்கினான்
கோபத்தா விறந்தவர் கோடி கோடியே.

(ப - ரை) கௌசிகன்-விசுவாமித்திரன் கோபத்தால் - (தான் வசிஷ்டர்மீது கொண்ட) கோபத்தினாலே, தவத்தை - (தான் நெடுநாளாக மிகுந்த பிரயாசையுடன் தேடிய) தவசை, கொட்டினான் - சிதறினான் (அதாவது இழந்தான்); நகுடன்-(சந்திரகுலத்தரசனாகிய) நகுஷனென்பவனும், கோபத்தால்-(தான் அகங்காரத்தாற் கொண்ட) கோபத்தினாலே, கோலம் - தன்னுடைய வடிவத்தை, மாற்றினான்-வேறுபடுத்திப் பாம்பின் வடிவத்தை யடைந்தான்; இந்திரன்-தேவர்க்கதிபன், கோபத்தால் - தானொருகாலத்திற் கொண்ட வெகுளியினாலே, குலிசம் - தன்னுடைய வச்சிராயுதத்தை, போக்கினான் - கைவிட்டு அவமானத்தை யடைந்தான்; (இன்னும்) கோபத்தால்-இந்தக் கொடிய சினத்தினாலே, இறந்தவர்-உயிர்விட்டவர்கள், கோடி கோடி-

கோடானுகோடி பேர்களாவர், (ஆதலின், தீமையின்றி வாழ விருப்ப முடையோர் கோபத்தை யொழித்தல்வேண்டும்).

(வி-ரை) விசுவாமித்திரன் தனக் கேற்பட்ட கோப மிகுதியி னாலே வசிஷ்டரோடு சபதஞ்செய்து தவத்தையெல்லா மிழந்தனன்; நகுஷனென்னு மரசன் நூறு அசுவமேத யாகங்களைச் செய்து இந்திரன் பதத்தை யடைந்தும் முனிவர்களிடம் தன்னுடைய கோபத்தைக் காட்டியபடியால் அகஸ்தியருடைய சாபத்தைப் பெற்று அப்பதத்தை இழந்து பாம்பாயினன்; இந்திரன் ஒருகாலத்தில் உக்கிர பாண்டியரோடு கோபங்கொண்டு சண்டைசெய்து தன்னுடைய வச்சிராயுதத்தைப் போக்கினன்; இன்னுங் கோபத்தால் எண்ணிறந்த பேர் உயிர் துறந்தனர்; இவ் விஷயங்களை யெல்லாம் நோக்கும்போது கோபமே வாழ்வு கெடுதலுக்குக் காரணமாம்; ஆதலால், உலகத்தில் துன்பமற்ற வாழ்வை யடையவிரும்புவோர் கோபத்தைக் கைவிடல் வேண்டும். கௌசிகன் தவத்தை யிழந்தது, அரிச்சந்திரபுராணம் மீட்சி காண்டத்தா னுணரப்படும்.

[நகுஷன் நற்பத மிழந்து பாம்பானதை]

"முகுட மும்பெருஞ் சேனையுந் தரணியு முற்றும்
சகுட நீரெனச் சதமகம் புரியருந் தவத்தோன்
நகுட னுமவே னராதிப னுகருக் கரசாய்
மகுட மேந்திய குரிசிலா யுவின்றிரு மைந்தன்."

"புரந்த ரன்பதம் பெற்றபின் புலோமசை முயக்கிற்
கிரந்து மற்றவ ளேவலின் யானமுற் றேறி
வரந்த ருங்குறு முனிமுனி வாய்மையான் மருண்டு
நிரந்த ரம்பெரும் புயங்கமா னவனுமந் நிருபன்."

என்னும் வில்லிபுத்தூராழ்வார் பாரதம் குருகுலச் சருக்கச் செய்யுட்களானும்,

"மனிதரின் மகவா னாகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை யெண்ணான் புன்கணேய் விளைவும் பாரான்
கனிதரு காமந் துய்க்குங் காதலால் விரையச் செல்வான்
நனிதயி ராணி பாற்கொண் டேகுமின் சர்ப்ப வென்றான்."

"சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுன் னடக்குந் தென்றல்
வெற்பனா முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த லோடும்
பொற்பமா சுணவே யாகிப் போயினா னறிவி லாத
வற்பரா னவர்க்குச் செல்வ மல்லது பகையே றுண்டோ."

என்னும் திருவிளையாடல், இந்திரன் பழிதீர்த்தபடலச் செய்யுட்களானும் உய்த்துணர்க.

[இந்திரன் குலிசம் போக்கிய கதை]

"தானவர் பகைவன் மோக சரந்தொடுத் தெறிந்தா னாக
மீனவ னதனை ஞான் வாளியால் விளித்து மாய்ந்து
போனபின் மற்போ ராற்றப் புக்கனர் புக்கார் தம்மில்
வானவன் மண்ணி னான்மேல் வச்சிரம் வீசி யார்த்தான்."

"காய்சின மடங்க லன்னான் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசந் தன்னை வீழ்த்தது வீழ்த்தான் சென்னித்
தேசினன் மகுடந் தள்ளிச் சிதைத்தது சிதைத்த லோடுங்
கூசின னஞ்சிப் போனான் குன்றிற கரிந்த வீரன்."

என்னுந் திருவிளையாடல், இந்திரன் முடிமேல் வளையெறிந்தபடலச் செய்யுட்களா னுணரப்படும். இன்னும், கோபத்தால் எண்ணிறந்தவர்க ளழிந்ததை இதிகாசபுராண கதைகளா லுய்த்துணர்க.

கோபம் வெறியுள்ளதாதலால் அதனால் நிகழும் செய்கையெல்லாம் வெறியுள்ளார் செய்கைபோலும் என்பது தோன்ற, 'கௌசி

கன் தவத்தை யிழந்தான்' என்னாது, 'தவத்தைக் கொட்டினான்' என்று இச் செய்யுளை யியற்றினோர் கூறினர். இதனால் கோபத்தின் இழிவு நன்கு புலப்படும். நகுடன் - நகுஷனென்னும் வடமொழித் திரிபு. நகுடனும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. கோடி கோடி - கோடிக்கணக்கான கோடி; இஃது எண்ணதிகத் தன்மையைக் காட்டும் ஒருவகை எண்ணளவுப் பெயர்; இஃது ஆகு பெயராய் இக்கணக்குள்ள மனிதரை யுணர்த்திற்று. (௯௬)

## விருந்தினரை உபசரிக்கும் முறைமை

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

விருந்தின னாக வொருவன்வந் தெதிரின்
வியத்தனன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென வுரைத்த
லெழுதல்முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற் றவன்ற னருகுற விருத்தல்
போமெனிற் பின்செல்வ தாதல்
பரிந்துநன் முகமன் வழங்கலிவ் வொன்பா
னொழுக்கமும் வழிபடும் பண்பே.

(ப - ரை) ஒருவன் - ஒரு மனிதன், (ஒருவன் வீட்டிற்கு) விருந்தினனாக-விருந்தாளியாக, வந்து எதிரின் - வந்தெதிர்ப்படின், (அவ் வீட்டுக்காரன்) வியத்தல் - அவ் விருந்தினனுடைய வரவைப் பற்றி) அதிசயித்தலும்; நல் மொழி - நல்ல பிரிய வசனங்களை, இனிது - இனிதாக, உரைத்தல் - கூறுதலும்; திருந்துற - திருத்தமாக, நோக்கல் - (அவனைப் பிரியத்தோடு) பார்த்தலும்; வருக என - வருவீராக என்று, உரைத்தல் - சொல்லுதலும்; எழுதல் - (அவனைக் கண்ட மாத்திரத்தில்) இருக்கைவிட் டெழுந்து மரியாதை செய்த

லும்; முன் - அவனுக்கெதிரே, மகிழ்வன - அவன் மகிழக்கூடிய காரியங்களை, செப்பல் - சொல்லுதலும்; பொருந்தும் - நேயமாகப் பொருந்துகின்ற, அவன்றன் - அவனுடைய, அருகுற - சமீபத்தில் தன்னுடைய இருக்கையானது பொருந்த, இருத்தல்-உட்காருதலும்; போம் எனின்-அவன் விருந்துண்டு முடிந்தபின் போவானேயாகில், பின் செல்வதாதல் - பின் சென்று வழிவிடுதலும்; பரிந்து-(அப்படி வழிவிடும்போது) விரும்பி, நல் - நல்ல, முகமன்-உபசார வார்த்தைகளை, வழங்கல் - சொல்லுதலும், (ஆகிய) இ ஒன்பான் - இந்த ஒன்பது வகை, ஒழுக்கமும்-நடக்கைகளும், (உடைத்தாயிருத்தல்) வழிபடும்-(அவ் விருந்தினனைப்) பூசிக்கும், பண்பு-முறைமையாம்; (ஆதலின், விருந்தினரை உபசரிக்கும் இல்லறத்தார் ஒவ்வொருவரும் இவ்வொன்பது வகை ஒழுக்கங்களையும் கைக்கொள்ளவேண்டும்.)

(வி-ரை) ஓர் இல்லறத்தானிடத்தே விருந்தினனாகச் செல்பவனுக்கு அவன் இவ்வொன்பதுவகை ஒழுக்கங்களுடனே விருந்தளித்து உபசாரஞ் செய்யானாயின் அவ் வில்லறம் பயனற்றதாம். ஆதலின், இல்வாழ்வோன் இவ்வொன்பது முறைமைகளையும் அனுசரித்து விருந்தினனை உபசரித்தல்வேண்டும்; அவனுடைய இச் செய்கைக்கு அவன் மனைவியும் இணங்கியிருத்தல்வேண்டும்;

"இருந்து முகந்திருத்தி யீரோடு பேன்வாங்கி
விருந்து வந்ததென்று விளம்ப - வருந்திமிக
ஆடினாள் பாடினாள் ஆடிப் பழமுறத்தாற்
சாடினா ளோடோடத் தான்.''

என்ற ஔவையாராற் கூறப்பட்ட ஒரு மூதேவி போன்ற மனைவி அவனுக் கமைந்திருப்பின் அவன் மேற் கூறியபடி விருந்தினனை உபசரிப்பினும் அது சிறப்புறாது. சில இல்லங்களில் உள்ளவர் விருந்தினரைக் கண்டால் மறைவர்; சிலர் முகமலர்ச்சி யின்றி மன

வருத்தத்துடன் அவருக்கு அன்னமிடுவர்; சிலர் விருந்ினர்க்கு அன்ன மிடினும் தம்மவர்க் குயர்வாகவும், வந்தவர்க்குத் தாழ்வாகவும் பார பக்ஷமாகவும் இடுவர்; சிலர் தற்பெருமையால் விருந்தினர் மனம் வருந்தும்படி பலவித தாழ்ந்த செய்கைகளோடு அவர்க்கு அன்ன மிடுவர்; சிலர் வந்த விருந்தினர் இருவருள் ஒருவரை மரியாதையாகவும், ஒருவரைத் தாழ்மையாகவும் நடத்துவர்; சிலர் இடம்பர்களைக் கொண்டாடி விவேகிகளைத் தாழ்மைப்படுத்துவர்; இவர்க ளெல்லோரும் மிருக வகுப்பிற் சார்வாரேயன்றி மனித வகுப்பிற் சாரமாட்டார். இவர்களுக்குக் கிடைப்பது நரகமேயன்றி வேறொன் றின்றாம்; முகமலர்ச்சியோடு மேற்கூறிய ஒன்பது வகை ஒழுக்கங்களையும் அனுசரித்து விருந்தினரை உபசரிக்க வேண்டுமென்பதை,

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்"

என்னுந் திருக்குறட் செய்யுளா னுணர்க, இங்ஙனம் விருந்தினர், பெரியோர் முதலியவர்களை உபசரித்தற்கு ஒன்பது வகை ஒழுக்கங்கள் வேண்டுமென்பதை,

"உத்தமர்க் கொன்பது புண்ணியத்தா லீவ,
துத்தம தான மெனல்."

என்னுந் திருக்குறளும்,

"அறவியாற் காறு மூன்று மமைந்தநா லமிர்த மேந்த,"

"ஒன்பது வகையி ேனுதிற் றுத்தமர்க் காகு மார்ந்த,"

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுட்களி னடிகளும் நன்கு விளக்கும்.

இங்கே ஒன்பது வகை ஒழுக்கங்களைக் கைக்கொள்ள வேண்டு மென்பதற் குதாரணமாகக் குறளையும், சீவகசிந்தாமணிச் செய்யுட் களினடிகளையும் எடுத்து உதாரணமாகக் காட்டியிருப்பினும், இங் குக் கூறிய ஒழுக்கங்களுக்கும் சீவகசிந்தாமணி முதலியவற்றிற் கூறப்பட்டிருக்கும் ஒழுக்கங்களுக்கும் பேத முண்டு.

> "எதிர்கொள விடநனி காட்டல் கால்கழீஇ
> யதிர்பட வருச்சனை யடியின் வீழ்தல்
> மதுரநன் மொழியொடு மனமெய் தூயரா
> யுதிர்கநம் வினையென வுண்டி யேந்தினார்."

எனச் சீவகசிந்தாமணி 2828 ஆம் செய்யு ளுரையில் உதாரணமாக வருஞ் செய்யுளால், எதிர்கொள்ளல், அமரும் இடங்காட்டல் (அதா வது ஆசனமளித்தல்), கால் கழுவுதல், அருச்சனை புரிதல், அடியில் வீழ்ந்து வணங்கல், உபசார வார்த்தை கூறல், மனந் தூயராதல், மெய் தூயராதல், அமுதமேந்தல் ஆகிய ஒன்பதும் ஒழுக்கங்களாகக் காணப்படுகின்றன. இவை ஜைனமதக் கொள்கைப்படி ஏற்பட்டன வாம்; இவற்றை ஜைனர்கள் உத்தமராகிய பெரியோர்க் குரியவை யெனவும், நவ புண்ணியக் கிரம மெனவுங் கூறுவர். வேறு சில நூல்களில்: எதிர்கொள்ளல், பணிதல், ஆசனத்திருத்துதல், தாள் கழுவல், அருச்சித்தல், தூபங் கொடுத்தல், தீபங் காட்டல், புகழ் தல், அமுதமேந்தல் என்கிற ஒன்பதும் புண்ணிய வொழுக்கங்க ளெனவும், இவை துறந்தோர்க்குச் செய்தற் குரியன வெனவும் கூறப்பட் டிருக்கின்றன. இவை சைவசமயம் முதலிய சமயங்க ளின் கொள்கைப்படி ஏற்பட்டவைகளென விளங்குகின்றன. இவ் விருவகைகளுள்ளும் சிறிது விகற்பங் காணப்படினும் எல்லாம் நற் செய்கைகளே யாதலால் இவ்விரண்டு வகைகளும் பெரியோரிடத் தே செய்தற் குரியனவா மென்றே கொள்க. இவை பெரியோர்க்கா மெனவே இந்த விவேகசிந்தாமணிச் செய்யுளிற் கூறப்பட்டவை

சமத்துவமான விருந்தினரிடத்தே செய்யத்தக்கனவா மென்பது தானே ஏற்பட்டது. ஆதலின், உதாரணச் செய்யுட்களில் காட்டப் பட்ட வொழுக்கங்களைப் பெரியோரிடத்தும், இவ் விவேகசிந்தா மணிச் செய்யுளிற் கூறப்பட்ட வொழுக்கங்களைச் சமத்துவமான விருந்தினரிடத்தும் நடத்திப் புண்ணியத்தைத் தேடுதல் முறைமை யாம். விருந்தினரை உபசரிப்பதினும் பெரியோரை உபசரித்தல் மிகவும் விசேஷமுடைய தாகையால் இவ் விஷயங்களும் இங்கே வருவித்து விரித் தெழுதப்பட்டன. (டுசு)

இன்ன இன்ன விடத்தில் இன்ன இன்ன பக்கம்
தலை வைத்துப் படுக்கவேண்டு மேன்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

இணையிறன திலிலொருவன் கீழ்த்திசையிற்
றலைவைக்க வினிய மாமன்
மணிதிகழ்பொன் னெடுமாடத் துறைந்திடிற்றென்
றிசையதனில் வைக்க வேண்டும்
அணிபெறுவேற் றாருறையிற் குடதிசையிற்
சாரவைக்க வடுத்தேதப் போதும்
உணர்வின்றி யுத்தரத்தே தலைவைத்துத்
துயில்புரித லொண்ணு தாமால்.

(ப - ரை) ஒருவன்-ஒரு மனிதன், இணையில்-ஒப்பற்ற, தனது இல்லில் - தன்னுடைய வீட்டில், கீழ் திசையில் - கிழக்குத் திக்கில், தலை வைக்க - தலை வைத்துப் படுக்கவேண்டும்; இனிய-இனிதாகிய, மாமன் - மாமனுடைய, மணி திகழ்-இரத்தினங்கள் பதிக்கப்பெற்று விளங்காநின்ற, பொன் - பொன்னுலாகிய, நெடு-நீண்ட, மாடத்து - மாளிகையில், உறைந்திடின்-தங்கினுல், தென் திசையதனில்-தெற்

குத் திக்கில், வைக்கவேண்டும்-தலைவைத்துப் படுக்கவேண்டும்; அணி பெறு - அழகைப் பெறுகின்ற, வேற்றூர்-புறநகரிலே, உறையின் - தங்கினால், குடதிசையில்-மேற்குத் திக்கில், சார - பொருந்தும்படி, வைக்க-தலை வைத்துப் படுக்கவேண்டும்; எப்போதும் - எக்காலத்திலும் (எவ்விடத்திலும்), உணர்வு இன்றி - புத்தி யில்லாமல், உத்தரத்தே-வடக்குத் திக்கில், அடுத்து - நெருங்கி, தலை வைத்து-சிரத்தைச் சேர்த்து, துயில் புரிதல் - தூங்குதல், ஒண்ணாதாம்-கூடாத செய்கையாம்.

(வி-ரை) ஒரு மனிதன், தன்னுடைய வீட்டில் கிழக்குத்திக்கிலும், மாமன் வீட்டில் தெற்குத் திசையிலும், வேற்றூரில் மேற்குத் திசையிலும் தலை வைத்துப் படுக்கவேண்டும்; வடக்குத் திசையில் எப்போதும் எவ்விடத்தும் தலைவைத்துப் படுக்கலாகாது. கிழக்குத் திசையில் சிரம் வைத்துப்படுப்பதால் ஐசுவரிய முண்டாகும்; தெற்குத் திசையில் சிரம் வைத்துப் படுப்பதால் ஆயுள் விருத்தி யுண்டாகும்; மேற்குத் திசையில் தலை வைத்துப் படுப்பதால் பிரபலம் விருத்தியாகும்; அறிவில்லாமல் வடக்குத் திசையிற் றலைவைத்துப் படுத்தால் வியாதியும் மரணமு முண்டாகும். சில நூல்கள், "தானிருக்கு மிடத்தில் தெற்கிலும், மாமியார் வீட்டில் கிழக்கிலும், யாத்திரையில் மேற்கிலும் சிரம் வைத்துப் படுத்தல் உத்தமம்" எனக் கூறுகின்றன. இவற்றில் எவ்வித பேதமிருப்பினும் கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய மூன்று திசைகளிலும் தலை வைத்துப் படுத்தல் உத்தமமும், வடக்குத் திக்கில் தலை வைத்துப் படுத்தல் கெடுதியு மாதலால் வடக்கன்றி மற்ற திசைகளில் தலை வைத்துப் படுத்தல் சுகத்திற் கேதுவாம். இவ் விதிகள் சோதிட நூல்களிற் கூறப்பட்டவை.

வைக்க - வியங்கோள் வினைமுற்று. ஒண்ணாதது என்பது ஒண்ணாது' எனத் தொகுத்தலாகி வந்தது. (கஎ)

## கடவுள் பக்தி யில்லாத நெஞ்சு அதனை யுடையார்க்குத் துணையில்லை யென்பது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவு
மளவிலாப் பகைநமக் கெனவுந்
துன்பமார் சோக மோகமே முதலாந்
துயரெலாம் விளைநில மெனவும்
இன்பவீ டெய்தி டற்கிடை யூறு
மிருளுமென் றியம்புவர் பெரியோர்
துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே
துணையிலை துணையிலை யெனக்கே.

(ப-ரை) பெரியோர்-(உலகத்தில் உண்மை மார்க்கங்களை யறிந்த பெரியோர்கள், அன்பு இல்லா-(பகவானிடத்தே) அன்பில்லாத நெஞ்சம் - மனமானது, அரும் - தீர்தற்கரிதாகிய, பிணி எனவும் - நோயென்றும்; நமக்கு—, அளவு இல்லா-கணக்கில்லாத, பகை எனவும்-பகையானதென்றும்; துன்பம் ஆர் - உபத்திரவம் பொருந்திய, சோகம் - சோம்பல், மோகம் - பெண்ணாசை, முதலாம்-முதலாகிய துயர் எல்லாம் - கிலேசங்க ளெல்லாம், விளை - உண்டாகக்கூடிய, நிலம் எனவும் - வயல் என்றும்; இன்பம்-பேரின்பம் நிறைந்த, வீடு மோக்ஷவீட்டை, எய்திடற்கு-அடைதற்கு, (வழியில்) இடையூறும் தடையாகும், இருளும் என்று - இருட்டுமோமென்றும், இயம்புவர் - கூறுவார்கள்; (ஆதலால்) துன்பில்லா-துயர மில்லாத, இறைவர்க்கு கடவுளர்க்கு, அன்பு இல்லா.- அன்பில்லாத, நெஞ்சே-என்னுடைய மனமே! (நீ) எனக்கு—, துணை இல்லை துணை இல்லை - சகாயமாக மாட்டாய்! சகாயமாகமாட்டாய்!!(நீ எனக்குத் துணையுள்ளதா யிருக்க வேண்டுமானல் விரைவில் பகவானிடத்து பக்தியைச் செலுத்துவாயாக).

(வி-ரை) பகவானிடத்தே அன்பைச் செலுத்தாத நெஞ்சம் பயனற்றதாமென்பது இச்செய்யுட் கருத்து. இச்செய்யுளை யியற்றினோர் தம் நெஞ்சை நோக்கிக் கூறியதாக இதனை இயற்றியதானது இதனைப் படிக்கும் ஒவ்வொருவரும் இங்ஙனமே கூறித் தம் நெஞ்சைக் கடவுளர் பக்கந் திருப்பவேண்டு மென்பது குறித்தேயாம். ஆதலின், இதனை வாசிக்கும் ஒவ்வொருவரும் தங்கள் மனத்தை நோக்கி இங்ஙனங் கூறி அதனை இறைவன்பாற் றிருப்புக. (கூஅ)

அன்புடனிடும் அன்னமே சிறந்த தென்பது

[எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

கெட்டசாறு தவிடுகஞ்சி கிருமியுண்ட மாவறைக்
  கீரைவேர் தெளிந்தமோர் முறிந்தபாகு கிண்டுமா
இட்டசோறு கொழியலுப் பிடாதபுற்கை யாயினும்
  எங்குமன்ப தாகநுங்க வின்பமா யிருக்குமே
பட்டபாகு பசுவினெய் பருப்புமுக் கனிக்குழாம்
  பாளிதங்க டாளிதங்கள் பண்ணிகார வகையுடன்
அட்டபாற் குழம்புகன்ன லமுதமோடு முதவினும்
  அன்பினோ டளித்திடாத வசனமென்ன வசனமே.

(ப-ரை) (ஒருவர் அன்புடனே யிடுபவை) கெட்ட சாறு-பதங்கெட்டுச்சேப்போன குழம்பு; தவிடு -' அரிசி முதலியவற்றி லிருந்த தவிடு; கஞ்சி-நொய்யரிசிக் கஞ்சி; கிருமி உண்ட - புழுவுண்டு கெட்டுப்போன, மா - கேழ்வரகு முதலிய தானியங்களின் மா; அறைக்கீரை வேர்-வேகவைத்துச் சமைத்த அறைக்கீரையின் வேர்க்கட்டை; தெளிந்த மோர்-நீர் அதிகமாகக் கலந்து தெளிந்துபோன மோர்; முறிந்த பாகு - உப்பு முதலியன வீழ்ந்து முறிந்து கெட்டுப்போன பால்; கிண்டும் மா - கிண்டுகின்ற மா (அதாவது களிக் கிண்டும் பொருட்டு அடுப்பிலிட்டு வெந்தும் வேகாமலு மிருக்கின்ற மா);

கொழியல் இட்ட- தவிடு நீங்காத அரிசி யிட்டுச் சமைத்த, சோறு - அன்னம்; உப்பு இடாத-உப்புப் போடாத, புற்கை-கூழ், ஆயினும்- (முதலியவைகளே) ஆனாலும், (அவற்றை யேற்றுக்கொள்வோர்) எங்கும் - எவ்விடத்தும், அன்பதாக - (அவற்றை யிடுவோர் மேற் கூறியபடி செலுத்தும்) அன்பானது உண்டாக, (அதாவது, அவர் கள் அன்புடனே யிட) நுங்க - அவற்றை யுட்கொள்ள, இன்பமா யிருக்கும் - (அவை மனத்திற்கு மிகவும்) இனிமையாயிருக்கும்; (அன்பில்லாதவர்) பட்ட - காய்ச்சுதலினு லுண்டாகிய, பாகு-வெல் லம் முதலியவற்றின் குழம்பு, பசுவின் நெய் - பசுநெய், பருப்பு - வேகவைத்து மசித்த பருப்பு, முக்கனி - மா பலா வாழை ஆகிய மூவகைக் கனிகளின், குழாம் - கூட்டங்கள், பாளிதங்கள் - குழம்பு கள், தாளிதங்கள் - தாளித்த கறிகள், பண்ணிகார வகையுடன்-அப்ப வருக்கங்கள் ஆகியவற்றுடனும், அட்ட - காய்ச்சிய, பால் குழம்பு - திரட்டுப்பால், கன்னல் - சருக்கரை, அமுதமோடு - சோறு ஆகிய வைகளுடனும், உதவினும் - ஒருவர்க் குணவளிப்பினும், அன்பி னேடு - மேற்கூறியபடி அன்புடனே, அளித்திடாத - உதவாத, அசனம் - இந்தப் போசனம், என்ன அசனம் - என்ன போசனம்?, (திருப்தியான போசன மாகாது; இதனை யுண்பவர்க்கும் இனிமை யுண்டாகாது).

(வி - ரை) ஒருவர் மற்றொருவர்க்கு அன்புடனே தவிடு கஞ்சி முதலியவற்றை அளிப்பினும் அவற்றை அவர் உட்கொள்வ தால் மிகவும் இனிமை யுண்டாகும். அன்பில்லார் ஒருவர்க்கு நெய் பாலுடன் உணவளிப்பினும் அவர் அவ்வுணவை உண்பதால் திருப்தி யுண்டாகமாட்டாது. அன்பில்லாரிடம் உணவுண்ணல் திருப்தியாக மாட்டா தென்பதை,

"உண்ணீ ருண்ணீரென் றுபசரியார் தம்மனையி
லுண்ணாமை கோடி பெறும்."

ன் னும் ஔவையார் திருவாக்கா லுணர்க. அன்பில்லா ரிட்டவுணவு
ாழ்ந்ததாயினும் இனிமையும் உயர்வு முடையதா மென்பதை,

"வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த மோரும் - திறமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்து பரிந்திட்டசோ
றெல்லா வுலகும் பெறும்."

ன ஔவையார், அன்புட னுணவளித்த வேளூர்ப்பூதனைப் புகழ்ந்து
ாடிய செய்யுளா னுணர்க.

'இட்டசோறு கொழியல்' என்பது, 'கொழியல் இட்டசோறு'
ன மாற்றிப் பொரு ளுரைக்கப்பட்டது. கொழியல் - தவிடு நீக்கப்
டாத அரிசி. தாளிதம்-தாளித்தல்; இது தொழிற்பெயர்; இது ஆகு
பயராய்த் தாளித்தலையுடைய கறிவகைகளுக்காயிற்று. 'என்ன
சனம்' என்பதில், 'என்ன' என்னும் வினாவிடைச்சொல் எதிர்
றைப்பொருளில் வந்தது. (ருக)

தொழின்முயற்சி ஒவ்வொருவர்க்கும் அவசியமா மென்பது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம்
வாய்க்கவென் றனுதின முயற்சி
தானுஞற் றவனேற் கடவுளு மதனைத்
தந்தளிக் குவனதா லன்றே
ஆனபே ரறிஞர் திருவினை முயற்சி
யாக்குமம் முயற்சியல் லாமை
ஈனமா ரின்மை புகுத்திடு மாலென்
றியாருநன் குணர்தர நவில்வார்.

(ப - ரை) மானிடன் ஒருவன் - மனிதனாகப் பிறந்த வொரு
ன், தனக்கு—, அரும் - கிடைத்தற் கருமையான, செல்வம் -

ஐசுவரியம், வாய்க்க என்று - பொருந்தவேண்டுமென்று நினைத்து அனுதினம் - தினந்தோறும், தான்—, முயற்சி-முயற்சியை, உஞ் றுவனேல் - செய்வானேயானால், கடவுளும் - விரும்பியவற்றை கொடுக்கும் கர்த்தனாகிய பகவானும், அதனை - அவன் விரும்பி அந்த ஐசுவரியத்தை, தந்து - கொடுத்து, அளிக்குவன் - காப்பாற் வான்; அதாலன்றோ — (அப்படி ஒருவன் செய்யும் முயற்சிக்கு கடவுள் ஐசுவரியத்தைக் கொடுத்துக் காப்பாற்றுவார் என்ற) அந் அபிப்பிராயத்தாலல்லவா, ஆண-உலகத்தி லுண்டாகிய, பேர் அறிஞர் பெரிய அறிவாளிகள், முயற்சி-தொழின் முயற்சியானது, திரு வினை-செல்வத்தை, ஆக்கும்-(அம்முயற்சி யுள்ளவனுக்கு) உண்டா கும்; அம் முயற்சி அல்லாமை-அந்த முயற்சி யல்லாதிருத்தல், ஈனப ஆர்-இழிவு பொருந்திய, இன்மை-வறுமையில், புகுத்திடும்-முயற் யில்லானைப் புகுவிக்கும், என்று - என விளக்கி, யாரும் - எவரும் நன்கு உணர்தர-நன்றாக உணர்ந்துகொள்ளும்படி, நவில்வார் - எ பொழுதும் வற்புறுத்திக் கூறுவார்கள், (ஆதலால், உலகத்தில் மானிடராகப் பிறந்த ஒவ்வொருவரும் தொழின் முயற்சியை அவசி யந் தேடல்வேண்டும்).

(வி-ரை) உலகத்தில் மானிடதேக மெடுத்த ஒவ்வொருவரு தேகமெடுத்ததற்குரிய பயனாக நன்முயற்சிகளைச் செய்யவேண்டும் அங்ஙனஞ் செய்யின் அம்முயற்சியுடையோருக்குக் கடவுள் செல்வ தைக் கொடுத்தருளுவான்; அங்ஙனம் முயற்சி யில்லாதவர்க்கு வறுமையே அதிகரிக்கும். இது நிச்சய மாதலால் இவ் விஷயத்தை அறிஞர் அடிக்கடி கூறுவர்;

"முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்,"

என்னுந் திருக்குறளால் இதனை யுணர்க.

அளிக்குவன் - உயர்திணை ஆண்பாற் படர்க்கை யொருமை யுடன்பாட்டு வினைமுற்று. அளி-பகுதி, அன்-விகுதி, கு-சாரியை, ககரத் தோற்றமும், வகர வுடம்படுமெய்த் தோற்றமும் சந்தி. 'திரு வினை முயற்சி ஆக்கும்' என்பது, 'முயற்சி திருவினை யாக்கும்' என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. இத் தொடர் இங்கு உதாரணங் காட்டிய திருக்குறளடியி லுள்ளது. (சுo)

இதுவுமது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

கடவுளீ குவனென் றெண்ணிநித் தியமுங்
 கருதுறு முயற்சிசெய் யானேல்
அடலுறு செல்வ மடைகுவ னேகொ
 லருங்கலத் திட்டபா லடிசில்
மிடலுறு கரத்தா லெடுத்துணு தெங்ஙன்
 வீங்கும்வெம் பசிப்பிணி யொழிப்பன்
உடல்பவந் தனக்கோ ராகர மாமென்
 றுடனனி வாட்டுமெய்த் தவத்தோய்.

(ப - ரை) உடல் - தேகமானது, பவந்தனக்கு - பிறப்பிற்கு, ஓர் ஆகரமாம்-ஒப்பற்ற உறைவிடமாம், என்று-என்று கருதி, உடல்-அத் தேகத்தை, (பிறவிக் கிடமில்லாமற் போகும்படி) நனி - மிகுதியாக, வாட்டும் - விரதம் முதலியவற்றால் வாட்டுகின்ற, மெய்-உண்மையாகிய, தவத்தோய்- தவத்தினையுடையாய்!, (முன் செய்யுளிற் கூறப்பட்ட மனிதன்) கடவுள்-பகவான், (எல்லாவற்றிற்குங் காரணகர்த்தனா யிருப்பதனாலே) ஈகுவன் என்று-(முயற்சி செய்யாதிருந்தாலும்) பொருளைக் கொடுப்பான் என்று, எண்ணி - மூடமதியால் நினைத்து, நித்தியமும்-தினந்தோறும், கருதுறு-கருதுகின்ற, முயற்சி - தாளாண்மையை, செய்யானேல் - செய்யாதிருப்பானாகில், (அவன்) உடல் உறு-வெற்றி பொருந்திய, செல்வம்-ஐசுவரியத்தை த்

அடைகுவனேகொல்-அடைவானே?, அரும்-அருமையாகிய, கலத்து இட்ட-பாத்திரத்திலிட்ட, பால் அடிசில்-பாற்சோற்றை, மிடல் உறு-வலிமை பொருந்திய, கரத்தால்-கையினாலே, எடுத்து உண்ணாது - ஒருவன் எடுத்துண்ணாமல், எங்ஙன்-எப்படி, வீங்கும்-அதிகரிக்கின்ற, வெம்-வெம்மையாகிய, பசிப்பிணி - பசி நோயை, ஒழிப்பன்-நீக்குவான்?, (ஒருபோதும் நீக்கமாட்டான்; இதுபோல், கடவுள் கொடுப்பானென்று முயற்சி யில்லாதிருப்பவனும் ஐசுவரியத்தை யடையமாட்டான்; ஆதலால், எவரும் முயற்சி யில்லாதிருத்தல் கூடாதாம்.)

(வி - ரை) பொற்கலத்திட்ட பாற்சோற்றை ஒருவன் கரத்தினால் எடுத்துண்டால் மாத்திரம் அவனுடைய பசி தணியும்; அங்ஙனமுண்ணாமல் கடவுள் ஊட்டுவனென்று பேசாதிருப்பின் அப்பசிநோய் தணியாது; அதுபோலக் கடவுள் அவனவன் செய்யும் நல்வினையின் பயனாகச் செல்வத்தைக் கொடுக்கக் கூடியவனா யிருப்பினும் அதற்குரிய முயற்சியைச் செய்தால் மாத்திரந்தான் அம்முயற்சியின் வாயிலாக அதனைக் கொடுப்பன். அங்ஙனம் முயற்சி செய்யாவிடின் செல்வம் தானே வந்து ஒருவனிடத்திற் சேரமாட்டாது. தேகமெடுத்தது நற்கிரியைகளைச் செய்து புண்ணியத்தைத் தேடி இகத்திலும் பரத்திலும் சுகத்தை யடைதற்கேயாம்; ஆதலால், நற்காரியங்களில் முயற்சி செய்யவேண்டும். அங்ஙன மின்றி எல்லாம் விதிப்படி நடக்குமென்று காலைக் கட்டிக்கொண் டிருப்பவர் சோம்பேறிகளாய் ஒரு சுகத்தையு மடையாமல் முடிவில் துர்க்கதிக் காளாவர். எல்லாம் விதிப்படி நடக்குமென்று யாவற்றையும் விதியின் தலையிலேற்றிப் பேசாமலிருப்பது தகுதியானால் உலகத்தி லுள்ளவர்க ளெல்லோரும் என் அப்படியிராமல் காரியங்களில் பிரவிர்த்தித்துக்கொண் டிருக்கின்றார்கள் என்னும் ஒரு விஷயத்தை ஆராய்ந்து பார்ப்பவர்கள் அங்ஙனம் முயற்சியின்றி யிரார். சில சோம்பேறிகள் இதற்கு, "உலகத்தில்

எல்லோரும் ஞானமுடையவர்க ளல்லர்; ஞானிகள் மாத்திரம் எல்லாம் தெய்வச் செயலென்று பேசாம லிருப்பர்; அஞ்ஞானிகள் காரியங்களை நடத்திக்கொண்டு திரிந்தலைவர்," என்று சமாதானங் கூறுவர்; இஃது அறிவுடையோர் வெறுக்கத்தக்க சமாதானமாம். ஞானிகளும் உயர் பதவியை அடைதற்குத் தவம் முதலியவற்றைச் செய்து அதனை அடைந்தபின் எல்லாவற்றையும் விடுவர் என்று நூல்கள் கூறுகின்றனவே யன்றி அவர்கள் சும்மாவிருந்தே நற்பதவியை அடைவார்கள் என்று கூறவில்லை. சிலர் 'விதியே பெரிது' என்றும், 'எல்லாம் அதன்படியே நடக்கும்' என்றும், 'நம் செயல் ஒன்றுமில்லை' என்றும், 'எல்லாம் தெய்வச் செயல்' என்றும் கூறித் தொழின் முயற்சியின்றிச் சோம்பேறிகளாய் இருந்தபடியே சில பாமரரை யேமாற்றி வயிறு வளர்த்தும், பெண்களுக்கும் பேதைகளுக்கும் தங்கள் அறியாமையாகிய ஞானத்தை உபதேசஞ் செய்து அவர்களையும் தங்கள் மாய வலைக்குள் சிக்கவைத்து இரகசியமாக அடாச் செய்கைகளை நடத்தித் திரிவர். இவர்களுக்கு,

"இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்
அந்தத் தேவனால் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்கள்
இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்
அந்தத் தேவனா லன்றெனும் விவேகியே யமலவீ டடைவானே."

என்னும் கைவல்லியச் செய்யுளின்படி நரகமே கிடைக்கும். சிலர், 'மதியே பெரிது' என்றும், 'எல்லாம் மதியினாலேயே நடக்கும்' என்றும், 'தெய்வச்செய லொன்று மில்லை' என்றும் தெய்வத்தைப் பழித்து நாஸ்திகராய்த் திரிவர். மனிதர்களுடைய செய்கைகளுக்குத் தக்கபடி நன்மை தீமைகளை வகுத்து அவரவர்களுக்கு ஏற்படுத்துதற்குக் கடவுள் தலைவரா யிருப்பதால் இவர்கள் கூறுவதும் தப்பாகும்; இவர்களும் தெய்வ விரோதிகளாய்த் துர்க்கதிக்கே ஆளாவர். இவ்விருவகையாரும் உண்மை மார்க்கத்தை யுணர்த்தும் சாஸ்திரங்களை நன்

குணராமையினாலேயே இங்ஙனம் வீண் தர்க்கமிட்டு நற்கதியை இழக்கின்றனர். இவர்,

"சிறந்த நன்மையுந் தீமையு மீசனார்
செய்விக்குஞ் செயலன்றோ
பிறந்த சீவர்க ளென்செய்வா ரவர்கண்மேற்
பிழைசொலும் வகையேதோ
துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற்
சுருதிநூற் பொருண்மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண்
மைந்தனே யதுகேளாய்."

"திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே
சகந்த னிற்பொது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொருளெல்லாம்
அகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளிவை யெல்லாம்
நிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங்கா ணிமலனார் செயலன்றே."

என்னும் கைவல்லியச் செய்யுட்களின் கருத்தை உய்த் துணர்வார்களாயின் அங்ஙனம் வீண் தர்க்கமிடார். மதியாவது: மனிதனுடைய செய்கைக் கனுகூலமாக அவனிடத்தே தோன்றியிருப்பது. விதியாவது: மனிதன் தன்னுடைய மதியைக்கொண்டு செய்யும் நன்மை தீமைகளுக்குத் தக்கவாறு அவன் அனுபவிக்கும்படி கடவுளால் ஏற்படுத்தப்படும் பயன்கள். ஒருவன் நற்காரியங்களையே செய்துகொண்டு போவானாகில் மேன்மேலும் நற் பயன்களையே அனுபவித்து முடிவில் ஞான முண்டாக மோக்ஷத்தை யடைவான்; கெட்ட காரியங்களையே செய்துகொண்டு போவானாகில் மேன்மேலும் தீமைகளையே அனுபவித்து முடிவில் துர்க்கதியையே அடைவான். ஒருவனுக்குப் பழவினையால் அளவற்ற நன்மைகளோ தீமைகளோ வரினும் அவன் அவற்றை அனுபவித்துக்கொண்டு நற்காரியங்களிற்

பிரவேசித்து ஞானத்தைத் தேட முயலவேண்டும். அங்ஙனம் தேடின பழவினைகள் அனுபவித்துத் தீர்வதுடன் சஞ்சித கர்மங்கள் எவ்வளவு சேர்ந்திருப்பினும் அவை நாசமாக முத்தியை அடைவதற்கேதுவாகும். இங்ஙனம் நன்முயற்சியால் பழவினைகள் தீர வீடுண்டாமென்பதை,

"ஆன பாவிக ளடைவன் நரகங்க ளவசிய மானாலும்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்யோ
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானாலும்
ஞான மாங்கனல் சுடுமென் றமறைமொழி நம்பினால் வீடுண்டே."

என்னுங் கைவல்லியச் செய்யுள் நன்கு விளக்கும். இவ் வுண்மைகளையெல்லாம் ஆராய்ந்துணராதவர்களே 'மதியினால் விதியை வென்றுவிடலாம்' என்றும், 'விதியை மதியினால் வெல்ல முடியாது' என்றும், கண்மூடித்தனமாக வாய்க்கு வந்தவற்றை உளறிக்கொண்டு திரிவர். மதியைக் கொண்டு விதியினோ டெதிர்த்துச் சண்டை போடவேண்டுமென்பது சாஸ்திரங்களின் துணிபன்று; மதியைக்கொண்டு நற்காரியங்களைச் செய்யின் இறைவன் பழவினைகளால் நேர்ந்த பாவங்களை யகற்றியருள்வா னென்பதுதான் நூற்களின் றுணிபு. இவ் விஷயம் விரிப்பின் பெருகுமாதலின் இம்மட்டோடு நிறுத்தும்; விசேஷமாக அறிய விரும்புவோர் கீதை, கைவல்லியம் முதலிய நூல்களை நுட்பமாக ஆராய்ந்துணர்க. சாஸ்திரங்களை நன்றாக ஆராயின் மானிடராகப் பிறந்தோர் தங்கள் தங்களுக்குரிய நற்கருமங்களைச் செய்தே தீரவேண்டுமென்பது புலப்படும். ஆதலால், ஒவ்வொருவரும் துர்க்கருமங்களை நீக்கிச் சோம்பலின்றி நற்கருமங்களைச் செய்து இறைவ னருளையும் இகபர சுகங்களையும் அடைவாராக. இன்னும்,

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்."

"மடியுளான் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்."

என்னுந் திருக்குறட் செய்யுட்களும், "ஊக்கமது கைவிடேல்," என்னும் ஔவையார் கூற்றும் மனிதனுக்கு முயற்சி அவசியம் வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுதலையுங் காண்க.

இச் செய்யுளானது ஆடூஉ முன்னிலையாகக் கூறப்பட்டது. இதனை வாசிக்கும் ஒவ்வொருவரும் தங்கள் தங்களை நோக்கி இதனைக் கூறியதாகக் கருதி நன்முயற்சிகளைத் தேடுக. (கூக)

## மங்கையர்மீது செலுத்தும் ஆசையைச் சிவன்பாற் செலுத்தினால் மோக்ஷ மடையலா மென்பது

[நேரிசை வெண்பா]

மங்கையர்க ளங்கமிசை வைத்திருக்கு மாசையினைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக்—கங்கைமதி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தாக்கால்
காணலாங் காணுக் கதி.

(ப-ரை) (உலகத்திலுள்ள ஆடவர்கள்) மங்கையர்கள் - பெண்களினுடைய, அங்கமிசை - அவயங்களின்மீது, வைத்திருக்கும் - கொண்டிருக்கும், ஆசையினை - பிரியத்தை, பங்கு செய்து - பாகப்படுத்தி, (அந்தப் பாகத்தில்) நூற்றில் - நூறு பங்கில், ஒரு பங்கு - ஒரு பாகத்தை, எடுத்து - கைக்கொண்டு, கங்கை - கங்கையையும், மதி - சந்திரனையும், (தரித்த) வேணி - சடையையுடைய, அரன் - சிவபெருமானுடைய, பாதார விந்தத்தில் - பாததாமரைகளில், வைத்தால் - சேர்த்தால், காணு கதி - எவரும் எளிதிற் காண முடியாத மோக்ஷ கதியை, காணலாம் - கண்டு அதனிடத்தே சேரலாம்; (ஆதலால், ஒவ்வொருவரும் சிவபெருமானிடத்தில் மன மொருமித்த பக்தியைச் செலுத்துக).

(வி - ரை) மனிதர்கள், மாதர்களிடத்துச் செலுத்தும் ஆசையில் நூற்றி லொரு பாகத்தையேனும் சிவன்பாற் செலுத்தினல் முத்தியை யடைவது திண்ணம். மானிடர் மற்றைய பொருள்களிடத்துச் செலுத்தும் ஆசையைக் காட்டினும் ஸ்திரீகளிடத்திற் செலுத்தும் ஆசையானது ஐம்புலன்களும் அந்தக்கரணங்களும் ஒருமித்துச் செலுத்தக்கூடிய தாதலின் அதிகரித்ததாம். அதுபற்றியே இங்கு அதில் நூற்றி லொருபங்கும் சிவன்பாற் செலுத்துதற்குச் சிறந்ததாகக் கூறப்பட்டது. ஐம்புலன்களும் மங்கையரிடத்தே ஒருமித்துச் சென்று இன்ப மனுவிக்கு மென்பதை,

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைப்புலனு
> மொண்டொடி கண்ணே யுள."

என்னுந் திருக்குறட் செய்யுளா னுணர்க.

பங்கு-எண்ணலளவை யாகுபெயர். பாதாரவிந்தம் - தீர்க்கசந்தியெனும் வடமொழிப் புணர்ச்சி. (கூஉ)

## செல்வமுடையார்க்கு நிட்சேபநிதி இன்ன தென்பது

[நேரிசை வெண்பா]

செல்வத்தைப் பெற்றூர் சினங்கடிந்து செவ்வியராய்ப்
பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு—நல்லன
தான மறவாத தன்மையரே லஃதென்பர்
வானகத்து வைப்பதோர் வைப்பு.

(ப - ரை) (செல்வமுடையவர் இங்கே புதைத்து வைக்கும் பொருள் நிச்சயமாகப் பிற்காலத்தி லுதவும் நிட்சேப நிதி யாகமாட்டாது; பின்னை யெது அழியாத நிட்சேப நிதியாகுமெனில்) செல்வத்தைப் பெற்றோர் - அந்தச் செல்வத்தை யடைந்தோர், சினம் கடிந்து - கோபத்தை நீக்கி, செவ்வியராய்-நற்குணமுடையவராய், பல்கிளையும் - தம்முடைய பல சுற்றத்தாரும், வாடாமல் - வறுமையால்

வாட்டமடையாமல், பாத்து-(தம்முடைய பொருள்களை அவர்களுக்கும்) பங்கிட்டுக் கொடுத்து, உண்டு-தாமும் அவற்றை அனுபவித்து, நல்லன - நன்மை யுடையனவாகிய, தானம் - தானங்களையும், மறவாத - மறந்து கைவிடாத, தன்மையரேல் - தன்மையை யுடையவர்களா யிருப்பார்களாயின், அஃது - அப்படி யிருக்கும் செய்கையே, (பிற்காலத்தி லுதவும்படி) வானகத்து - தேவருலகத்திலே, வைப்பது ஓர் - தேடி வைப்பதாகிய ஒரு, வைப்பு என்பர்-நிட்சேப நிதியென்று கூறுவர் பெரியோர்.

(வி-ரை) செல்வ முடையவர்கள் இகத்திற் செய்யும் தானதருமங்கள், சுற்றந் தழுவல், சினங் கடிதல் முதலிய நற்செய்கைகளெல்லாம் ஒரு நிட்சேப நிதிபோல நிலைபெற்றுப் பின்னர்ச் சுவர்க்கத்தில் அவர்க்கு நன்மை பயக்குமாதலால் அவை வானுலகத்தில் தேடி வைக்கும் நிட்சேப நிதியெனக் கூறப்பட்டன. இங்குத் தேடிப் புதைக்கும் பொருள், அங்ஙனம் புதைத்தார்க்கே உதவுதல் நிச்சயமின்மையால் அது நிட்சேபப் பொருளாகாது.

என்பர் என்னும் பயனிலைக் கேற்பப் பெரியோர் என்னும் தோன்றா எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. வைப்பு - தொழிலாகுபெயர். வைத்தல் என்னும் தொழில் அதனையுடைய பொருளுக்காயிற்று. (சுங)

## குணங் கெட்ட பெண்கள் புருஷனைக் கொல்லும் ஆயுதமாவ ரென்பது

[நேரிசை வெண்பா]

எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
அட்டில் புகாதா ளரும்பிணி — அட்டதனை
உண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

(ப - ரை) எறி என்று-(கணவன் ஏதேனுமொரு காரணத்தை முன்னிட்டுக் கோபித்துக்கொள்ளுங் காலத்தில் தானும் அஞ்சாமல் கோபங்கொண்டு) அடி பார்க்கலாம் என்று எதிர்த்துப் பேசி, எதிர் நிற்பாள் - கணவனுக்கு முன்னே நீலித்தன்மைகொண்டு நிற்பவள், கூற்றம் - அக் கணவனைச் கொல்லும் எமனாவள்; சிறு காலை - சிறிய விடியற்கால நேரத்திலேயே, (அதாவது சிறிது விடிந்ததும் விடியாமலு மிருக்கும் நேரத்திலேயே எழுந்து தேகசுத்தி முதலியவற்றைச் செய்துகொண்டு) அட்டில்-சமையல் வீட்டிலே, புகாதாள்- உணவு சமைக்கும்பொருட்டுப் போகாதவள், (கணவனுக்கு) அரும் பிணி - தீருதற்கரிய நோயாவள்; அட்டதனை - அங்ஙனம் புகுந்து சமைத்தவற்றை, உண்டி - உணவாக, உதவாதாள் - (கணவன் பசித்தற்குரிய காலமறிந்து அவனுக்கு) இட்டுபசரியாதவள், இல்வாழ் பேய் - அந்தக் கணவன் வீட்டில் வாழுகின்ற பேயாவள்; (பின்னும்) இம்மூவர் - இத்தகைய குணங்களையுடைய இந்த மூவரும், கொண்டானை-மணஞ் செய்துகொண்ட கணவனை, கொல்லும்-மடிக்கின்ற, படை - ஆயுதமுமாவர், (ஆதலின், இத்தகையரை மனைவியாக ஆடவர் கொள்ளுதல் தீங்காம்).

(வி-ரை) மனைவி எதிர்த்துப் பேசுவாளாயின் மேலும் மேலும் கணவனுக்குக் கோப மதிகரித்து அவனுடைய உயிர்க்கு அபாயம் நேர ஏதுவாமாகையால் அவளே அவனுக்கு எமனும். உரிய காலத்தில் மனைவி சமையல் செய்யத் தொடங்காவிடின், கணவன், பசியோடு காத்திருப்பதால் அவனுக்குப் பல பிணிகளு முண்டா மாதலால் அவளே பிணியாவள். சமைத்த உணவைக் குணத்தோடு உதவாத மனைவியால் கணவனுக்கு மிக்க மன வியாகுல முண்டா மாதலால் அவளே வீட்டிலிருந்து துன்பப்படும் பேயாவாள். இம் மூவராலும் கணவன் பலவித துன்பங்களை யடைந்து மரணமாக ஏதுவாமாகையால் இம் மூவரும் அவனைக் கொல்லும் ஆயுதமு மாவர். ஆத

லால், அறிவுடையோர் இத்தகைய மனைவியரைக் கொள்ளாமல் நல்ல மனைவியரைக் கொள்ளவேண்டும். கெட்ட மனைவியரைக் கொள்ளுதல் கூடாதென்பதை,

"தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்."

என்னும் ஔவையார் வாக்காலும்,

"மனையாட்டி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்."

"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை."

என்னுந் திருக்குறட் செய்யுட்களானு முணர்க.

கிற்பாள், புகாதாள், உதவாதாள் ஆகிய இவை வினையாலணையும் பெயர்கள். கூற்றம், பிணி, பேய், படை என்பன உவமையாகு பெயர்கள். 'அடு இல்' 'அட்டில்' என ஒற்றிரட்டி வந்தது. (இவ் வெண்பா நாலடியார்ச் செய்யுள்.) (கூச)

## தங்களால் வரும் தாழ்வை அறியாதவர் இன்னவ ரேன்பது

[கலி விருத்தம்]

மங்கையர் விருந்தினர் வயித்திய ரிரப்போர்
பங்குபிணி யாளரொடு பாலகர் விருத்தர்
அங்கமறை வேதியரு மந்தகரு மன்னர்
தங்கள்குறை யால்வருமோர் தாழ்வுமறி யாரே.

(ப-ரை) (உலகத்தில்) மங்கையர்-மங்கைப் பருவத்தை யடைந்த பெண்களும், விருந்தினர் - விருந்தினர்களும், வயித்தியர் - சிகிச்சகரும், இரப்போர்-யாசகரும், பங்கு-முடவனும், பிணியாளரொடு-வியாதிக்காரர்களும், பாலகர்-அறியாச் சிறுவர்களும், விருத்தர்-வயது சென்ற விருத்தாப்பியர்களும், அங்கம்-ஆறங்கங்களை யுடைய, மறை

வேதங்களை ஓதி யுணர்ந்த, வேதியரும்-பிராமணர்களும், அந்தகரும்-குருடரும், மன்னர் - அரசரும், தங்கள் குறையால் - தங்களுடைய குற்றத்தால், வரும் - வருகின்ற, (தாழ்வுகளில்) ஓர் தாழ்வும் - ஒ ரிழிவையும், அறியார் - ஆராய்ந்து தெரிந்துகொள்ளமாட்டார்கள்.

(வி-ரை) மங்கைப் பருவத்தை யடைந்த பெண்கள் மாமியார் முதலியோர் வெறுக்கும்படி சில குற்றங்களைச் செய்பினும், அப் பருவத்தின் மதர்ப்பினாலும் பேதைமையாலும் அவற்றைக் குற்ற முடையவை யென்று கருதமாட்டார்கள்; அவைகளெல்லாம் சரியா னவைகளென்றே அவர்கள் கருதுதல் இயற்கை. விருந்தினர், தங் களை உபசரிப்போனுடைய சொந்தத்தைப் பாராட்டித் தாங்கள் சுக மான உணவுகளை உண்டு களிப்பதையே பெரிதாக நினைப்பார்களே யன்றித் தங்களால் அவனுக் கேற்படுங் கஷ்டத்தையும், நஷ்டத்தை யும், தாங்கள் செய்யுங் குற்றத்தையுங் கவனிக்கமாட்டார்கள். வயித் தியர் தாங்கள் சிகிச்சை செய்யுமிடத்தில் தங்களுடைய சிகிச்சைக் குறைவால் பல மரணங்கள் நேரினும், கஷ்டங்க ளுண்டாயினும் அவற்றைத் தங்களா லுண்டானவை யென்று கருதி வயித்தியத்தை விட்டுவிட மாட்டார்கள்; அவற்றிற்குத் தக்க வேறு காரணங்களைச் சொல்லி மேலும் சிகிச்சை செய்யத் தொடங்குவர். யாசகர் எப்படி யும் தாங்கள் பொருள் பெறுவ தொன்றையே கருதுவார்க ளன்றித் தங்களால் பிறருக் கேற்படும் கஷ்ட நஷ்டங்களைக் கவனிக்கமாட் டார். மூடவன், தான் ஒன்றுஞ் செய்ய முடியாதவனா யிருப்பதால் பிறரால் சகாயம் பெற்றுக்கொள்வதையே பிரதானமாகக் கொள் வானேயன்றித் தன்னால் அவர்க்கேற்படும் துன்பங்களைச் சிறிதும் கவனிக்கமாட்டான். பிணியாளர் தாங்கள் ஏதையும் புசிக்கவேண்டு மென்னும் விருப்பத்தையும் பிறரால் சகாயம் பெற்றுக்கொள்வதை யுங் கருதுவார்களே யன்றிக் கண்டதைப் புசிப்பதால் தங்களுக்கு வருந் தீங்கையும், தங்களால் பிறருக் குண்டாகுங் கஷ்டங்களையும்

கவனிக்கமாட்டார். பாலகர் தங்களுடைய அறியாப் பருவத்தின் இயற்கையாலே தாங்கள் செய்யுங் குற்றத்தால் வரும் இழிவை யறிய மாட்டார்கள். விருத்தர் தாங்கள் அசக்தர்களா யிருப்பதனாலேயும் அப் பருவத்தில் தங்களுக்குக் கொஞ்சம் அறியாமை ஏற்படுவதனாலேயும் தங்களால் பிறருக் கேற்படும் கஷ்டம் முதலியவற்றைக் கருதாமல் தாங்கள் மற்றையரால் சகாயம் பெற்றுக்கொள்வதையே கருதுவார்கள்; சில சமயம் செய்யத்தகாத காரியத்தையுஞ் செய்து விடுவார்கள். வேதியர் பிறர் கஷ்டத்தைக் கவனியாமல் தாங்கள் தக்ஷிணை பெற்றுக்கொள்வதையே முக்கியமாகக் கருதுவார்கள். குருடர் எதற்கும் பிறர் சகாயத்தை விரும்பக்கூடியவர்களாதலால், தங்களால் பிறருக்கு நேரும் கஷ்டத்தையும் அதனால் தங்களுக்கு நேரும் அவமானத்தையுங் கருதமாட்டார்கள். மன்னர்கள் எல்லாரினும் மேற்பட்டவ ரென்னும் செருக்கையுடையவராதலின் தமக்கு வரும் இழிவைக் கருதாமல் எதையும் துணிந்து செய்துவிடுவார்கள். இவர்கள் இப்படி யிருப்பது இயற்கையாயினும் சிலர் தங்களுக்கு வரும் இழிவைக் கருதி அவ் விழிவுக் கிடங்கொடாமல் நடந்துகொள்வது முண்டு. இங்குக் கூறியது இவ்வகையாருள் இழிவைக் கருதாதவர்களைப் பற்றியேயாம்.

வேதத்தின் ஆறங்கங்களாவன:—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பனவாம். (கூ௫)

### இன்ன இன்ன காரியங்களைச் செய்பவர்களிடம் இலக்குமி வாசஞ்செய்யா ளென்பது

[கலி விருத்தம்]

காலை மாலை யுறங்குவர் காரிகை
கோல மேனி குலைந்தபின் கூடுவர்
சாலி ராத்தயிர் சாதமொ டுண்பவர்
மாலை நேரினு மாது பிரிவளே.

(ப - ரை) காலை - விடியற்கால நேரத்திலும், மாலை - சூரியாஸ்தமன காலத்திலும், உறங்குவர் - நித்திரை செய்பவர்களும்; காரிகை-பெண்ணினது, கோலம் மேனி - கலியாணக் கோலத்தின் அழகு, குலைந்த பின்-அழிந்தபின் (அதாவது, அவள் அமங்கலியாண பின்) கூடுவர் - அவளைச் சேர்பவரும்; சால் - மிகுந்த, இரா-இராத்திரி காலத்தில், தயிர் - தயிரை, சாதமொடு - சோற்றுடனே சேர்த்து, உண்பவர் - புசிப்பவரும்; மாலை நேரினும் - மகா விஷ்ணுவை நிகர்த்துச் சிறப்பு வாய்ந்தவர்களா யிருப்பினும், மாது - இலக்குமி, பிரிவள் - அவர்களை விட்டு நீங்குவள்.

(வி-ரை) காலை மாலை யுறக்கம் முதலியவை வைத்திய சாஸ்திர முறைப்படி சுகத்திற்குக் கேடாமாகையால், இலக்குமியோடு கூடிச் சுகமாக வாழ விரும்புவோர் இவற்றை யொழித்தல்வேண்டும். விஷ்ணுவை நிகர்த்தவர்களிடம் இலக்குமி பக்ஷமுடையவளா யிருக்க வேண்டியது முறைமையாயினும் அவர்கள் இச் செய்கைகளைக் கைக்கொள்வார்களாயின் உடனே அவர்களை விட்டு நீங்குவாள்.

மாது என்பது பெண்பாற் பொதுப்பெயராயினும் இலக்குமி பெண்களுள் தலைமை பெற்றிருத்தல்பற்றி அஃதிங்கு இலக்குமியை உணர்த்திற்று; பூவென்பது சிறப்பு நோக்கித் தாமரைமலரை யுணர்த்துதல்போல. (சுக)

## இன்ன இன்ன செய்கைகளை யுடைவர்களிடம் மூதேவி வாசஞ் செய்வா ளென்பது

[கலி விருத்தம்]

இஞ்சி நெல்லி யிலைக்கறி பாகற்காய்
கஞ்சி வெண்டயிர் கங்கு லருந்திடில்
பொஞ்சு பூமகள் போயுடன் மூத்தவள்
கொஞ்சிக் கொஞ்சிக் குலாவி நடிப்பளே.

(ப - ரை) (உலகத்தி லுள்ளவர்கள்) இஞ்சி - இஞ்சியையும், நெல்லி - நெல்லிக்காயையும், இலைக்கறி - கீரைக்கறிகளையும், பாகற்காய்-பாகற்காயையும், கஞ்சி - கஞ்சியையும், வெண் தயிர் - வெண்மையான தயிரையும், கங்குல் - இராக்காலத்தில், அருந்திடில் - உட்கொண்டால், (அவர்களிடம்) பொஞ்சு - செழிப்பாக வாழ்கின்ற, பூமகள் - இலக்குமி, போய் - போக, உடன் - உடனே, மூத்தவள் - அவளுக்கு மூத்தவளாகிய மூதேவி, கொஞ்சிக் கொஞ்சி - நெருங்கிச் செல்வமாகப் பேசிப்பேசி, குலாவி - சிநேகமாகி, நடிப்பள் - கூத்தாடுவாள்.

(வி-ரை) இஞ்சி முதலியவற்றை இராக்காலத்தி லருந்துதல் வைத்திய வொழுங்கின்படி கூடாதாதலால் அவற்றை அக்காலத்தில் அருந்துவோரிடம் இலக்குமி நீங்கி மூதேவி வாசஞ் செய்வள்.

இஞ்சி, நெல்லி என்பன முதலாகுபெயர்கள். பொஞ்சுதல்-செழித்தல். போகவென்னும் செயவெனெச்சம் போய் எனச் செய்தெனெச்சமாகத் திரிந்துவந்தது. கொஞ்சுதல் - செல்வமாகப் பேசுதல். (கஎ)

பொருளுடையார் நிந்தை கூறினும் அஃது உயர்மொழி யாகுமென்பதும், வறிஞர் அறமொழி கூறினும் அஃது தாழ்ந்த மொழியாகு மென்பதும்.

நிறைபொரு ளுடையவர் நிந்தை சொல்லினும்
முறையுறு வழக்கென மொழிந்து போற்றுவர்
வறுமையிக் குடையவர் வழங்கும் வாய்மொழி
அறமொழி யாகினு மதனை யெள்குவர்.

(ப-ரை) நிறை - அதிகரித்த, பொருள் உடையவர் - திரவிய முள்ளவர்கள், நிந்தை-இகழ்ச்சி மொழிகள், சொல்லினும் - கூறினாலும், (அதனை உலகத்தி லுள்ளவர்கள்)முறை உறு-ஒழுங்கு பொருந்

றிய, வழக்கு என-பழக்கச் சொல் என்று, மொழிந்து-கூறி, போற்று வர் - அவர்களைத் துதிப்பார்கள்; வறுமை மிக்குடையவர்-தரித்திரம் மிகுதியாக உள்ளவர், வழங்கும்-சொல்லுகின்ற, வாய் மொழி-வாய்ச் சொல்லானது, அறமொழியாகினும்-தருமம் பொருந்திய வார்த்தை யானாலும், அதனை - அச் சொல்லை, என்குவர் - இகழ்வார்கள்.

(வி - ரை) பொருளுள்ளவர்கள் நிந்தை மொழி கூறினும், தகாச் செய்கைகளைச் செய்யினும் அவற்றை உலகத்திலுள்ளவர்கள் உயர்வுள்ளவைகளாகக் கொண்டு அவரைத் துதித்தலும், வறுமை யுள்ளோர் நியாய மொழிகளைக் கூறினும் ஒழுங்கான காரியங்களைச் செய்யினும், அவற்றை இகழ்ச்சியுடையனவாகக் கருதி அவர்களை இகழ்தலும் உலகத்தியற்கை. பெரியவரெனப் பெயரெடுத்த சிலருங் கூடப் பொருளைப் பெரிதாக நினைத்து அப்பொருளுடையவர்களிடம் தாங்கள் எதையேனும் பெற்றுக்கொள்ளுதற்பொருட்டு அவர்கள் செய்யும் தகாச் செய்கைகளைக் கொண்டாடியும், அவர்களை யிகழும் அறிவுடையோரைத் தாமிகழ்ந்தும் திரிவதை அனுவத்திற் காண லாம். இஃது உலகத்தியற்கையாயினும் இச் செய்கை அறிவுடை யோர் வெறுக்கத்தக்கதாம். இது கூடாதென்பதை அறிவுறுத்தற் பொருட்டே இச் செய்யுள் ஏற்பட்டது. (கூஅ)

## இன்ன இன்ன தொழில்கள், செய்வோர் மனத்தை எப்பொழுதும் துன்பப்படுத்திக்கொண்டிருக்கு மென்பது

[கட்டளைக் கலித்துறை]

கட்டா னிடத்தினிற் றங்கப் பணிகள் சமைப்பதுவும்
மட்டாடு வாரைத் திருத்திநன் மார்க்கத்தில் வைப்பதுவும்
பட்டாங்கு காகிதப் புத்தக மச்சிற் பதிப்பதுவும்
தொட்டார் மனத்தைப் பலவாறு நாளுந் துயர்செய்யுமே.

(ப - ரை) தட்டான் இடத்தினில் - பொன் வேலை செய்யும் கம்மாளனிடத்தில், (பொன் முதலியவற்றைக் கொடுத்துத்) தங்கப் பணிகள் - பொன்னுபரணங்களை, சமைப்பதுவும் - செய்வதும், வட்டு ஆடுவாரை - சூதாடுவார்களை, திருத்தி-(அத் தொழிலினின்று நீக்கிச்)செவ்வைப்படுத்தி, நல் மார்க்கத்தில்-நல்ல வழியில், வைப்பதுவும் - நிறுத்திவைத்தலும்; பட்டாங்கு - சித்திரச்சேலையையும்; காகிதப் புத்தகம் - கடுதாசிப் புத்தகத்தையும், அச்சில் - முத்திரை எழுத்தில், பதிப்பதுவும் - பதித்தலும், (ஆகிய இத் தொழில்கள்) தொட்டார் - (இவற்றைச் செய்யத்) தொடங்கினவர்களுடைய, மனத்தை- உள்ளத்தை, நாளும்-தினந்தோறும், பல ஆறு - பலவிதமாக, துயர் செய்யும் - துன்பப்படுத்தும்.

(வி - ரை) தட்டானிடத்தில் நகை செய்யும்பொருட்டு ஒருவர் பொன்னைக் கொடுத்தால் அவன் அதனிற் பெரும் பாகத்தைக் கவர்வதுமன்றி நகையையும் விரைவிற் செய்து கொடாமல் பல நாளும் அவர்க்கு அலைச்சலை யுண்டாக்குவா னுதலின் அவனிடம் நகை செய்யத் தொடங்குவோர்க்கு மிகுந்த துன்பமே யுண்டாம். தட்டாரிடம் பொன்கொடுத்து நகைசெய்து வாங்குவது கஷ்ட மென்பதையும், அவர்கள் மிகுந்த மோசஞ் செய்து பொன் கொடுத்தோரைத் துன்பப்படுத்துவார்க ளென்பதையும்,

"ஒட்டாக வொட்டியுங் காற்பொன்னின் மாப்பொன் னுபாயமதாத்
தெட்டா திரான்பணி செய்யா திரான்செம்பொன் மேருவினைக்
கட்டாகக் கட்டிக் கடுகள வாகிறை காட்டவல்ல
தட்டானுக் கஞ்சியல் லோவணிந் தான்சிவன் சர்ப்பத்தையே."

என்னும் பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் செய்யுளா னுணர்க. சூதாடுவோர் என்ன சொன்னாலும் கேளாமல் அத் தொழிலிலேயே மிகுந்த விருப்பத்தோடு பிரவேசிப்பார்களாகையால் அவர்களைத் திரு

த்தி நல்வழிக்குக் கொண்டுவருவதும் கஷ்டமாம். சித்திரச்சேலை, காகிதப் புத்தக முதலியவற்றை அச்சிடுந் தொழிற்காரர் பலரிடத்தும் பல வேலைகளை வாங்கிக்கொண்டு ஒருவருக்கும் வேலையை விரைவில் முடித்துக்கொடாமல் ஒவ்வொருவரையும் அலையச்செய்வார்களாகையால் அவர்களிடத்தில் அச்சுவேலை கொடுத்து வாங்குவதும் கஷ்டமாம்; "அச்சுவேலையோ நச்சுவேலை," என்னும் பழமொழி இதனை நன்கு விளக்கும்.

வட்டு-சூதாடு கருவி; இது மரத்தாற் குமிழாகச் செய்யப்பட்டு வருணந் தடவப்பெற்றிருப்பது; இஃது ஆகுபெயராய் இதனால் நிகழுந் தொழிலை யுணர்த்திற்று. (சுக)

## ஞானமாகிய பொருளைவிட்டு நிலையற்ற பொருளைத் தேட உழைத்து வருந்துவது வீணென்பது

[கலி விருத்தம்]

வெள்ளத்தே போகாது வெந்தணலில் வேகாது
கொள்ளத்தான் போகாது கொடுத்தாலும் குறையாது
கள்ளருக்கு மெட்டாது காவலுக்கு ளமையாது
உள்ளத்தே பொருளிருக்க வூரினுழைத் துழல்வானேன்.

(ப - ரை) (உலகத்தில் நிலையற்ற பொருளைத் தேடி யலையும் மானிடர்களே!) வெள்ளத்தே - ஜலப்பிரவாகத்திலே, போகாது - (அதனால் அடித்துக்கொண்டு) போகப்படாததும்; வெம் - வெம்மையாகிய, தணலில் - நெருப்பில், வேகாது - எரிந்து போகாததும்; கொள்ள - (பிறர்) எடுக்க (அதனாலே) தான் போகாது - தான் குறைந்துபோகாததும்; கொடுத்தாலும் - (பிறருக்கு எவ்வள வெடுத்துக்) கொடுத்தபோதிலும், குறையாது - குறைந்துபோகாததும்; கள்ளருக்கும்-திருடருக்கும், எட்டாது-(கைப்பற்றுவதற்கு) எட்டாததும்; காவலுக்குள் - ஒருவர் தமக்கே சொந்தமாகக் கருதிச் செய்

யும் தங்கள்) காவலுக்குள்ளே, அமையாது - அடங்காததும் (ஆகிய) பொருள் - ஞானமென்னும் பொருளானது, உள்ளத்தே - (உங்களுடைய) அகத்திலே, இருக்க - நிலைபெற்றிருக்க, (அதன் இயல்பை யறிந்து அதனை விருத்திசெய்து அதனால் எப்பொழுதும் நிலைபெற்றதாகிய பேரின்பமென்னும் மோக்ஷவீட்டை யடையாமல் மேற் கூறியபடி நிலையற்ற சிற்றின்பத்திற் கேதுவாகிய திரவியத்தைத் தேடி) ஊரில் - நகரத்திலே, உழைத்து - பிரயாசைப்பட்டு உழல்வான் என் - வருந்துவது எதற்காக?, (இதனால் ஒரு பிரயோசனத்தையும் அடையமாட்டீர்கள்; ஆதலால், விரைந்து உங்களிடத்திலேயுள்ள அழியாப் பொருளாகிய ஞானத்தை விருத்தி செய்து கொண்டு அதனால் நன்மையை அடைவீராக.)

(வி - ரை) இச் செய்யுளானது நிலைத்த பொருளாகிய ஞானத்தை விட்டு நிலையற்ற திரவியத்தைத் தேடி வருந்தும் மானிடரை நோக்கி ஞானத்தைத் தேடுமாறு கூறுவதாக அமைக்கப்பட்டது. ஆதலின், அத்தகையினர் ஒவ்வொருவரும் இச் செய்யுட் கருத்தை நோக்கி, நிலையற்ற பொருளைத் தேடி வருந்துவதை விடுத்து நிலைத்த ஞானப்பொருத் தேடி அதனால் முத்திவீட்டை யடைதற்கு மார்க்கம் தேடவேண்டும். பொருட் பொருத்தம் நோக்கி, 'மானிடர்களே!' என்னும் விளி வருவித்துரைக்கப்பட்டது. போகாது, வேகாது முதலியவற்றில் தகரந் தொக்கது. இவற்றுள் எண்ணும்மைகளும் தொக்கன.

உழல்வான் - இதிலுள்ள வான் என்னும் வினையெச்ச விகுதி இங்குத் தொழிற்பெயர் விகுதியாக வந்தது. இங்ஙனம் வருதல் "உரையிற் கோடல்," என்னும் உத்தியாற் கொள்ளப்பட்டது. "செய்து செய்பு........."(ந-வி-உ௫) என்னுஞ் சூத்திர வுரையைப் பார்க்க. (எ0)

## எல்லாரிடத்தும் விசனம் ஒரு தன்மைத்தே யென்பது

[கட்டளைக் கலித்துறை]

பாலுக்குச் சர்க்கரை யில்லையென் பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென் பார்க்குமுட் குத்தித்தைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்குங் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும் விசனமொன்றே.

(ப - ரை) (உலகத்தில்) பாலுக்கு - பருகுகின்ற பாலுக்கு (உரியதாகிய), சர்க்கரை இல்லை என்பார்க்கும் - சருக்கரை யில்லையென்று கவலைப்படுவோர்க்கும்; பருக்கை அற்ற - சோற்றுப்பருக்கை ஒன்றேனுங் கலவாத, கூழுக்கு-புற்கைக்கு, போட-இடுதற்கு (உரிய) உப்பு இல்லை என்பார்க்கும் - இலவணம் இல்லையென்று கவலைப்படுவார்க்கும்; முள் - முள்ளானது, குத்தித் தைத்த - பாய்ந்து உள்ளே பொருந்தி வருத்திய, காலுக்கு-பாதத்திற்கு (உரிய), தோல் செருப்பு-தோலாலாகிய பாதரக்ஷை, இல்லை என்பார்க்கும்-இல்லையென்று கவலையுறுவார்க்கும்; கனகம் - பொன்மயமாகிய, தண்டி - பருமையான, மேலுக்கு-உடம்பிற்கு (படுக்கையில் அழுத்தாமலிருப்பதற்குரிய) பஞ்சணை - பஞ்சுமெத்தை, இல்லை என்பார்க்கும் - இல்லையென்று கவலைப்படுவோர்க்கும், (ஏற்படும்) விசனம் - மனவருத்தமானது, ஒன்றே-ஒருதன்மையுடையதேயாம்; (இடத்திற்குத் தகுந்தபடி விசனத்தில் உயர்வு தாழ்வில்லை; ஆதலின் விசனமுறுவோர் எல்லோரையும் சமமாகக் கருதி அவர்களுக்கு உதவி செய்யவேண்டும்).

(வி - ரை) மனிதர் ஒவ்வொருவரிடத்திலும் விசனத்திற்குக் காரணம் வெவ்வேறாயினும் விசனத்தில்மாத்திரம் வித்தியாசமில்லை. அஃது எவ்விடத்தும் ஒரேதன்மை யுடையதாம். ஆதலின், விசன முறுவோர்க் குதவிசெய்வோர், உயர்ந்தவரென்றும் தாழ்ந்தவரென்றும் பேதமாகக் கருதாமல் எல்லோரிடத்தும் இரக்கமுற்றுச் சமத்துவமான உதவியைச் செய்யவேண்டும்.

பாலுக்குச் சர்க்கரை, கூழுக்குப்பு, காலுக்குத் தோற்செருப்பு, மேலுக்குப் பஞ்சணை யென்பன நான்காம் வேற்றுமை விரிகள். இவற்றிலுள்ள குவ்வுருபு தகுதியுடைப் பொருளில் வந்தது. (எக)

## பொய்யுரைத்தல் இன்னவிடத்தில் தகும், இன்னவிடத்தில் தகாதென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா
மவருக்குப் பொய்யா காத
மெய்யருக்குப் பொய்யுரைத்தாற் றேய்பிறைபோற்
றவங்குறையு மிடியுண்டாகும்
துய்யதாய் தந்தையர்க்குப் பொய்யுரைத்தால்
வறுமைபிணி தொலையா வென்றும்
உய்யவருள் தேசிகற்குப் பொய்யுரைத்தா
னரகமது வுண்மை தானே.

(ப-ரை) (உலகத்தில் ஒருவர்) பொய்யருக்கு-(எப்பொழுதும்) பொய்யே கூறு மியற்கை யுள்ளாரிடத்தில், பொய் உரைத்தால் - தாமும் பொய்யையே கூறினால், அவருக்கு - அப்படிச் சொல்லுமவர்க்கு, வெற்றி ஆம்-தம் காரியங்களில் ஜெய முண்டாகும்; பொய் ஆகாத - அபத்தம் கூடாத, மெய்யருக்கு - உண்மையாளரிடத்தில், பொய் உரைத்தால் - அபத்தங் கூறினால், (அங்ஙன முரைப்பவர்க்

(ருடைய) தவம்-தவமானது, தேய் பிறைபோல்-அபரபக்ஷத்து சந்திரன்போல, குறையும்-வரவரச் சுருங்கிப்போகும்; (அன்றியும், அவரிடத்தில்) மிடி-வறுமையும், உண்டாகும்-ஏற்படும்; தூய்ய-பரிசுத்தமாகிய, தாய் தந்தையர்க்கு - பிதாமாதாக்களிடத்தில், பொய் உரைத்தால் - அபத்தங் கூறினால், (அப்படிக் கூறுவோரைவிட்டு) வறுமை-தரித்திரமும், பிணி-நோயும், என்றும் - எப்பொழுதும், தொலையா - நீங்கிப் போகமாட்டா (அவர்களிடத்தே குடிகொண்டிருக்கும்); உய்ய-(முத்தி வீட்டை யடைந்து) பிழைக்கும்பொருட்டு, அருள் - சன்மார்க்கத்தை உபதேசித்தருளுகின்ற, தேசிகற்கு - ஞானசிரியனிடத்தில், பொய் உரைத்தால்-பொய்ம்மொழி கூறின், (அங்ஙனங் கூறுவார்க்கு) நரகமது - நரகமானது, (கிடைப்பது) உண்மை - சத்தியமாம்.

(வி-ரை) 'உலகவாழ்வு சதமன்று; ஆதலின் நாம் பாவ கருமங்களை விட்டு நீங்கு அறத்தைத் தேடவேண்டும்' என்று சிறிதும் கருதாமல், ஜனங்களை யேமாற்றும்பொருட்டு உபாத்தியாய ரென்றும், பண்டித ரென்றும், பெரியவ ரென்றும் பல போலிப் பெயர்களைத் தரித்துக்கொண்டு, எப்பொழுதும் எவரிடத்தும் பொய்வார்த்தைகளையே கூறி, எல்லோரையும் ஏமாற்றிப் பொருள் முதலியன சம்பாதித்துத் திரியும் பாபாத்மாக்களிடத்தில் புத்திமான்கள், அவர்கள் கூறும் பொய்க்கிரட்டிப்பான பொய்யையே கூறவேண்டும்; அங்ஙனங் கூறினுற்றான் அவர்களுடைய மாயவலையினின்றும் நீங்கிக் காரியசித்தியடைதற் கேதுவுண்டாம்; இவ்வாறின்றி மெய் கூறத்தொடங்கினுல் அந்தப் பொய்யருடைய காரியமே மேலாகி அவர்களுக்கே ஜெயமுண்டாகும். இங்ஙனம் இத்தகையரிடம் பொய் கூறவேண்டியது அவசியமாயினும், மெய்யர், தாய்தந்தையர், தேசிகர் முதலியவர்களிடத்தில் எட்டுணையும் பொய் கூறலாகாது. அங்ஙனம் கூறின் தீங்குண்டாம்.

உருபுமயக்கத்தால் பொய்யரிடம், மெய்யரிடம், தாய்தந்தைய ரிடம், தேசிகனிடம் என வரவேண்டிய வாக்கியங்கள் பொய்யரு க்கு, மெய்யருக்கு, தாய்தந்தையர்க்கு, தேசிகற்கு என வந்தன. நரகமது இதில் அது என்பது எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு.

"உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி."

என்னும் சூத்திரத்தில், 'முற்றுமற் றொரோவழி,' என்றமையால், அது என்னும் முற்றியலுகரம் உயிர் வரக் கெடாமல் நின்று, 'அது வுண்மை' என வகர வுடம்படுமெய் பெற்றது. (எஉ)

## தரித்திரத்தின் கொடுமையும், அஃதின்னதால் நீங்கு மென்பதும்

[கலி விருத்தம்]

தரித்திர வெம்பிணி தான்வந் துற்றிடில்
கருத்தழிந் துண்பதற் குயிர்க லங்குவார்
மருத்துள தோவெனின் மாநி லத்திலை
பொருத்தவொண் செல்வமென் மருந்திற் போகுமே.

(ப - ரை) தரித்திரம்-வறுமை யென்கின்ற, வெம்-கொடுமை யாகிய, பிணி - நோயானது, (உலகத்தில் ஒருவர்க்கு) வந்து உற்றி டில் - வந்து பொருந்துமேயானால், (அவர் அதனால்) கருத்து அழி ந்து-தொழின்முயற்சியிற்செல்லும் எண்ணமெல்லாங்கெட, உண்ப தற்கு - சாப்பிடுவதற்கு, (உணவகப்படாமற்போக அதன்பொருட்டு) உயிர் கலங்குவார்-ஆவி கலக்கமுற்று வருந்துவார்; (இப்படி அவரை வருத்தும் தரித்திரமாகிய பிணிதீர)மருத்து-மருந்தானது, உளதோ எனின் - உண்டோ என்று விசாரிக்குமிடத்து, மா-சிறந்த, நிலத்து- பூமியில், இல்லை-வேறு மருந்தின்றாம்; (பின்னை எதனாலது தீருமெ

னின்), பொருத்தம் - (துன்பத்தை நீக்குதற்குத்) தகுதியாகிய, ஒண் - அழகிய, செல்வம் என் - ஐசுவரிய மென்கின்ற, மருந்தின் - ஔடதத்தினாலே, போகும் - (அவரை விட்டு நீங்கிச்) செல்லும்.

(வி-ரை) ஒருவருக்குத் தரித்திரமானது வந்து சேரும் பக்ஷத்தில் அவர்களிடத்திற் சோம்பல் முதலியன மேலிட்டு எவ்விஷயத்தினும் செல்லும் ஊக்க மில்லாமற்போகு மாகையால் அவர்களுடைய தைரியமான எண்ணங்க ளெல்லா மழியும்; அங்ஙனம் அவை அழியவே கையி லொன்று மகப்படாமற்போம்; அதனால் உண்ணு முணவிற்கும் கஷ்டமாம்; அதனால் அவர் ஆவி கலங்கி வருந்துதற் கேதுவாம்; இவ் வருத்தம், அவர்களிடத்திற் செல்வஞ் சேர்ந்தாற் றீருமேயன்றி வேறொன்றானுந் தீராது. ஆதலின், ஒவ்வொருவரும் சோம்பலின்றி நன்முயற்சிகளைச் செய்து பொருளைத் தேடித் தரித்திரத்தையொழித்தல் வேண்டும். 'கலங்குவார்' என்னும் பயனிலைக் கேற்ப, 'அவர்' என்னும் தோன்றா எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. வெம்மை, ஒண்மை என்னும் பண்புச்சொற்கள் மை விகுதி கெட்டு வெம், ஒண் என நின்றன. மருந்து, மருத்தென வலித்தல் விகாரம் பெற்றது. உயிர் கலங்குவார்-இதில் சினைவினை முதலொடு முடிந்தது.

## பொருளால் இன்பத்தை யனுபவியாமலும், பிச்சைமுதலியன இடாமலு மிருப்பவனிடத்தில் சேர்ந்திருக்கும் பொருள் பயனற்றதென்பது

[கலி விருத்தம்]

பொலிவளந் தங்கிய புவியிற் றானுண்டும்
பலபிறர்க் கிட்டுமே பயன் றுவ் வான்பொருள்
வலியிலாப் பேடிகை வாள்கொ லாணென
அலியினை மேவிய வரம்பை யேகொலோ.

(ப - ரை) பொலி - சிறந்த, வளம் - நிலவண்மைகள், தங்கிய - பொருந்திய, புவியில்-இவ் வுலகத்திலே, (தன்னிடத்தே பூர்வ புண்ணியவசத்தாற் பொருள் கிடைத்திருந்தும் அதன் மூலம்) தான் உண்டும் - தான் நல்ல உணவு முதலியவைகளை உண்டு இன்பத்தை யனுபவித்தும், பிறர்க்கு - பசித்து வந்த அன்னியராகிய யாசகர்க்கு, பலி இட்டும் - பிச்சை கொடுத்தும், பயன் - அப் பொருளின் பிரயோசனத்தை, துவ்வான் - அனுபவியாதவனுடைய, பொருள் - அச் செல்வமானது, (ஆயுதங்களைப் பிரயோகித்துப் பகைவரை வெல்லும்) வலி இல்லா - ஆற்ற லில்லாத, பேடி-பேடியினுடைய, கை-கரத்திலுள்ள, வாள்கொல்-பயனற்ற வாளாயுதமோ?’(அல்லது) பெண்களுக் கின்பத்தை நல்கும் தத்துவ மில்லாத)அலியினை - அலியை, மேவிய-(அவனை நற்புருஷனென்றும், அவனிடம் இன்பத்தை யடையலாமென்றும் நினைத்து) அடைந்து ஒரு சுகமும் பெறாதிருந்த, அரம்பையேகொல் - ஓர் அரம்பாஸ்திரீயோ? (வேறு பயனற்ற பொருள்களில் எதுவோ? இதற் கிணையான பயனற்ற பொருளைத் தெரிந்து கூறுதல் நம்மா லியலாது).

(வி-ரை) பொருளால் தான் நற்சுகங்களை யனுபவியாமலும், பிச்சை முதலிய தான தருமங்களைச் செய்யாமலு மிருப்பவனிடத்தில் சேர்ந்திருக்கும் பொருளானது பேடி கைவாள் அலியைச் சேர்ந்த அரம்பையின் அனுபவம் முதலியன போலப் பயனற்றதாம். இதற்குவமை இன்னதெனத் துணிந்து கூறாமல்பேடி கை வாளோ? அலியைச் சேர்ந்த அரம்பையோ? வேறெதுவோ? என ஐயப்படக் கூறினமையின் பயனற்ற பொருள்களில் இதற் குவமையாகத் தாழ்ந்த பொருள் இன்னதெனத் தெரிந்து கூற முடியாதென்பதும், இஃது எல்லாவற்றினும் தாழ்ந்த தென்பதும் துணியப்படும். பேடி, அலி யென்பன ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் கலந்த வடிவமுள்ளவர்களைக் குறிக்கும் பெயர்களாம். இவ்வகை யிலக்கண முள்ள

வர்கள் மனிதர் வகுப்பினராகிய உயர்திணையிற் சார்ந்திருப்பினும் பொதுப்படக் கூறும்போது ஆண் பெண்ணுகிய இரு வகுப்பினுள் இன்ன வகுப்பெனத் துணிந்து கூப்பறடாமையால் அஃறிணையிற் சேர்த்துப் பேடுகள் அலிகள் என்று கூறப்படுவர். சிறப்பு நோக்கிக் கூறும்போது பெண் தன்மை குறைந்து ஆண்தன்மை மிகுந்திருப்ப வர்கள் உயர்திணை ஆண்பாலாகவும், ஆண்தன்மை குறைந்து பெண் தன்மை மிகுந்திருப்பவர்கள் உயர்திணைப் பெண்பாலாகவும் கூறப் படுவர். இங்ஙனங் கூறுவதில் பெண் தன்மை குறைந்து ஆண் தன் மை மிகுந்தவர்களை அலியென்றும், ஆண் தன்மை குறைந்து பெண் தன்மை மிகுந்தவர்களைப் பேடியென்றுங் கூறுதல் மரபு.

"பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும்."

(ந-பொரு-கு-எ) என்னும் சூத்திரவுரையைப் பார்க்க. இதன்மூலம் இங்குக் கூறிய பேடிக்கும், அலிக்கு முள்ள வேறுபா டுணர்க. (எச)

## இன்ன இன்ன விடத்திற்கு இன்னது இன்னது வனப்பா மென்பது

[நேரிசை வெண்பா]

படைதனக்கு யானை வனப்பாகும் பெண்ணின்
இடைதனக்கு நுண்மை வனப்பாம்—நடைதனக்குக்
கோடா மொழிவனப்புக் கோற்கதுவே சேவகர்க்கு
வாடாத வன்கண் வனப்பு.

(ப-ரை) படைதனக்கு - அரசர்களுடைய சேனைக்கு, யானை - யானைப்படைகள் அதிகமாகச் சேர்ந்திருத்தலே, வனப்பு ஆகும்-அழகாகும்; பெண்ணின் - ஸ்திரீயினுடைய, இடைதனக்கு-இடுப்புக்கு, நுண்மை - சிறுமையுடைத்தாயிருத்தலே, வனப்பாம்-அழகாம்; நடை

தனக்கு - மனிதருடைய நல்லொழுக்கத்திற்கு, கோடா - நடுவுநிலைமையினின்றுஞ் சாயாத, மொழி - வார்த்தைகளை யுடைத்தாயிருத்தலே, வனப்பு - அழகாம்; கோனுக்கு - மன்னவனுக்கும், அதுவே - அந்நன்மொழிகளை யுடைத்தாயிருத்தலே, வனப்பு - அழகாம்; சேவகர்க்கு-அரசரிடத்திற் சேவகத்தொழில் புரியும் வீரருக்கு, வாடாத - கெடாத, வன்கண்மை-வீரமுடைத்தா யிருத்தலே, வனப்பு-அழகாம்.

(வி - ரை) எத்தகைய படையும் யானைப்படை யில்லாவிடில் சிறப்படையமாட்டாது; பெண்ணின் இடையானது நூலைப்போன்று நுண்மையுடையதா யில்லாமல் பருத்திருந்தால் அவளுக்குச் சிறிதும் அழகேற்படமாட்டாது; நல்லொழுக்கத்திற்கும் மன்னர்க்கும் பாரபக்ஷ மில்லாத வார்த்தை அமைந்திராவிடின் சிறப்புண்டாக மாட்டாது; சேவகனுக்கு வீர மில்லாவிடின் அவனுடைய சேவகத் தொழில் பயனற்றதாம். ஆதலின், சேனைக்கு யானைப்படையும், பெண்ணிடைக்கு நுண்மையும், ஒழுக்கத்திற்கும் மன்னனுக்கும் பாரபக்ஷ மில்லாத வார்த்தையும், சேவகனுக்கு வீரமும் அவசியம் அமைந்திருத்தல்வேண்டும்.

கோனுக்கு என்பது உகரச் சாரியையும் ககரவொற்றுங் கெட்டு னகரம் றகரமாய்க் கோற்கு என வந்தது. அதுவே என்பதற்குப் பின், மற்றையவற்றிற்போல வனப்பாம் என்னும் ஒருமொழி வருவித் துரைக்கப்பட்டது. வன்கண்மை என்பது மை விகுதி கெட்டு, 'வன்கண்' என நின்றது. (எரு)

### இதுவுமது

கண்வனப்புக் கண்ணோட்டங் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப் பித்துணையா மென்றுரைத்தல்—பண்வனப்புக்
கேட்டார் நன்றென்றல் கிளர்வேந்தன் றன்னாடு
வாட்டானன் றென்றல் வனப்பு.

(ப - ரை) கண் - கண்ணிற்கு, வனப்பு - அழகானது, கண்ணோட்டம் - சகல ஜீவன்களிடத்தும் பக்ஷமுடைத்தாயிருத்தலாம் (அதாவது: கருணை நோக்கத்தோடு பொருந்தியிருத்தலாம்); கால் - பாதத்திற்கு, வனப்பு - அழகானது, செல்லாமை - யாசகத்தின்பொருட்டுப் பிறர் வாயிலினிடத்தே போகாதிருத்தலாம்; எண் - ஒருவர் கற்றுக்கொண்ட கணிதசாஸ்திரத்திற்கு, வனப்பு-அழகானது, (எவ்வகைக் கணக்குக்களையும் கணக்கிட்டுத் தவறாமல்) இத்துணையாம் என்று-இவ்வளவினவாமென்று, உரைத்தல்-தெளிவாகச் சொல்லுதலாம்; பண் - ஒருவர் பாடும் இசைப் பாட்டிற்கு, வனப்பு - அழகானது, கேட்டார் - அதனைக் கேட்டவர்கள், நன்று என்றல் - நன்றாயிருக்கின்றது என்று வியந்து கூறுதலாம்; கிளர் - (வெற்றி, புகழ் முதலியவற்றால்) விளங்குகின்ற, வேந்தன் - அரசனுக்கு, வனப்பு-அழகாவது, தன் நாடு - இவன் தன்னுடைய நாட்டிலுள்ள குடிகளை, வாட்டான் - வருத்தமாட்டான், நன்று - (இவன் அவர்களுக்குச் செய்வதெல்லாம்) நன்மையே, என்றல்-என்று பலர் கூறிப் புகழ்தலேயாம்.

(வி - ரை) கருணை நோக்கத்தோடிருத்தலே கண் படைத்ததற்கழகாகும்; யாசகத்திற்குச் செல்லாதிருத்தலே கால்படைத்ததற் கழகாகும்; எந்தக் கணக்கையும் சரியாகக் கணக்கிட்டுச் சொல்லுந் திறமே கணித சாஸ்திரப் பயிற்சிக்கழகாகும்; கேட்போர் மகிழ்ந்து புகழப் பாடுதலே இசைநூற்பயிற்சிக் கழகாகும்; குடிகளை வருத்தாமல் பலரும் 'இவ்வரசன் குடிகள்மீது மிக்க அன்புடையன்' என்று சொல்லும்படி அரசாளுதலே வேந்தனுக் கழகாம்.

கண்வனப்பு, கால்வனப்பு, எண்வனப்பு, பண்வனப்பு, வேந்தன் வனப்பு என்பன நான்காம் வேற்றுமைத் தொகைகள்; இவற்றில் தொக்கின்ற குவ்வுருபுகள் தகுதியுடைப் பொருளன. செல்லாமை எனப் பொதுப்படக் கூறியிருப்பினும் யாசகத்திற்குச் செல்லுதலே

எல்லாத் தொழிலினுந் தாழ்ந்ததாதலின், அதற்குச் செல்லாதிருத்த லே இங்குப் பாதத்திற் கழகெனக் குறிப்பிட்டுக் கூறப்பட்டது.

நாடு-இடவாகுபெயராய் அதிலுள்ள குடிகளை யுணர்த்திற்று.()

## இன்ன இன்ன தன்மையுடையவர் அமிர்தத்திற் கொப்பாவ ரென்பது

[நேரிசை வெண்பா]

கற்புடைய பெண்ணமிர்தங் கற்றடங்கி னனமிர்தம்
நற்புடைய நாடமிர்தம் நாட்டுக்கு—நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனும்
ஆகவே செய்யி னமிர்து.

(ப-ரை) கற்பு உடைய-பதிவிரதாதன்மத்தையுடைய, பெண்-ஸ்திரீயானவள், அமிர்தம்-(கொண்ட கணவனுக்கு) அமுதம்போல இனிமை செய்பவளாவள்; கற்று - நல்ல சாஸ்திரங்களைப் பயின்று, அடங்கினன் - (அவற்றின் வழியிலே நடந்து) மனமடங்கினவன், அமிர்தம் - (உலகத்திலுள்ள அறிவுடையார்க்கு அமுதம்போல நலஞ் செய்பவனாவன்; நற்பு உடைய - நன்மையையுடைய, நாடு - நாடானது, அமிர்தம் - (அதில் வாழ்வோர்க்கு) அமுதம்போல இனிமையைச் செய்வதாகும்; நாட்டுக்கு - அந் நாட்டினுக்கு, நற்பு உடைய - (தன்னுயிர்போல மன்னுயிரைக் காக்கும்) நன்மையையுடைய, மேகமே சேர் - மேகமண்டலம் வரை உயர்ந்து அதனிடத்திலேயே சேருகின்ற, கொடி - வெற்றிக்கொடி பொருந்திய, வேந்து - அரசன், அமிர்து - அமுதத்தைப்போல இனிமை செய்பவனாவான்; சேவகனும் - (அவ்வரசனிடத்தில் அமர்ந்திருக்கின்ற) பணிவிடைக்காரனாகிய வீரனும், ஆகவே - அவ்வரசன் வெற்றியினால் நாள்தோறும் வளர்ந்து செல்வமுடையவனாக வோங்கும்படியே, செய்யின் -

(அதற்கான வீரச் செயல்களைச்) செய்வானாயின், (அவ் வரசனுக்கு) அமிர்து - அமுதம்போல இனிமை செய்பவ னாவான்.

(வி - ரை) கற்புடையவள் எப்பொழுதும் கணவனுக் கினிமை செய்யக் கூடியவளாதலின், அவள் அவனுக்கு அமுதமாவாள். கற்றடங்கினவன் அறிவுடையோர்க் கினிமை செய்வானாதலின், அவன் அவர்களுக் கமுதமாம். வளமுடைய நாடு அதில் வாழுங் குடிகளுக் கினிமை செய்யக்கூடியதாதலின், அஃதவர்களுக் கமுதமாம். நற்குண முடைய அரசன் நாட்டிற் கினிமை செய்வானாதலின், அவன் அந் நாட்டிற் கமுதமாவன். வெற்றியை உண்டாக்கத்தக்க சேவகன் எப் பொழுதும் அரசனுக் கினிமை செய்யக்கூடியவனாதலின், அவன் அவ்வரசனுக் கமுதமாவன்.

கற்பு - கன்மையென்னும் பண்புப்பெயர் விகாரம்; இதில் பு - பண்புப்பெயர் விகுதி. மேகமே, ஆகவே என்பவற்றிலுள்ள ஏகாரங் கள் தேற்றப்பொருளன. அமிர்தம் என்பதற்குப் பின்னால், ஆவன் முதலிய பயனிலைச்சொற்கள், பொருட்பொருத்த நோக்கி வருவித் துரைக்கப்பட்டன. சேவகனும் - இதிலுள்ள உம்மை இறந்ததுதழு விய எச்சப்பொருளது. (எஎ)

### நல்லோர் நேயத்தால் இன்பமும், தீயோர் நேயத்தால் துன்பமு முண்டாமெனல்

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

அருமையும் பெருமை தானு மறிந்துடன் படுவர் தம்மால்
இருமையு மொருமை யாகு மின்புறற் கேது வுண்டாம்
பரிவிலாச் சகுனி போலப் பண்புகெட் டவர்க டம்மால்
ஒருமையி னிரய மெய்து மேதுவே யுயரு மன்னே.

(ப - ரை) அருமையும்—ஒருவனுடைய அரிய தன்மையையும் (அதாவது: ஒருவன் நற்குண நற்செய்கைகளிற் சிறந்து அவனுடைய சிநேகம் பிறர்க்குக் கிடைத்த லருமையாயிருக்குந் தன்மையையும்), பெருமைதானும் - மாட்சிமையையும், அறிந்து - நன்றாக ஆராய்ந்து தெரிந்து, (தாமும் அவனுக் கிதஞ்செய்யும் உள்ளன்புடையராய்) உடன்படுவர் தம்மால் - அவனோடு சிநேகமாகப் பொருந்துவோரால், (அவனுக்கு) இருமையும் - இப்பிறப்பு, இதற்குப் பின்னடையும் நிலை (அதாவது மேலுலகம்) ஆகிய இரண்டிடங்களினும், ஒருமை யாகும்-ஒரேதன்மை யுடையதாகும், இன்பு - இன்பத்தை, உறற்கு- அடைதற்கு, ஏது உண்டாம் - காரணமாகிய புண்ணிய செய்கைகள் மேன்மேலும் உண்டாகிக்கொண்டேயிருக்கும்; (துரியோதனனைக் கெடுத்தற்கு வஞ்சனையாக அவனோடு சிநேகங்கொண்டு அவனைச் சுற்றத்தோடுங் கெடுத்த) பரிவு இல்லா-உள்ளன்பில்லாத, சகுனி போல- சகுனியைப்போல, பண்பு கெட்டவர்கள்தம்மால் - குணம் கெட்டவர்களால், (அவர்கள் சிநேகங் கொண்டவனுக்கு) ஒருமையில்-இவ்வுலகத்தில் தோன்றியிருத்தலாகிய ஒரு பிறப்பில், நிரயம் எய்தும்- (மறுமையில்) நரகத்தை யடைதற்குரிய, ஏதுவே - காரணமான பாவச் செய்கைகளே, உயரும் - நாள்தோறும் வளர்ந்துகொண்டேயிருக்கும்.

(வி - ரை) ஒருவனுடைய அருமை பெருமைகளை யுணர்ந்து அவனோடு உள்ளன்போடு சிநேகஞ் செய்பவரால் அவனுக்கு இம்மை மறுமையாகிய இரண்டிடங்களினும் ஒருவிதமான இன்பத்தை யடைதற் கேதுவான புண்ணியச் செய்கைகளே யுண்டாகும்; சகுனியைப் போன்ற குடிகேடன் சிநேகத்தால் நரகத்தை யடைதற் கேதுவான பாவ கர்மங்களே யுண்டாகும்; ஆதலின், இம்மை மறுமைப் பயன்களை யடைய விரும்புவோர் சகுனியைப்போன்ற பாவிகளுடைய சிநேகத்தை விட்டு நீங்கி நல்லோருடைய நேயத்தைக் கொள்ளல்வேண்டும். (எஅ)

## அடாவென்னுஞ் சொல்லை இன்சொல்லாக மதிக்கு மிடங்கள் இன்னவை யென்பது

[கலித்துறை]

கடாவி டுஞ்சமர்க் களத்தினு மடந்தைய ரிடத்தும்
விடாம லோதிய கவிதைபா ராட்டிய விடத்தும்
நடாவி டுஞ்சிறு பிள்ளைக ணவிலுமவ் விடத்தும்
அடாவெ னுஞ்சொலை யின்சொலா மதிப்பர்கற் றறிந்தோர்.

(ப-ரை) கற்று-உலகத்தில் நல்ல சாஸ்திரங்களை ஐயந்திரிபறப் படித்து, அறிந்தோர் - நன்மார்க்கங்களைத் தெரிந்த புத்திமான்கள், கடாவிடும் - வீரர் சேனைகளைச் செலுத்துகின்ற, சமர்க்களத்தினும் - போர்க்களத்திலும்; மடந்தையரிடத்தும் - தாம் ஆசையாகச் சேர்ந்துறவாடும் மங்கையரிடத்திலும்; விடாமல் - கற்பனை நயங்கள் நீங்காதிருக்கும்படி, ஓதிய-வித்வான்கள் சொல்லிய, கவிதை-செய்யுளால், பாராட்டிய இடத்தும் - புகழ்ந்து கூறியவிடத்திலும்; நடாவிடும்-நடமாடி விளையாடுகின்ற, சிறு பிள்ளைகள் - சின்னக் குழந்தைகள், நவிலும் - மழலை மொழிகளைக் கூறுகின்ற, அவ்விடத்தும்-அந்தவிடத்திலும், அடா எனும்-(அந்த வீரர்கள், ஆசைநாயகிகள், வித்வான்கள், குழந்தைகள் ஆகியவர்கள் தம்மை நோக்கி) அடா என்று சொல்லுகின்ற, சொலை - இழிந்த வார்த்தையை, இன் சொலா-இனிமையான சொல்லாக, மதிப்பர் - எண்ணுவார்கள்.

(வி - ரை) போர்க்களத்தில் அறிவுடையோராகிய வீரர்கள் உயர்வு தாழ்வு கருதாமல் ஒருவரையொருவர் நோக்கி அடா வென்று கூறுதலும், அம் மொழியை இனிய வார்த்தையாகக் கொள்ளுதலும் இயற்கை. இதைப்போலவே அறிவுடையோர், மடந்தையரிடத்துச் சரசமாடும்போது அவர்கள் அடாவென்று சொல்லுவதை இன்பமாகக் கொள்ளுதலும், வித்வான்கள் கவிபாடிப் புகழும்போது அடாவென்று சொல்லுதலை இன்பமாகக் கொள்ளுதலும், பாலர்

கள் மழலை வார்த்தை யாடும்போது அடாவென்று சொல்லுதலுக்கு மகிழ்தலும் இயல்பு. 'கடாவிடுஞ் சமர்க்களம்' என்பதற்கு, 'ஆட்டுக்கடாக்களைச் சண்டைக்கு விடும் போர்க்களம்' என்று பொருள் கூறுவாரு முண்டு; இஃதத்துணைச் சிறப்பின்று. இவ் விவேகசிந்தாமணி முதற்பாகத்திலுள்ள, 'கதலி வீரர் களத்திடை வையினும்' என்னுஞ் செய்யுட் கருத்தையே இச் செய்யுட் கருத்தும் பெரும்பான்மையும் தழுவி நிற்றலின் இதற்கு, 'வீரர்கள் சேனையைச் செலுத்திப் போர் செய்யத்தக்க யுத்தகளம்' எனப் பொருளுரைத்தலே சிறப்பாம்.

கவிதை பாராட்டிய-மூன்றும் வேற்றுமைத்தொகை. நடவிடும் என்பது கடாவிடும் என நீட்டல் விகாரம் பெற்றுவந்தது. நடவு-தொழிற்பெயர்; இதில் வு-தொழிற்பெயர் விகுதி; இதனோடு இடும் என்னும் துணைவினை சேர்ந்து நடத்தலைச் செய்யும் (அதாவது: நடந்து விளையாடும்) எனப் பொருள்பட்டது. 'கடாவிடும்' என்பதும் இத்தன்மையதே. (எக)

## எவ்வித இனிமையான பாட்டைப் பாடினும் கல்வி யருமை யறியாதார் அதற்குத் தக்க சன்மானஞ் செய்யா ரென்பது

[கட்டளைக் கலித்துறை]

எண்ணான்கு முப்பத் திரண்டுபற் காட்டி யிசையுடனே
பண்ணாகச் செந்தமிழ்ப் பாடிவந் தாலுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்து கேட்ப ரழகழ கென்ப ரதன்பிறகு
சுண்ணாம்பு பட்ட விலையுங் கொடார்கவி சொன்னவர்க்கே.

(ப - ரை) (பிரயாசையுடன் முறைப்படி தமிழைக் கற்ற வித்வான்கள்) எண் நான்கு-எட்டு நான்காகிய, முப்பத்திரண்டு பல்-முப்பத்திரண்டெண்ணுள்ள பற்களையும், காட்டி - வெளியே தெரியும்

படி திறந்து காட்டி, (அதாவது பற்கள் முழுமையும் வெளியே தெரியும்படி சந்தோஷத்துடன் சிரித்துக்கொண்டு) இசையுடனே-இலக்கணப் பொருத்தத்துடனே, பண்ணாக-இசைப்பாடலாக, செந்தமிழ்-செவ்விய தமிழ்ச் செய்யுட்களை, பாடிவந்தாலும்-தங்கள்மீது புகழ்ச்சியாகப் பாடிக்கொண்டு வந்து சொன்னாலும், இப் பாரிலுள்ளோர் - இம் மண்ணுலகத்திலுள்ள தமிழருமை யறியாதார், (அச் செய்யுட்களுக்குத் தக்க சன்மானங் கொடுக்கச் சிறிதும் மனம் பொருந்தாதவராய் அச்செய்யுட்களை மட்டும் மிகவும் பிரியமாய்க் கேட்பவர்போல) அண்ணாந்து-முகத்தை மேலே தூக்கி(அவ் வித்வான்கள் முகத்தைப் பார்த்து) கேட்பர்-செவி சாய்த்து அச் செய்யுட்களைக் கேட்டு மகிழ்வார்கள்; அழகு அழகு என்பர்-(இச் செய்யுட்களின் கற்பனை)அழகாயிருக்கின்றது! அழகாயிருக்கின்றது!! என்று வீண்புகழ்ச்சி கூறுவர்; அதன் பிறகு-அப்படிப் பிரிய முள்ளவர்போல நடித்து வீண் புகழ்ச்சி செய்த பின்னர், கவி சொன்னவர்க்கு - அச் செய்யுளைக் கூறிய அவ் வித்வான்களுக்கு, சுண்ணாம்பு பட்ட இலையும் - சுண்ணாம்பு வைக்கப் பட்டிருந்த வெற்றிலையும், கொடார் - ஈயமாட்டார்கள், (ஆதலால், இத்தகையர்மீது கவி கூற லாகாது).

(வி - ரை) இச் செய்யுள், வித்வான்களை மதித்து அவர்க்குப் பொரு ளீயாத கருமிகளைக் குறித்து ஒருவராற் செய்யப்பட்டது. இவர் இத்தகைய பலரிடஞ் சென்று கஷ்டப்பட்டு அக்கஷ்டஞ் சகிக்காமையால் இச் செய்யுளைக் கூறினர்போலும். இவர் தமக்குண்டான வயிற் றெரிச்சலால் சொற்பொருளையு நோக்காது எல்லோரையுங் குறிக்கும்படி, 'இப் பாரிலுள்ளோர்' எனப் பொதுப்படக் கூறிவிட்டனர். எனினும், இச் சொல் ஈயாத கருமிகளையே குறிக்கும். இங்ஙனம் கேட்டவர்களை நிந்தித்துக் கூறும்போது, 'வித்வான்கள் தாங்க ளடைந்திருக்கும் சிரமத்தால், 'உலகத்திலுள்ளோர்' 'மனிதர்' என்று பொதுப்படக் கூறிவிடுதலும், உரைசெய்வோர்: கெட்ட

சுபாவ முடையவர்களை மாத்திரம் பிரித்துக் கூறுதலும் இயற்கை. இதனை இன்னும் இதுபோன்ற பழைய தனிச் செய்யுட்களா லுணர லாம். இங்ஙனம் பழைய வித்வான்களாற் பாடப்பெற்ற பல செய் யுட்க ளிருக்கவும், சிலர், கவிகளில் கெட்டவர்களை சுட்டிக் கூறி நிந்தித்தலுங் கூடாதென அங்ஙனம் பாடியவர்களை நிந்தித்துத் திரி வர்; இவர்கள் என்ன நியாயம்பற்றி இங்ஙனங் கூறுகின்றனரோ? அறிவுடையோர்க்கு இவர்களுடைய உள்ளக் கருத்து இன்னதென விளங்காமற் போகாது. கல்வியாளர் கெட்ட வியல்பினரை நிந்தித் துக் கூறுவதால் அவர்கள் நல்வழிக்குத் திரும்ப எதுவுண்டா மென்ப தை, சுயநலங் கருதித் தீயோரைக் கொண்டாடு மியல்பினையுடைய இவர் உணரார்போலும். இச் செய்யுட் கருத்தால் கவி கேட்டும் பொரு ளீயாதவர்மேற் கவி கூறலாகா தென்பது விளங்கும். ஆதலின். கவி பாடுவோர் இத்தகையர்மீது செய்யுட் கூறாமல், நற்குண நற்செய்கை யுடைய பிரபுக்கள்மீது கவி சொல்லவேண்டும்.

எண்ணான்கு முப்பத்திரண்டு - பண்புத் தொகை. சுண்ணாம்பு வைத்த வெற்றிலையைப் பெரும்பான்மையும் மனிதர் உபயோகிப் பது வழக்கமின்று; அங்ஙனம் உபயோகமற்ற வெற்றிலையுங் கொடு க்கமாட்டார்க ளெனவே அவர்களுடைய ஈயாமைக் குணத்தின் விசேஷம் நன்கு விளங்கிற்று. இசை - முதனிலைத் தொழிற்பெயர். இலையும்-இதிலுள்ள உம்மை இழிவுசிறப்புப் பொருளது. (அ0)

நாயகனை வஞ்சித்து அன்னியனைச் சேரும் மாதிற்குப்
பல விதத்திலும் துன்பமே யென்பது

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

மற்றொரு வனைச்சேர் மா திறந் தானும்
வசைநிற்கு முலகமுள் ளளவும்
சுற்றமும் வாழ்வுந் துணையுமே நீங்குஞ்
சோரநா யகனுமே மதியான்

பெற்றசந் ததியு மிழிவுறு மாண்ட
பின்னுறுங் கொடுவெறி நரகம்
சற்றுநே ரங்கொள் சுகத்தினால் விளையுந்
தன்மையீ தரிவையீ ருணர்வீர்.

(ப-ரை) அரிவையீர்-பெண்களே!, (இவ்வுலகத்தில் தன் நாய கனை வஞ்சித்து அவனிருக்க) மற்றொருவனை-வேறொரு சோர புருஷனை, சேர்-(கணவனுக்குத் தெரியாமல்) கூடுகின்ற, மாது-பெண்ணானவள், இறந்தாலும் - மரணமடைந்துவிட்டாலும், வசை-(அவள் இங்ஙனம் அன்னியனைச் சேர்ந்த இழிவா லுண்டாகிய) பழிமொழியானது, உலகம் உள்ள அளவும் - இவ்வுலக மிருக்கும் வரையிலும், நிற்கும் - மறையாமல் நிலைபெறும்; (பின்னும் இத் தோஷத்தால்) சுற்றமும் - உறவும், வாழ்வும் - சுக வாழ்க்கையும், துணையும் - உதவியும், நீங்கும்-அவளுக் கில்லாமற்போம்; சோர நாயகனும் - அவளைக் கூடிய கள்ளப்புருஷனும், மதியான்-அவளைச் சிறிது மதித்து அவள் மீது அன்பைச் செலுத்தமாட்டான்; (அவள் அங்ஙனம் சோரநாயகனைக் கூடிப் பிள்ளையைப் பெற்றாலும்) பெற்ற-அவ்வா றீன்ற, சந்ததியும் - பிள்ளையும், இழிவு உறும் - (சோர சேர்க்கையால் பிறந்த பிள்ளையென்று பலர் கூறுதலாகிய) இகழ்ச்சியை, (அல்லது, தன் தாயின் சொந்த நாயகனுக்கு ஈமக் கடனாற்ற யோக்கிய மில்லாமற் போதலாகிய) இழிவை அடையும்; மாண்டபின்-அவள் இறந்த பிறகு, (அவளுக்கு) கொடு - கொடுமையாகிய, வெறி - அச்சத்தையுடைய, நரகம் - நரகமானது, உறும்-வந்து பொருந்தும்; சற்று நேரம்-சிறிது நேரம், கொள் - அவள் அடைகின்ற, சுகத்தினால்-சோரநாயக சேர்க்கைச்சுகத்தினால், விளையும்-அவளுக்கு உண்டாகும், தன்மை-இயல்பு, ஈது - இத் துன்பங்களை யனுபவித்தலாகிய இதுவாம்; உணர்வீர்-நீங்கள் அறிந்து ஒழுக்கத்தைக் கைக்கொள்வீராக.

(வி - ரை) புருஷ னிருக்க, அன்னியனைச் சேரும் மாதுக் கெய்தும் வசையானது, மற்ற வசைகளிலும் அதிகப்பட்டதாதலால், அஃது அவளிறந்துவிட்டாலும் உலக முள்ளளவும் அழியாது நிலை பெற்றிருக்கும். இன்னும் அவள் உயிருட னிருக்கும்போது, சுற்றத் தார் அவளோடு சேர்ந்திருத்தல் இழிவென்று நினைத்து அவளைத் தங்கள் ஜாதியின்றும் நீக்கிவிடுவார்கள்; அவளிடத்தில் எப்பொழு தும் வியபிசாரத்தால் பல கலகங்கள் விளைந்துகொண்டே யிருக்கு மாதலால் அவளுக்குச் சுகமான வாழ்வு ஏற்படவேமாட்டாது; அவ ளுக்கு ஆபத்து நேர்ந்தகாலத்தில் எவரும் உதவி செய்யமாட்டார்கள்; இவர்கள் இப்படி யிருந்தாலும் அவளோடு கூடிய சோரநாயகனேனும் அவளிடத் தன்புடையனா யிருப்பானோவெனில், அவனும் அங்ஙனம் அன்புடையனா யிருக்கமாட்டான்; 'இவள் நம்மைச் சேர்ந்ததுபோல வே இன்னும் பலரையுங் கூடுவாள்' என்று சந்தேகமும் அதிருப்தி யுங் கொண்டிருப்பான். அவள் சோரநாயகரைக் கூடுவதனால் சந்ததி களைப்பெறினும் அச்சந்ததிகளும் மேன்மை யடையமாட்டார்; அவளை மணந்த நாயகனுக்கு ஈமக்கடன் முதலியன செய்ய யோக்கியமற்று, 'சோரநாயகனுக்குப் பிறந்த பிள்ளைகள்' என்று பலர் கூறும் இழிவை யடைவர். அவள் மாண்ட பின்னரேனும் சுகத்தை யடைவாளோ வெனில், அப்பொழுதும் ஒரு சுகத்தையு மடையமாட்டாள்; கொடுமையாகிய நரகத்தையே அடைவள். அற்ப சுகத்தை அவள் இச்சிப்பதால் இத்தனை தீமைகளும் அவளிடத்துச் சேரும். ஆத லால், ஒவ்வொரு பெண்களும் இதனை நன்குணர்ந்து கற்பைக் கை விடா தொழுகல்வேண்டும். அறிவைய ரெல்லோரும் இதனைத் தேர் ந்து ஒழுங்கான மார்க்கத்தில் நடக்கவேண்டுமென்பதுபற்றியே இச் செய்யுள் அறிவையரை விளித்துக் கூறியதாகச் செய்யப்பட்டிருக் கின்றது. (அக)

அடக்க முதலியன இல்லாதவளோடு கணவர் கூடி வாழ்தல் பிடாரியோடு கூடி வாழ்தற்கு நேரென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

அடுத்தமனை தொறுந்திரிவாள் கணவனுக்கு
முன் னுண்பா ளடக்க மில்லாள்
கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனந்தே
டுவளிவளைக் கலந்து வாழ்தல்
எடுத்தவிடைக் கொடியாரே! தண்டலையா
ரேயெவர்க்கு மின்ப மாகக்
குடித்தனமே செயவேண்டிப் பிடாரிதனைப்
பெண்வைத்துக் கொண்ட தாமே.

(ப - ரை) எடுத்த - மேலே தூக்கிப் பிடித்த, விடைக் கொடியாரே - விருஷபக் கொடியை யுடையவரே!, தண்டலையாரே - தண்டலையில் வாசஞ்செய்யுங் கடவுளே!, (உலகத்தில்) அடுத்த மனை தொறும் திரிவாள் - (தன் வீட்டை விட்டு வெளியேறிப்) பக்கத்து வீடுகளிலெல்லாஞ் சென்று வீண் வார்த்தை பேசிக்கொண்டு திரிபவளும்; கணவனுக்கு முன் - புருஷன் சாப்பிடாமலிருக்க அவனுக்கு முன்னே, உண்பாள் - (தன் வயிற்றையே பெரிதாக நினைத்து) போசன முண்பவளும்; அடக்கம் இல்லாள்-பொறுமை யில்லாதவளும்; கடுத்த மொழி-கோப மிகுந்த வார்த்தைகளை, பேசிடுவாள்- (கணவனுக்கு முன்னே நின்று அஞ்சாமற்) பேசுகிறவளும்; சிறு தனம் தேடுவள் - (புருஷனுடைய கஷ்டத்தை நினையாமல் அவனுடைய சொற்ப சம்பாத்தியத்திலும் அவனறியாதபடி) சிறிது பொருளைக் கவர்ந்து தனக்கென இரகசியமாகச் சேர்த்துவைப்பவளும், (ஆகிய) இவளை-இத்தகைய பெண்ணை, கலந்து வாழ்தல்- மனைவியாக மணந்து கூடி வாழுதல், எவர்க்கும்-எப்பேர்ப்பட்டவருக்கும், (எத்தன்மையதாகுமெனில்) இன்பம் ஆக-சுக முண்டாகும்படி,

குடித்தனம்செய்யவேண்டி - இல்வாழ்க்கை செய்ய விரும்பி, பிடாரி தனை-பேய்க் கூட்டங்களுக்குத் தலைவியாகிய ஒரு பத்திரகாளியை, பெண்டு வைத்துக்கொண்டது ஆம் - மனைவியாகக் கலியாணஞ் செய்து வைத்துக்கொண்டது போலாம்.

(வி - ரை) ஒருவனுக் கமைந்த மனைவி, தன் குடும்பத்தைக் கவனியாமல் அடுத்த வீடுகள்தோறுஞ் சென்று வீண் வார்த்தை வளர்ப்பவளாயும், அவனுக்கு முன்னே உண்பவளாயும், அடக்க மில்லாதவளாயும், கோபச் சொற்களைப் பேசுகிறவளாயும், குடித்தனங் கெடும்படி சிறுதேட்டுத் தேடுகிறவளாயு மிருப்பாளாயின் இவளால் பலவிதத்திலும் அக் கணவனுக்குத் துன்பமே அதிகரித்துக்கொண்டிருக்குமாகையால் இவளோடு அவன் கூடிவாழ்தல் ஒரு பிடாரியோடு கூடி வாழ்வதற்கு நிகராம். பிடாரி-காளி; இவள் ஒருவகைச் சக்தியாயினும் மிகவுங் கொடுஞ் செய்கை யுடையவளாதலின் அச் செய்கை நோக்கி, இச் செய்யுளை யியற்றினோர் அவளை, கொடுஞ் சுபாவமுடைய மனைவிக் குவமையாக எடுத்துக் கூறினார் இச் செய்யுள் தண்டலையார் சதகத்திலுள்ளது. பெண்களெல்லோரும் இதனை நோக்கி நல்வழிப்பட் டுய்யவேண்டுமென்னுங் கருத்துடன் தண்டலையாரை முன்னிலையாக்கி இச் செய்யுள் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின், ஒவ்வொரு பெண்களும் இச் செய்யுட் கருத்தை யுணர்ந்து இதிற் சொல்லப்பட்டிருக்கும் இழி குணங்களை நீக்கி நற்குணங்களைக் கைக்கொள்வாராக. தொறும் - தொழில், இடங்களின் பன்மைப் பொருளைத் தரு மோரிடைச்சொல்; இங்கே வீடுகளின் பன்மையை யுணர்த்திற்று. (அஉ)

### பொருளின்மேல் அபிமானம் வைப்பதால் அது கூட வராதென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

என்பொருளென் பொருளென்று சீவன்விடு மனமேயொன்
றியம்பக் கேளாய்
உன்பொருளா னலதன்மே லுன்னுமம் வரைந்துளதோ
வுன்ற னேடும்

முன்பிறந்து வளர்ந்ததுகொ லினியுனைவிட் டகலாதோ
முதிர்ந்து நீதான்
பின்பிறக்கும் போததுவுங் கூடவிறந் திடுங்கொல்லோ
பேசு வாயே.

(ப - ரை) (மனமே! உலகத்தில் பொருளானது நிலையற்றதா யிருந்தும் அஃது எப்பொழுதும் உன்னைவிட் டகலமாட்டாதென்று நினைத்து அதன்மீது மிக்க அபிமானம் வைத்து நிலையான முத்தியைத் தேடுதற்குரிய வழிகளை மறந்துவிட்டனை; இறந்துபோகுங் காலத்தும் இப் பொருளை மறக்கமாட்டாய்; அங்ஙனம் முடிவுகாலத்திலும் மறவாமல் அப் பொருளை) என் பொருள் என் பொருள் என்று-என்னுடைய திரவியம் என்னுடைய திரவியம் என்று நினைத்துக் கொண்டு, சீவன் விடும்-உயிரை விடுகின்ற, மனமே-எனதுள்ளமே!, ஒன்று இயம்பக் கேளாய் - நான் உனக்கொரு காரியம் இப்போது சொல்லக் கேட்பாயாக!, (நீ நினைக்கின்றபடி அப் பொருளானது) உன் பொருள் ஆனால் - உன்னுடைய பொருளாயிருப்பது மெய்யானால், அதன்மேல்-அப் பொருளின்மேல், உன் நாமம்-உன்னுடைய பெயரானது, வரைந்ததோ - எழுதப்பட் டிருக்கின்றதோ?, (இல்லை.) உன்றனோடும் - உன்னுடனே, (அது) முன் பிறந்து - முன்னே தோன்றி, வளர்ந்தது கொல் - வளர்ந்ததோ? (இல்லை.) இனி - இனிமேல், உன்னைவிட்டு அகலாதோ-உன்னைவிட்டு நீங்க மாட்டாதோ? (இல்லை.) நீ முதிர்ந்து-நீ கிழத்தன்மை யடைந்து, பின்பு - பின்னால், இறக்கும்போது - மரணமெய்துஞ் சமயத்தில், அதுவும் - அப் பொருளும், கூட-உன்னுடனே, இறந்திடுங் கொல்லோ-மரண மடையுமோ? (இல்லை.) பேசுவாய்-(அது நான் சொன்னதற்கு மாற்றமாக இருப்பதுண்டானால் அதனை யெனக்குச்) சொல்வாயாக! (மேற் கூறியபடி அஃது உனக்கு எவ்விதத்தாலும் சொந்தமாகா தாதலால் அதன்மேலிருக்கும் அபிமானத்தை விட்டு நிலையான ஞானத்தைத் தேடுதலே நலமாம்).

(வி-ரை) பொருளானது இவ் வுலக வின்பத்திற் கின்றியமை யாததெனினும், அஃது எப்பொழுதும் ஒருவனிடத்தே நிற்பது அருமையாகலானும், அங்ஙன நிற்பினும் மரணகாலத்திலேனும் நீங்குமாதலானும், அதனைப் பெற்றோர் அதன்மீது மிகுந்த பற்று வைத்து ஞானமார்க்கத்தை மறந்துவிடாமல் தாமரையிலைத் தண்ணீர்போல அதனிடத்து ஒட்டியு மொட்டாமலு மிருந்து, அஃதிருக்கும்போதே அதன்மூலம் அறத்தைத் தேடிக்கொள்ளவேண்டும்; அதனையே பெரிதாக நினைத்து ஒருவருக்கு மீயாமல் கட்டிக் காத்துக் கொண்டிருத்தல் மடமையாம்.

"நில்லாத வற்றை நிலையின வென் றுணரும்
புல்லறி வாண்மை கடை."

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று."

என்னுந் திருக்குறட் செய்யுட்களும் இதனை வலியுறுத்துவனவாம். இங்ஙனம் கூறியதனால் பொருளைத் தேடுதற்கும் முயற்சி செய்யலாகாதென்பது கருத்தன்று; பொருளைத் தேடி அதன்மீது பேராசை வைத்து அதனை நல்வழியிற் செலவிடாமல் புதைத்து வைக்கலாகாதென்பதும், அதன்மூலம் தானதருமங்களைச் செய்து முத்திக்கு வழியைத் தேடவேண்டு மென்பதுமே இச் செய்யுட் கருத்தாம். இதனைப் படிக்கும் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மனத்தை நோக்கி இங்ஙனங் கூறி அதனை நல்வழிக்குத் திருப்பவேண்டு மென்பதுபற்றியே இச் செய்யுள் மனத்தை விளித்துச் சொன்னதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின், இதனை யுணரும் அறிவாளர் ஒவ்வொருவரும் இதன் கருத்தின்படி நடந்து நற்பதவி பெறுவாராக.

'வளர்ந்துளதோ, அகலாதோ' என்பவற்றி னீற்றிலுள்ள ஓகார விடைச்சொல்லும், 'வளர்ந்ததுகொல், இறந்திடுங்கொல்' என்பவற்றி

ணீற்றிலுள்ள சொல் என்னும் வினைப்பொருளைத்தரு மிடைச்சொல்லும் இங்கு எதிர்மறைப் பொருளில் வந்தன. (அ௩)

## இன்னவர்க்கு மரியாதை செய்தல் தகும், இன்னவர்க்கு மரியாதை செய்தல் தகா தென்பது

[கலி விருத்தம்]

இறையவன் சேவகர்க் கெழுத லில்லவட்
கறைகழற் கணவன்மா ணாக்கர்க் காரியன்
முறையல மாமர்க்கு மருகர் மூப்பினும்
மறைதரு முறையினால் வணங்கல் வேண்டுமால்.

(ப-ரை) இறையவன் - அரசனா யிருப்பவன் (வயதிற் சிறியவனாயினும்), சேவகர்க்கு-தன்னிடத்தே வேலை செய்யும் பணிவிடைக்காரனுக்கு, (அவன் வயதில் முதிர்ந்தவனாயிருந்தாலும்) எழுதல்-எழுந்து மரியாதை செய்தலும்; இல்லவட்கு-மனைவிக்கு, (அவள் மூத்தவளாயிருந்தாலும் வேறெவ்வகைச் சிறப்பினை யுடையவளா யிருந்தாலும்) அறை - சப்திக்கின்ற, கழல் - வீரகண்டையை யுடைய, கணவன் - புருஷன், எழுதல் - எழுந்து மரியாதை செய்தலும்; மாணாக்கர்க்கு - சீடர்களுக்கு, (அவர்கள் வயதில் மூத்தவர்களாயிருந்தாலும்) ஆரியன் - குருவாயிருப்பவன், எழுதல் - எழுந்து மரியாதை செய்தலும், முறை அல்ல-(சாஸ்திர விதியின்படி) ஒழுங்கன்று. மாமர்க்கு-மாமன்மார்களா யிருப்பவர்களுக்கு, மருகர் - மருமக்கண்மார், மூப்பினும்-மூப்புற்றிருந்தாலும், (அவர் அந்த மாமன்மார்களை) மறை தரு-வேத சாஸ்திரங்கள் தருகின்ற (அதாவது வேத சாஸ்திரங்களிற் சொல்லுகிற), முறையினால் - கிரமத்தோடு, வணங்கல்வேண்டும் - வணங்கி மரியாதை செய்தல்வேண்டும்.

(வி-ரை) சேவகன் வயதின் முதிர்ந்தவனாயிருந்தாலும் அவனை யாளுமரசன் அவனுக்கெழுந்து மரியாதை செய்யலாகாது; அவ்வா

றே மனைவிக்கு நாயகனும், மாணக்கர்க் காசிரியனும் வணக்கஞ் செய்தல் கூடாதாம். மருமக்கண்மார்களா யிருப்பவர்கள் வயதின் மீறியவர்களாயிருந்தாலும் மாமன்மார்களுக்கு வணக்கஞ் செய்யவேண்டும்; இது சாஸ்திர விதியாம், 'எழுதல்' என்பது மற்றைய விரண்டிடங்கட்குங் கூட்டப்பட்டது. (அச)

## பகைக்கத் தகாதவர் இன்னவரென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

மன்னவன் கணக்கன் பார்ப்பான் வலுவுள்ளோன் மந்திர வா
பொன்னுள வன்கு ருக்கள் புலவன்பண் டிதன மைச்சன் [தி
அன்னஞ்செய் திடுவோ னெங்கு மடங்காத துட்ட னாமிப்
பன்னிரு பேரோ டென்றும் பகைகன விலுங்கூ டாதே.

(ப-ரை) மன்னவன் - அரசன், கணக்கன்-கிராமக்கருணீகன், பார்ப்பான்-வேதியன், வலு உள்ளோன்-மிக்க வல்லமை பொருந்தியவன், மந்திரவாதி-மந்திரவித்தைக்காரன், பொன் உள்ளவன் - மிகுந்த திரவிய முடையவன், குருக்கள்-ஆசான், புலவன் - வித்துவான், பண்டிதன் - வைத்தியன், அமைச்சன் - மந்திரி, அன்னம் செய்திடுவோன் - சோறு சமைக்குஞ் சமையற்காரன், எங்கும் - எவ்விடத்தும், அடங்காத - பணியாத, துட்டன் - தீயன், ஆம்-ஆகிய, இப்பன்னிரு பேரோடு-இந்தப் பன்னிரண்டு பேர்களுடனே, பகை-பகை கொள்ளுதல், (எவர்க்கும்)என்றும்-எப்பொழுதும், கனவிலும்-சொப்பனத்திலும், கூடாது - ஆகாது.

(வி-ரை) உலகத்தில் எவரேனும் மன்னனோடு பகை கொண்டால் அவனால் எதுவும் இலகுவாகச் செய்யமுடியு மாகையால் அவனால் அங்ஙனம் பகைத்தவர்க்கு விரைவிற் கேடு சம்பவிக்கும். கிராமக் கணக்கனோடு பகை கொண்டால் அவன் சமயம் பார்த்துப் பயிரிடாத நிலங்களைப் பயிரிட்டவையாகச் சேர்த்தும், குறைந்த வரியுள்ளவை

னுக்கு அதிகவரி யேற்படுத்தியும், வாரம் பிரித்தல் முதலிய விஷயங்களில் நஷ்ட முண்டாகும்படிப் பல மாறுதல்களைச் செய்தும், பொய்க்கணக் கெழுதி எல்லோருக்கும் நம்பிக்கையாகக் காட்டி அங்ஙனம் பகைத்தவருடைய குடியைக் கெடுத்துவிடுவான். பார்ப்பானோடு பகை கொள்ளின் அவன் மற்றையரைப்போல் அதனை விரைவில் மறந்துவிடாமல் மனத்தில் வைத்திருந்து எந்தச் சமயத்திலாவது அங்ஙனம் பகைத்தவரை ஆபத்தான விஷயங்களிற் சிக்க வைத்துக் கெடுத்துவிடுவான்; அல்லது சாபம் முதலிய விடுத்லாற் கெடுப்பான் ஒருவர் தம்மினும் வலியானோடு பகை கொண்டால் அவன் அவரை எளிதில் வெல்வானாதலின் அதன் மூலம் அவர்க்குக் கேடு சம்பவிக்கும். மந்திரவாதியுடனே ஒருவர் பகைத்துக்கொள்ளின் அவன் மாரணவித்தை முதலியவைகளால் அவரை நாசஞ் செய்துவிடுவான். மிக்க திரவிய முள்ளவனோ டொருவ ரெதிர்த்தால் அவன் அப்பொருளின் சகாயத்தால் எந்த வழியினாலாவது அவரை விரைவிற் கெடுத்துவிடுவான். குருக்களோடு ஒருவர் பகை கொண்டால் அவனிடுஞ் சாபத்தாலவர் கெடுவர். புலவனோ டொருவர் பகை கொண்டால் அவன் பாடும் வசையினா லவர் கெடுவர். வைத்தியனோடு ஒருவர் பகை கொண்டால் அவன் அந்தப் பகையை மனத்தில் வைத்திருந்து ஏதேனும் நோய்கொண்ட சமயத்தில் சரியானபடி சிகிச்சை செய்வதற் கிணங்காமல் அவரைக் கெடுத்துவிடுவான். மந்திரியோ டொருவர் விரோதங் கொண்டால் அவன் மிகவுந் தந்திர முடையவனாதலின் எந்த வழியினாலாவது சூக்ஷுமமாக அவ்வரைக் கெடுத்துவிடுவான். சமையற்காரனோ டொருவர் பகைத்துக்கொள்ளின் அவன் உணவு முதலியவைகளைக் கெடுப்பதனால் அவர்க்குக் கேடு செய்வான். அடங்காத துஷ்டனோடு ஒருவர் பகைத்துக்கொண்டால் அவன் எதற்கு மஞ்சாதவனாகையால் மிக்க துணிவோடு அவர்க்குப் பல தீங்குகளைச் செய்துவிடுவான். ஆதலால், இவர்களோடு எவரும் பகை கொள்ள லாகாது. (அ௫)

## மதியாளரோடு மதியீனர் உறவாகா ரென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

புலியொடு புல்வாய் தானும் பொருந்தியே யுறவா னாலும்
எலியொடு பூனை கூடி யிசைந்துநன் குறவா னாலும்
நலமிகு சர்ப்பந் தேரை நன்றதா யுறவா னாலும்
மலமின்மே லவரோ டற்ப மதியின ருறவா காரே.

(ப - ரை) புலியொடு - வியாக்கிரத்துடனே, புல்வாய்-(அதற்கெப்போதும் பகையாகிய) கலைமான், பொருந்தி-சேர்ந்து, உறவானாலும்-சிநேகமானாலும்; எலியோடு - எலியுடனே, பூனை - (அதற்கெப்போதும் விரோதயாகிய) இற்புலியானது, கூடி-சேர்ந்து, இசைந்து-அதன் மனத்திற் கிணங்கி, நன்கு-நன்றாக, உறவானாலும்-நேயமானாலும்; நலம் மிகு - அழகு மிகுந்த, சர்ப்பம்-அரவத்துடனே, தேரை - (அதற்கு மிக்க பகையாகிய) தவளையானது, நன்றதாய் - நன்மையுடையதாகி, உறவானாலும்-நேயமானாலும்; மலம் இல் - குற்றமற்ற, மேலவரோடு - பெரியாரோடு, அற்ப மதியினர் - சின்ன அறிவை யுடைய மூடர், உறவாகார் - எப்போதும் எவ்வகையினும் சிநேகமாக மாட்டார்.

(வி - ரை) மானோடு எக்காலத்தும் பகைகொண்டிருக்கும் புலியும் ஒரு சமயம் அதனிடத்துச் சிநேகங் கொள்ளினுங் கொள்ளும்; எலியுடனே பகைகொண்டிருக்கும் பூனையும் ஒருசமயம் அதனிடத்துச் சிநேகங் கொள்ளினுங் கொள்ளும்; தேரையுடனே பகைகொண்டிருக்கும் சர்ப்பமும் ஒரு சமயம் அதனிடத்துச் சிநேகங் கொள்ளினுங் கொள்ளும்; மதியீனர் மாத்திரம் அறிவுடையாரோடு எப்போதும் உறவாகமாட்டார்கள்; அவர்க்குத் தகுதியான அறிவீனரையே கொண்டாடித் திரிவர்.

'புல்வாய்தானும்' என்பதில் தான், உம் அசைகள். (அசு)

## இன்ன காரணங்களால் வியாதி தோன்று மேன்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

தன்னைத்தான் பேணு தாலுஞ் சரீரத்தின் தண்டிப் பாலும்
பின்னுற்ற விசாரத் தாலும் பின்சல மலத்தி னாலும்
அன்னத்தை யொறுப்ப தாலு மரையுடன் முழுக லாலும்
தன்மத்தை யிகழ்வ தாலுஞ் சரீரத்தில் வியாதி தோன்றும்.

(ப - ரை) தன்னைத்தான் - ஒருவன் தன்னுடலைத் தானே, பேணுதாலும்-நல்லுணவு முதலியவற்றை யூட்டிக்காப்பாற்றாமையினு லும்; சரீரத்தின் தண்டிப்பாலும் - அவன் சரீரத்தினுடைய மிக்க வருத்தத்தாலும் (அதாவது, சரீரத்திற்கு அளவுக்கு மிஞ்சிய வேலையைக் கொடுக்க அது வருந்துவதாலும்); பின்-(அவன் தேகமெடுத்து அறியாமைப் பருவம் நீங்கி அறிவு வந்த) பின்னர், உற்ற-அவனிடத் தே வந்து பொருந்திய விசாரத்தாலும் - விசனத்தினுலும்; பின்-பிக் கிக்கொண்டிருக்கிற, (அதாவது, அவனுடைய தேகத்தில் கட்டுப் பட்டிருக்கின்ற, சலம் - நீரினுலும், மலத்தினுலும்-துர்மலத்தாலும்; அன்னத்தை - சோற்றை, ஒறுப்பதாலும்-(அவன் உண்ணமல் வெறுத்து) நீக்குவதாலும்; அரை உடல்-பாதி தேகம் (நனையும்படி), முழுக லாலும் - (அவன்) நீரிற் குளிப்பதாலும், தன்மத்தை - அறத்தை, இகழ்வதாலும் - (அவன்) இகழ்ந்து செய்யாமல் விடுவதனுலும், சரீரத்தில் - அவனுடைய தேகத்தில், வியாதி - பிணியானது, தோன்றும் - உண்டாகும்.

(வி-ரை) ஒருவன் உணவு முதலியவைகளாற் றன்னுடம்பைப் பாதுகாவாமையினுலும், சரீரத்திற்கு அளவுக்கு மிஞ்சிய வேலைகளைக் கொடுத்து அதனை வருத்துவதனுலும், விசனமடைவதாலும், மல சல பந்தத்தை நீக்காமையினுலும், அன்னத்தைப் பிரியத்தோடுண்ணுவதற்கான உபாயத்தைத் தேடிக்கொள்ளாமையாலும், பாதியுடல் நனைந்தும் பாதி நனையாமலு மிருக்கும்படி ஸ்நானஞ் செய்வதா

ஹும், அறத்தை யிகழுந் தோஷத்தினலுமே அவனுடைய சரீரத்தில் வியாதி யுண்டாகும். ஆதலின், ஒவ்வொருவரும் இக் குணங்களை நீக்கி வியாதி வராமலிருத்தற் குபாயத்தைத் தேடிக்கொள்ளவேண்டும்.

பின்-பெயரெச்சம்; இது மலம் சலம் என்னும் பெயர்களோடு முடிந்தது. தன்மம்-தர்மமென்னும் வடமொழித் திரிபு. (அஎ)

## செல்வச் செருக்கால் மனிதர்க்கு இன்ன குணங்களுண்டா மெனல்

[கலி விருத்தம்]

ஏர்பெறு மிருநிதிச் செருக்க தெய்திடில்
தேர்செவி யுடையவர் செவிட ராகுவர்
ஓர்தரு முரைவலா ரூமை யாகுவர்
கூர்விழி யுடையவர் குருட ராவரே.

(ப-ரை) ஏர் பெறு - அழகைப் பெறுகின்ற, இரும் - பெரிய, நிதி செருக்கது - திரவிய மிகுந்து அதனு லேற்படும் அகங்கார மானது, எய்திடில்-மனிதர்க்கு வந்தடைந்தால், (அவர்களுள்)தேர் - பிறர் சொல்வதைக் கேட்டுத் தெளிவதற்குதவியா யிருக்கின்ற, செவி யுடையவர் - காதுகளையுடையவர்களும், (அச் செல்வச் செருக்கால்) செவிடர் ஆகுவர் - (பிறர் சொல்லும் வார்த்தைகள் அச் செவிகளுக் கேளுமற் போவதால்)செவிட்டுத் தன்மை யுடையவராவர்; ஓர்தரும் - அறிகின்ற, உரை வல்லார் - பேசுதலில் வல்லவராயிருப்பவர்களும், (அப்பொரு ளகங்காரத்தால்) ஊமை ஆகுவர் - பிறரோடு பேசாமல் ஊமையாகிவிடுவர்; கூர் விழி உடையவர் - கூர்மையான கண்களை யுடையவர்களும், (அந் நிதிச் செருக்கால்) குருடர் ஆவர் - எதிரில் வருபவரும் தெரியாம லிருக்கத்தக்க குருட்டுத்தன்மை யுடையவ ராவார்.

(வி-ரை) நல்லவர்க்குச் செல்வ முண்டானால் அவர் அதனை நிலையற்றதென வெண்ணி அதன்பொருட்டுச் செருக்கடையமாட்டார்கள்; கீழ்மக்களுக்குப் பொரு ளுண்டானால் அவர் உடனே செருக்கடைவர்; அங்ஙனம் செருக்கடைந்தவரிடத்தில் பிறர் பேசினால் அந்த வார்த்தைகள் அவர்களுடைய செவிகளுக் கேறமாட்டா; அவர்கள் எவர்களுடைய வார்த்தைகளையும் கேளாமல் செவிடர்போல் இறுமாப்புக்கொண்டு திரிவர்; இன்னும் அவர்கள் பிறரோடு பேசுதற்கும் நாவெழாமல் அகங்காரங் கொண்டு ஊமையர்களைப்போன்றுந் திரிவர்; பன்முறை பார்த்துப் பழகியவர்கள் எதிரே வரினும் அவரோடு இனிய வார்த்தை யாடாமல் குருடரைப்போன்று செல்வர். கல்வி கற்றவரென்று பெயர் வைத்துக்கொண்டு திரியும் சிலருங் கூட, செருக்கால் இக் குணங்களை யுடையவர்களாய்த் திரிவதை இப்பொழுதுங் காணலாம். இவர்க ளெல்லோரும் மிருகங்களினுந் தாழ்ந்த வகுப்பைச் சார்ந்தவர்களேயன்றி, மனித வகுப்பிற் சார்ந்தவராகமாட்டார். செல்வமுற்றாலுஞ் செருக்கடையக்கூடா தென்பதை வலியுறுத்திக் கூறுதற்பொருட்டே இச் செய்யுள் கூறப்பட்டதாம். ஆதலின், அறிவுடையோர் இக் குணங்களை யொழிப்பாராக.

ஆகுவர் - இதில் ஆகு - பகுதி. (அஅ)

## திரவியத்தை நல்வழியிற் செலவிடாவிடின் அது விருத்தியாகா தென்பது

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்]

திரவியம் வந்தபோது சேர்ந்தபல் லோர்க்கு மீந்தால்
வரவர வளரு மந்த வகைசெயா விடிற்கெட் டேகும்
ஒருகலின் கிணைவிட் டக்கா லோ் தநீர் போக்குப் போகப்
பெருகுறு மேரி யில்லா விடினடு வணையைப் போக்கும்.

(ப-ரை) ஏரி - குளத்தில், (வெள்ளநீர் வந்து பெருகுங் காலத்தில்) ஒரு கலிங்கினை-(ஏரியில் நிறையும் நீர் வடியும்படி கட்டப்பட்டிருக்கும் மதகுகளில்) ஒரு மதகை, விட்டக்கால்-மிகுந்த நீர் கழியும்படி திறந்துவிட்டால், ஓதநீர் - பெருகிய வெள்ளநீரானது, போக்குப் போக-அதன் வழியே போக்காகப்போக,(அவ்வெள்ளநீரால் அவ்வேரியின் கரைக்கு யாதொரு கெடுதியும் நேராமல்) ஏரி - அக் குளமானது, பெருகுறும்-நீர் நிறைந்து பெருக்கத்தை யடையும்; இல்லாவிடின்-அங்ஙனம் அந்தக் கலிங்கைத் திறந்துவிடுத லில்லாவிட்டால், நடு - அவ்வேரியினடுவே யமைந்த, அணையை - அணையாகிய கரையை, ஓதநீர்-அவ்வெள்ளநீரானது, போக்கும்-உடைத்து நாசப்படுத்தி அவ்வேரியில் நீரில்லாமற் செய்துவிடும்; (அதுபோல) திரவியம்-நிதியானது, வந்தபோது - (ஒருவர்க்குப் பூர்வ புண்ணிய வசத்தினலே) வந்து சேர்ந்த சமயத்தில், (அவர் அதனை) சேர்ந்த - தம்மிடத்தே பொருளை விரும்பி இரப்பதற்கு வந்தடைந்த, பல்லோர்க்கும்-உத்தமராகிய பலருக்கும், ஈந்தால்-சிறிது சிறிதாகக் கொடுத்துவந்தால், வரவர - அந்த நிதியானது அவரிடத்தே வந்து சேரச் சேர, வளரும் - நாடோறும் பல வழியிலும் விருத்தியாகிக்கொண்டேயிருக்கும்; அந்த வகை செய்யாவிடில் - அவ்விதம் ஈதலைச் செய்யாவிட்டால், (அப்பொருளானது ஒரே சமயத்தில் திடுமென ஏதேனு மொருவழியினல்) கெட்டு-சிறிது மின்றி நாசமடைந்து, ஏகும் - அவரை விட்டு நீங்கும்.

(வி-ரை) ஏரியில் நீர் வந்து பெருகுங்காலத்தில் மதகைத் திறந்து அந் நீருக்குப் போக்கு விட்டால் அக் குளக்கரைக்கு எவ்வித கெடுதியு மின்றி அதில் நீர் பெருகினபடியே யிருக்கும்; அங்ஙனம் போக்கு விடாதொழியின் வெள்ளப் பெருக்கால் அவ் வேரிக்கரை உடைய அதிலுள்ள நீரெல்லாம் போய்விடும்; அதுபோல, ஒருவர்க்குத் திரவியம் வந்து சேருங் காலத்தில் அதிற் சிறிது பாகத்தை நல்

வழியிற் செலவிட்டுவந்தால் அப் பொருளானது வரவரப் பெருகும்; இல்லாவிடில் அது விருத்தி யடையாமல் ஒரேகாலத்தில் நாசமாகி விடும். எரி, ஒதநீர் என்பன இரண்டிடங்கட்குங் கூட்டப்பட்டன. (அக)

## காமத்தால் விளையுந் தீமைகள் இன்னவை யென்பது

[கலி விருத்தம்]

கைதவ மிழைத்தலுங் களவு செய்தலும்
ஐதுயிர் கோறலு மறத்தைக் கோறலும்
பொய்தவ வுரைத்தலும் பொருளி ழத்தலும்
எய்திய காமத்தி னன்றி யில்லையே.

(ப-ரை) கைதவம் - வஞ்சனைகளை, இழைத்தலும்-செய்வதும்; களவு செய்தலும்-திருட்டுத்தொழிலை நடத்துதலும்; ஐது-அழகாகிய, உயிர் கோறலும் - உயிரைக் கொல்வதும்; அறத்தை - தருமத்தை, கோறலும்-கொல்லுதலும் (அதாவது: கெடுத்தலும்); பொய்-அபத்தமான வார்த்தைகளை, தவ - மிகுதியாக, உரைத்தலும்-சொல்வதும்; பொருள் - கையிலுள்ள திரவியத்தை, இழத்தலும்-இழப்பதும், எய்திய - (ஒருவனுக்குப்) பொருந்திய, காமத்தின்' அன்றி - பெண்ணாசையாலல்லாமல், இல்லை - ஏற்படுவனவல்ல.

(வி - ரை) வஞ்சனை, திருட்டு கொலை, தருமக்கேடு, பொய், பொருட்கேடு முதலியவைகளெல்லாம் அன்னிய பெண்ணாசையினாலேயே உண்டாம். ஆதலின், ஒவ்வொருவரும் அதனை யொழித்தல்வேண்டும்.

'கொல்தல்' என்னுந் தொழிற்பெயர் விகாரத்தால் முதனீண்டு, "னலமுன் றனவும்......," (ந. மெ. பு. கூ௪) என்னும் சூத்திரவிதியால் வருமொழி முதலிலுள்ள தகரம் றகரமாக, "ருறில்

செறி யாலள...," (ந. மெ. பு. உசு) என்னுஞ் சூத்திர விதிப்படி வினைமொழி யீற்று லகரங் கெட்டு 'கோறல்' என வந்தது. (கூ0)

இதுவுமது

நன்றியைக் கோறலு நலனைக் கோறலும்
வென்றியைக் கோறலும் விவேகங் கோறலும்
துன்றிய வொக்கலைத் துறந்து நிற்றலும்
கன்றிய காமத்தி னன்றி யில்லையே.

(ப - ரை) நன்றியை - நன்மையை, கோறலும்-கெடுத்தலும்; நலனை-அழகை, கோறலும்-நாசப்படுத்துதலும்; வென்றியை-வெற்றியை, கோறலும் - கெடுத்தலும்; விவேகம் - அறிவை, கோறலும் - தொலைத்தலும்; துன்றிய - நெருங்கிய, ஒக்கலை-சுற்றத்தாரை, துறந்து - நீங்கி, நிற்றலும் - துணையின்றி நிராதரவாய் நிற்பதும், கன்றிய - (முன்னே தன்னைக் கொண்டதால் பலரும் மனம்) நைந்து வருந்தியதற் கேதுவான, காமத்தின் அன்றி-அன்னிய மாத ரிச்சையா லல்லாமல், இல்லை - ஒருவனுக் கேற்படுவனவல்ல.

(வி-ரை) ஒருவனுக் கேற்படும் நன்றி, அழகு, வெற்றி, விவேகம், சுற்றம் ஆகியவைக ளெல்லாம், காமமானது அவனிடத்துப் பொருந்தின் கெடும். (கக)

இதுவுமது

பகையினை யாக்கலும் பாவ மாக்கலும்
நகையினை யாக்கலு நவையை யாக்கலும்
திகைமன மாக்கலுஞ் சிறுமை யாக்கலும்
அகைதரு காமத்தி னன்றி யில்லையே.

(ப - ரை) பகையினை-(பலருடன்) விரோதத்தை, ஆக்கலும்-உண்டாக்குதலும்; பாவம் - பல அக்கிரமச் செயல்களை, ஆக்கலும் -

செய்தலும்; நகைவினை-பலரும் பார்த்திகழும்படியான இகழ்ச்சிகளை, ஆக்கலும்-தோற்றுவித்தலும்; நவையை-பல குற்றங்களை, ஆக்கலும்-செய்தலும்; திகை மனம் - மயக்கமான மனத்தை, ஆக்கலும் - உண்டாக்கலும் (அதாவது: மனத்தைக் கலங்கச்செய்தலும்); சிறுமை - தாழ்மையை, ஆக்கலும் - உண்டாக்குதலும், அகை தரு-பிறர் அடித்தல் முதலிய துன்பங்களைத் தருகின்ற, காமத்தின் அன்றி - பெண் விருப்பாலல்லாமல், இல்லை - ஒருவனுக் கேற்படுவனவல்ல.

(வி-ரை) மனிதனுக்குப் பகை, பாவம், இழிவு, குற்றம், மனக் கலக்கம், தாழ்மை முதலியவைக ளெல்லாம் காமத்தினாலேயே யுண்டாகும். பெண்ணாசையால் ஓரிடத்திற் செல்பவர்க்கு அடி முதலிய துன்பங்க ளேற்படுவது இயற்கையாதலால் அக் காமம் 'அகை தரு காமம்' என்று கூறப்பட்டது.

அகை - தல் விகுதி கெட்ட முதனிலைத் தொழிற்பெயர். அகைத்தல்-அடித்தல், அல்லது அறுத்தல். (கூஉ)

## உழுதொழிலின் சிறப்பு

[கொச்சகக் கலிப்பா]

அலகில்லா மறைவிளங்கு மந்தணரா குதிவிளங்கும்
பலகலையாந் தொகைவிளங்கும் பாவலர்தம் பாவிளங்கும்
மலர்குலாந் திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கும்
உலகெலா மொளிவிளங்கு முழவருழு முழவாலே.

(ப-ரை) உழவர் - உழுதொழிலைச் செய்யுங் குடிகள், உழும் - உழுகின்ற, உழவாலே-உழவுத்தொழிலினாலே, (உலகத்தில்) அலகு-இல்லா - அளவிட முடியாத, மறை-வேதபாராயணங்கள், விளங்கும் எங்குந் தோன்றும்; அந்தணர் - வேதியரால் செய்யப்படும், ஆகுதி - ஓமாக்கினியில் நெய் சொரிதல் (அதாவது வேள்வி செய்தல்), விளங்

கும்-எவ்விடத்தும் தோன்றும்; பல கலையாம் - பல நூற்களாகிய, தொகை-கூட்டம், விளங்கும் - எங்கும் தோன்றும் (அதாவது: எங்கும் பல சாஸ்திரப் பயிற்சி ஏற்படும்); பாவலர்தம்-பாடுதலில் வல்லவர்களாகிய வித்வான்களாற் பாடப்படும், பா - கவிகள், விளங்கும்-எவ்விடத்தும் தோன்றும்; மலர் - தாமரைமலரிலே, குலாம் - சஞ்சரிக்கின்ற, திரு - இலக்குமி, விளங்கும் - எங்கும் பிரகாசிப்பாள், (அதாவது: எங்கும் செல்வமானது மிகுந்து விளங்கும்); மழை-மாரியானது, விளங்கும் - தவறாமல் தோன்றும்; மனு - நீதிகள், விளங்கும் - பிரகாசிக்கும்; உலகு எல்லாம் - உலகத்திலெல்லாம், ஒளி-புகழானது, விளங்கும் - பிரகாசிக்கும்.

(வி - ரை) உலகத்தில் - உழவர்கள் பயிர்த்தொழிலைக் குறைவின்றிச் செய்யப் பல விளைவுகளுமுண்டானால் மாத்திரந்தான் வேத பாராயணம், வேள்வி, பல சாஸ்திரப் பயிற்சி, பாவலர் கவிசெய்தல், செல்வம் பெருகல், மாத மும்மாரி பெய்தல், நீதி நிலைபெறல், நற்செய்கைகளாற் புகழுண்டாதல் முதலியவைகளெல்லா மேற்படும்.

"பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்."

என்னுந் திருக்குறளால் இவ் வுழவின் சிறப்புணரப்படும். (கஉ)

முத்தர்கள் எத்தொழிலைச் செய்தாலும் அவர்களுடைய மனம் பிர்மத்தினிடமே பற்றிநிற்குமெனல்

[நேரிசை வெண்பா]

எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாக்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

(ப-ரை) தாதி - (குளத்திலிருந்து தண்ணீர் மொண்டு தண்ணீர்க் குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு வரும்) அடிமைப் பெண்ணானவள், வித்தகமா - அதிசயமாக, காதி - (குடத்திற் பற்றியிருந்த கைகளை அதினின்றும்) துண்டு படுத்தி (அதாவது: கைகளை நீக்கி), விளையாடி-பல விளையாட்டுக்களைச் செய்து, இரு கை வீசி - இரண்டு கரங்களையும் வீசிக்கொண்டு, வந்தாலும் - வழியில் நடந்துவந்தாலும், மனம்-அவளுடைய உள்ளமானது, நீர்க்குடத்தே-தலையிலிருக்கும் தண்ணீர்க்குடத்தினிடமாகவே பற்றிநிற்கும் (அதாவது, குடம் தவறிவிடாமல் அதனைப் பாதுகாக்கும் விஷயத்திலேயே ஞாபகமாயிருக்கும்; (அதுபோல) முத்தர்-முத்தியில் விருப்பமுள்ளவர்கள், எத்தொழிலை - எந்தச் செய்கையை, செய்தாலும் - புரிந்தாலும், ஏது அவத்தை பட்டாலும்-எந்த விதமான வேதனையை யடைந்தபோதிலும், மனம்-அவர்களுடைய உள்ளமானது, மோனத்தே-மௌன நிலையாகிய சுத்த பிரமத்தினிடத்திலேயே, இருக்கும் (அதனைவிட் டகலக்கூடாதென்னும் எண்ணத்துடன்) பற்றியிருக்கும்.

(வி-ரை) தலையில் நீர்க்குடத்தை வைத்துச் செல்லுந் தாதியானவள் அக் குடத்தைக் கைகளாற் பற்றுமல் அக் கைகளை வீசி விளையாடி நடந்து சென்றாலும் அவளுடைய மனமானது, 'எங்கே நீர்க்குடம் தவறி விழுந்துவிடப் போகின்றதோ?' என்று அதன் பேரிலேயே ஞாபகமாயிருக்கும்; அதுபோல், முத்தர்கள் எத்தொழிலைச் செய்தாலும் அவர்களுடைய மனமாத்திரம், 'நமக்குப் பிரமத்தையன்றி முக்கியமானது வேறொன்று மின்று,' என்று அதனிடமாகவே பற்றி நிற்கும். நாம் என்ன தொழிலைச் செய்துகொண்டிருந்தாலும் மனத்தை மாத்திரம் நிலையான வஸ்துவில் செலுத்தினுல் சுகத்தை யடையலா மென்பதை இச் செய்யுட் கருத்து நன்கு விளக்கும். காதுதல் - கூறுபடுத்தல், அல்லது வேறுக்கல். காதி என்பது கையைக் குடத்தினின்றும் வேருகப் பிரித்தலை யுணர்த்திற்று. 'நீர்க்

குடத்தே' என்பதற்குப் பின் 'பற்றிநிற்கும்' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. (கூச)

## பெரியோர்கள் எத்தொழிலைச் செய்தாலும் மனத்தை மாத்திரம் கடவுளிடத்திலேயே செலுத்திக் கொண்டிருப்ப ரென்பது.

[நேரிசை வெண்பா]

சோரமனை யாட்டிமிகச் சோரபிரான் மேன்மனதாச்
சேரத் தொழில்செய்யுந் திட்டம்போல்—பேர்பெரியர்
அத்தனடி மேன்மனத்தை யாறுது வைத்துகந்தே
எத்தொழிலுஞ் செய்வ ரிசைந்து.

(ப - ரை) சோரம்-(தன்னுடைய நாயகனை விட்டு அன்னியனிடத்துக் கருத்தைச் செலுத்தும்) கள்ளத்தன்மை பொருந்திய, மனையாட்டி - ஒருவனுடைய மனைவி, (வேறு பல வேலைகளைச் செய்துகொண்டிருந்தாலும்) சோரபிரான் மேல் - தன்னுடைய கள்ளப்புருஷன்மீதே, சேர - அவனைச் சேருதற்கு, மிக மனதா - மிகுதியாக மனஞ் செல்ல, தொழில் செய்யும் - அவ் வேலைகளைச் செய்யும், திட்டம்போல் - திறம்போல; பேர் பெரியர் - மிகவும் பெரியோராகிய ஞானிகள், அத்தன் - கடவுளுடைய, அடிமேல்- பாதத்தின்மீது, மனத்தை-உள்ளத்தை, ஆறுது-நீக்காமல், வைத்து- நிறுத்தி, உகந்தே - சந்தோஷித்துக்கொண்டே, எத்தொழிலும் - எந்தக் காரியத்தையும், இசைந்து - பொருந்தி, செய்வர்-புரிவார்கள்.

(வி - ரை) சோரநாயகி தன்னுடைய சோரநாயகன்மீதே மனத்தைச் செலுத்திக்கொண்டு எந்தக் காரியத்தையுஞ் செய்வள்; அதேபோல, ஞானிகள் பகவனடியில் மனத்தைச் செலுத்திக்கொண்டே எந்தக் காரியத்தையுஞ் செய்வர். அவர்கள் பல காரியங்களைச் செய்யினும் அவர்களுடைய மனமானது அக் காரியங்களிற் செல்

லாமல் கடவுளி னடியிலேயே சென்றிருக்கும். பேர் பெரியர் - ஒரு பொருட் பன்மொழி; இதனை மீயிசைச் சொல்லென்றுங் கூறுப.()

## வியபிசாரியின் செய்கை பூனையின் செய்கைக் கோப்பா மென்பது

[கலி விருத்தம்]

ஒருவரு மறிகிலா ரெனவோ ரொண்ணுதல்
கரவினிற் குமரரைக் கலத்தல் பூசைதன்
இருவிழி மூடிமற் றெவர்கள் பார்வையும்
தெரிகிலா தெனப்பயன் றிருட லொக்குமே.

(ப - ரை) ஓர் ஒண்ணுதல்-ஒரு வியபிசாரமுள்ள பெண்ணானவள், (தன்னுடைய தகாச் செய்கையை) ஒருவரும்-(உலகத்தில்) எவரும், அறிகிலார் என - தெரிந்துகொள்ளமாட்டாரென்று கருதி, கரவினில் - சோரத்தன்மையாலே, குமரரை - பல வாலிபரை, கலத்தல் - இரகசியமாகக் கூடுதல், (எதற் கொப்பாமெனில்) பூசை - பூனையானது, தன் இரு விழி - தன்னுடைய இரு கண்களையும், மூடி - மூடிக்கொண்டு, (தனக் கிருட்டாயிருக்கவே, இதைப்போலவே உலகமெல்லாம் இருள் சூழ்ந்திருக்கு மாகையால்) எவர்கள் பார்வையும் - எவருடைய கண்ணும், தெரிகிலாது - தெரியமாட்டாது; (ஆதலால், நம்முடைய திருட்டும் வெளிப்படாது) என - என்று நினைத்து, பயன் - (அடுப்படியிலுள்ள) பாலை, திருடல் ஒக்கும் - திருடுவதை நிகர்க்கும்.

(வி - ரை) பெண்கள் எவ்வளவு இரகசியமாக வியபிசாரஞ் செய்தபோதிலும் அஃதெப்படியும் வெளிப்படாமலிராது. இதனையறியாத மூடப்பெண்கள், 'தாம் இரகசியமாக இத்தொழிலைச் செய்வதால் இஃதொருவருக்கும் வெளிப்படமாட்டாது,' என்று கருதித்

தங்களிஷ்டம்போல் வியபிசாரத் தொழிலை நடத்துவர். இது, பூனை தன் கண்ணை மூடிக்கொண்டு தனக்கிருட்டாயிருப்பதை முன்னிட்டு 'நம்முடைய செய்கையை ஒருவரு மறியார்,' என்று கருதிப் பாலைத் திருடுவதை நிகர்க்கும். 'ஓர் ஒண்ணுதல்' என்பது விகாரத்தால், 'ஒரொண்ணுதல்' எனக் குறுகி வந்தது. ஒண்ணுதல் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. மற்று - அசை. (கசு)

## புருஷன் வார்த்தை கேளாத மனைவியுடன் அவன் கூடி வாழுதல் துன்பமெனல்

[கலி விருத்தம்]

தன்னுரை கொளாதமனை வாழ்க்கையது தன்னின்
வெந்நிரயம் வீழுவகை யேவிழுமி தம்மா
அன்னரொடு மேவியம ராடவர் தமக்குப்
பின்னுமொரு கூற்றுமுள தோபிணியு முண்டோ?

(ப-ரை) தன் உரை கொள்ளாத - (உலகத்தில் ஒரு மனிதனுக்குத்) தன்னுடைய வார்த்தையைக் கேட்டு நடவாத, மனை - இல்லாளுடனே, வாழ்க்கையது தன்னின்-(சேர்ந்து வாழும்) வாழ்க்கையைப் பார்க்கிலும், வெம் - கொடிதாகிய, நிரயம் - நரகத்தில், வீழும் வகையே - வீழ்ந்து வருந்தும் முறைமையே, விழுமிது-சிறப்பினையுடையதாம்; (பின்னும்) அன்னரொடு - அத்தகைய பெண்களோடு, மேவி - விரும்பி, அமர் - பொருந்தி வாழ்கின்ற, ஆடவர் தமக்கு - புருஷர்களுக்கு, பின்னும் ஒரு - (இவர்களை யன்றி) வேறுமொரு, கூற்றும் - எமனும், உண்டோ-உளதோ? (இல்லை); பின்னும் ஒரு - வேறுமொரு, பிணியும் உண்டோ - நோயுமுளதோ? (இல்லை).

(வி-ரை) ஒருவன் தன்னுடைய வார்த்தைக் கடங்காத மனைவியுடன் கூடி வாழ்தல் நரகவாதனையினுங் கொடியதாதலால் அவ்வாழ்வைக்காட்டினும் நரகத்தில் வீழ்வது நன்றாம். இத்தகைய பெண்க

ளோடு கூடி வாழும் ஆடவர்க்கு இப் பெண்கள், கூற்றைப்போலவும் நோயைப்போலவும் வேதனை செய்யக்கூடியவராதலின் இவர்களே எமனும் பிணியுமாவர். 'வெம் நிரயம்' என்பது வெம் என்பதனீற்று மகரங் கெட்டு வருமொழிமுதல் நகர மிக்கு 'வெந்நிரயம்' என வந்தது. (கூஎ)

## சந்ததியற்ற இல்வாழ்க்கை பயனற்றதென்பது

[கலி விருத்தம்]

உந்து நீர்க்கட லுடுத்தபார் முழுவது மொருங்கே
வந்து தாடொழு மரசியல் வளமெலாம் பெறினும்
இந்தி ராதிபர் பெரும்பதத் திருக்கையெய் திடினும்
மைந்த ரின்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே.

(ப - ரை) (மனிதர்) உந்து - (அலைகளோடு கரையில்) எறிமோதுகின்ற, நீர் - ஜலம் நிறைந்த, கடல் - சமுத்திரத்தை, உடுத்த-ஆடையாக வுடுத்திய, பார் முழுவதும் - பூமி யெல்லாம் (அதாவது, பூமியிலுள்ள மனிதர்களெல்லோரும்), ஒருங்கே வந்து - ஒருமிக்கக் கூடி வந்து, தாள் தொழும் - பாதங்களை வணங்கக்கூடிய (சிறப்பு வாய்ந்த), அரசியல் - அரசாட்சி முறைமையின், வளம் எல்லாம் - சிறப்புக்களை யெல்லாம், பெறினும் - அடைந்தாலும், இந்திராதியர் - இந்திரன் முதலியவர்களுடைய, பெரும் பதத்து-பெரிய பதவியில், இருக்கை - சேர்ந்திருத்தலை, எய்திடினும் - பெற்றாலும், மைந்தர் இன்றி - புத்திர ரில்லாமல், வாழ்வது-இல்வாழ்க்கை செய்தலானது, வாழ்வு அன்று - சிறந்த வாழ்க்கை யாகாது.

(வி - ரை) மனிதர் எத்தகைய சிறப்புக்களுடன் உலகத்தில் வாழினும் அவருக்குப் புத்திரபாக்கிய மில்லாவிடின் அவ் வாழ்க்கை பயனற்றதாம். இங்ஙனம் புத்திரரில்லாத இல்வாழ்க்கை பயனற்றதா மென்பதை,

"கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்த
ரில்லா தவர்க்கு மனைவாழ்வி னினிமை யென்றும்."

என்னும் பாரதச் செய்யுளானு முணர்க. 'வாழ்வு மற்று' என்பதில் மற்று - அசை. (கூஅ)

## பொருளாசை பல தீமைகளைப் புரியு மென்பது

[கலித்துறை]

எவரை யும்மனந் திரிப்பது மீன்றவர் தமக்குத்
தவறி ழைத்திடப் புரிவதுந் தையலார் தங்கள்
கவறில் கற்பினை யொழிப்பதுங் கற்குநூற் கலைகள்
அவையெ லாங்கெடக் கெடுப்பதும் பொருள்விருப் பன்றே.

(ப - ரை) எவரையும் - எப்பேர்ப்பட்டவர்களையும், மனம் திரிப்பதும் - மனத்தை இயற்கைக்கு விரோதமாக மாறுபடச் செய்வதும்; ஈன்றவர் தமக்கு-பெற்ற தாய் தந்தையர்க்கும், தவறு-தீமை, இழைத்திடப் புரிவதும்-புரியும்படி செய்வதும்; தையலார் தங்கள் - பெண்களுடைய, கவறில்-வருந்துதலில்லாத, கற்பினை-பதிவிரதா தர்மத்தை, ஒழிப்பதும் - நீக்குவதும்; கற்கும் - மனிதர் படிக்கின்ற, நூல் கலைகள் - சாஸ்திரக் கல்விகள், அவை யெல்லாம் - சபைகளி லெல்லாம், கெட - மாறுபட்டுக் கெடுதலை யடையும்படி, கெடுப்பதும் - அவற்றை நாசப்படுத்துவதும், பொருள் விருப்பு - மனத்தி லேற்படும் பொருளாசையேயாம்.

(வி - ரை) பொருளாசையானது ஏற்பட்டுவிடும் பக்ஷத்தில் எத்தகையருடைய மனத்தின் நல்ல இயல்பையுங் கெடுத்து அதனை வேறுபடுத்திக் கெட்ட வழிகளிற் பிரவேசிக்கச் செய்யும்; அதனால்

அவர் செய்யத்தகாத காரியங்களை யெல்லாம் செய்வர். 'தாய் தந்தையரை உபசரிப்பினும் பொருள் விரயமாகுமே' என்று கைப்பொருளைப் பத்திரப்படுத்திக்கொண்டு அவர்களுக்கு உணவு முதலியன சரிவரக் கொடாமல் தீங்குசெய்வர். பொருளாசையுள்ள பெண்களிடம் கற்பு நிலைநில்லாது; எவர் பணங் கொடுப்பினும் அவர்க்கிணங்கித் தங்கள் கற்பினைக் கெடுத்துக்கொள்வர். இன்னும் பொன்னாசையுள்ளவர் எவ்வளவு கல்வி கற்றிருந்தபோதிலும் எவரேனும் பணங்கொடுத்துச் சபைகளில் நீதிக்கு விரோதமான விஷயங்களைப் பேசச் சொல்லின் அங்ஙனமே பேசிப் பலரின் நிந்தனைக்குள்ளாகித் தங்கள் கல்வியின் உயர்வைக் கெடுத்துக்கொள்வர். பெரிய கல்விமான்களெனப் பெயரெடுத்தவர்களும் இங்ஙனம் பொருளாசையால் கெட்ட வழிகளிற் பிரவேசித்து அறிவுடையோர் வெறுக்கத் திரிவதை இன்றும் காணலாம். எவரையும், மனத்தை என்னும் இரண்டு செயப்படுபொருள்களும் ஈருருபேற்று, பொருள் விருப்பு என்னும் எழுவாயுடன் சேர்ந்து ஒரு தன்மையாய் முடிந்தன. கவறு-கவற்சி; இது, வருந்துதல் எனப் பொருள்படும் தொழிற்பெயர்; கவல் - பகுதி; று - தொழிற்பெயர் விகுதி. (கக)

யோக்கியருக்குக் கேடுதி செய்தலும், உண்ணத் தகாதவிடத்தி லுண்ணுதலும், பொய் கலந்த சொற் கூறுதலும் எப்பொழுதும் கூடாவென்பது

[நேரிசை வெண்பா]

தான் கெடினுந் தக்கார்கே டெண்ணற்க! தன்னுடம்பின்
ஊன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க!—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரைப்பற்க!
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

(ப-ரை) (உலகத்தில் ஒரு மனிதன் பிறருக்கு உதவி செய்தல் முதலியவற்றாலே பொருள் செலவாகத்) தான் கெடினும் - தான்

கெட்டாலும், (அங்ஙனம் பிறர்க்குதவி செய்தல் முதலிய நற்குணங்களைக் கைவிட்டுப் பிறர்க்குத் தீங்கு செய்தல் முதலிய கெட்ட வழிகளாற் பொருள் தேடித் தான் சுகப்படுவதற்காக) தக்கார் - அறிஞராகிய யோக்கியருக்கு, கேடு எண்ணற்க - தீங்கு செய்ய நினையாதிருக்கக்கடவன்!, தன் - தன்னுடைய, உடம்பின்-தேகத்திலுள்ள, ஊன் - தசையானது, கெடினும் - (நல்லுணவு முதலியன அகப்படாமையினாலே மெலிந்து) கெட்டாலும், உண்ணார்-உணவுண்ணத் தகாதவர்களுடைய, கைத்து - கையிலிருந்து வரும் உணவை, உண்ணற்க - உட்கொள்ளாதிருக்கக்கடவன்!, வான் - ஆகாயத்தால், சூழ்ந்த - மூடப்பெற்ற, வையகம் எல்லாம்-இப் பூமி முழுவதையும், பெறினும் - (பொய் கூறுவதால்) அடைவதாயிருந்தாலும், இடை - நடுவில், பொய்யோடு - பொய்யுடனே, மிடைந்த-சேர்ந்த, சொல் - வார்த்தையை, உரையற்க - சொல்லாதிருக்கக்கடவன்!

(வி - ரை) ஒருவன் தான் கெட்டுப்போவதா யிருந்தாலும் யோக்கியருக்கு உதவியே செய்யவேண்டும்; அவருக்குத் தீங்கு செய்து பொருளைத் தேடுவதால் தனக்குச் சுகங் கிடைப்பதாயிருந்தாலும் அங்ஙனந் தீங்கு நினைக்கலாகாது. நல்லுண வகப்படாமையால் தேகம் மெலிந்தாலும் உண்ணத்தகாத விடத்தில் உணவுண்ணலாகாது. பொய் கூறுவதால் பூமி முழுவதையும் பெறுவதாயிருந்தாலும் பொய்யுடனே கலந்த சொற்களைக் கூறலாகாது.

கைத்து-கையிலுள்ளது; கை - பகுதி, து - ஒன்றன்பாற் படர்க்கை விகுதி. இச் செய்யுள் நாலடியாரி லுள்ளது. (௧00)

விவேகசிந்தாமணி இரண்டாம் பாகம்
மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

---

[1000 Copies.